பிருகண்டர் வேதவியாசருக்குச்சொல்விருத்தம்.

உள்ளமுங்கலங்கவேதா னுரைத்திடும் வியாசரோகேள் ... ...*
பின்னைதானில்லாவிட்டாற் பிள்ளையுண்டாவதற்கு... ... ...*
கள்ளமில்லாமலெந்தன் கருத்தினுக்கறியத்தானே..........*
மென்னனவுபாயமொன்று விளம்பிடவேணுமையா.........*

வசனம்.

கேளும் வேதவியாசசே பிரம்மாமொழிக்குச்சரியாய் அத்தாட்சிநீர்சொன்னதுஞ்சரியே பூமியில்பிள்ளையில்லாதபேருக்குப்பிள்ளைவேண்டுமென்கிறதாய் ஆசையுமிருந்து பிள்ளையில்லாமலிருந்தால்அவர்களுக்குப் பிள்ளை யுண்டாகிறதற்கு வுபாயமுண்டா இல்லையா அதை விளங்கச்சொல்லவேண்டுமையா வேதவியாசரே,

வேதவியாசர் மிருகண்டருக்குச்சொல் விருத்தம்,

உபாயமுமென்னவேதமுறைதெரிமிருகண்டாகேள்.........*
தபோபலத்தாலேபிள்ளை தான்வரச்செய்யவேணும்.........*
சபாபதிதன்னைநோக்கித்தபதிலைகொண்டாலீசன்......... ...*
குபேரனைப்போலேபிள்ளைகொடுத்திரக்ஷிக்கின்றாரே ... ...*

வசனம்,

கேளுமிருகண்டரே பிள்ளையில்லாதபேர் அடர்ந்தவனத்திலேசென்று பரமசிவத்தைநோக்கி ஏகமனதாக ஸ்திரீகளுடன்கூட தபத்தைச்செய்தால் புத்திரபாக்கியங்கொடுத்திரக்ஷிப்பார் மிருகண்டரே,

பிரம்மா சபையிலுள்ளயாவருக்குஞ்சொல் விருத்தம்.

இந்திரராஜனேநல்லெழில்வேதவியாசமாகேள்..............*
சுந்தரச்சபையில்வந்து இலங்குமற்றவரோகேளீர்....... ...*
மந்திரவேதசாஸ்திரமறிந்தது போதும்போதும்.........*
அந்தரங்கமதாய்வாழு மாசிரமம் நடந்திடீரே...... .......*

வசனம்.

கேளுந் தேவேந்திரமகாராஜனே வேதவியாசரே மற்றுமிருக்கப்பட்டதபசிகளே நீதிசாஸ்திரங்கள்கேட்டதுபோதும் தேசகாலமாச்சுது அவரவர்களாசிரமம்போய்வாருங்கள் சபையிலுள்ளவர்களே,

சபையோர்சொல்வசனம்.

அப்படியே போய்வருகிறோம் பிரம்மதேவரே.

## பொது-விருத்தம்.

மதிதிசைமுகவனூர்தன்மகாசபைதான்கலந்து............ *
பதிதனக்கெழுந்தானிந்திரன்பரிவுடனடந்தான்பின்பு......*
அதிதுரிதமதாய்வாழுமாசிர்மம்நடந்தாராயாரும்............*
சுதனிலாமிருகண்டையர்துயரமாய்ப்புலம்பலுற்றார்........*

## கட்டியக்காரன்சொல்-வசனம்,

அகோதெப்படியென்றால்-பிர்ம்மசபை கலந்து பிர்ம்மதேவன் அன்னமனைக்குச் சென்றார் தேவேந்திரமகாராஜன் அமராபுரி பட்டணத்திற்குநடந்தார் இப்பால்மிருகண்டமுனி புத்திரனில்லாத சோகத்தினால் விரலாபிக்கிற விதங்காண்க,

## மிருகண்டர்சொல்கொச்சகம்.

பிர்ம்மசபையடுத்ததற்குப்பிரியமுடன்வியாசர்சொன்ன......... ... ...*
கர்ம்மவிதிக்கென்னசெய்வேன்கயிலையனேயானுமென்ன.................*
துர்ம்மதிகள்செய்தேனோதுலையாதோசங்கரனே......................*
மர்ம்மம்வைததிருந்துமென்னைவஞ்சனைகள்செய்தீரோ... ............ ...*

## வசனம்,

ஹரகராகர்த்தனே பிர்ம்மசபையிலே வேதவியாசர்சொன்னமொழிக்குச்சரியாக யெனக்குப் புத்திரனில்லையே அதுதானோயெனக்குங் கதி நானென்ன துர்ப்புத்தி நினைந்தேனோ அல்லது வுமது செயலோ இனி சொர்க்கங்காணாத சடலமிருந்தென்னகர்த்தனே,

## மிருகண்டர்சொல்புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-கண்டா-மீசுரதாளம்.

கர்த்தனே நானென்னசெய்வே னத்திமாமுகனைப்பெற்ற ... *
மீஸ்வரா-மயேஸ்வரா... ... ... ... ... *
புத்திரனில்லாதவர்கள்மெத்தபாவியென்றுரைத்தார் ... ... *
ஆதியே-பரஞ்சோதியே... ... .... ... ...*
பிள்ளையில்லாதார்க்குச்சொர்க்க மில்லையென்றுவியாசர்சொன்னார் *
மீஸ்வரா - மயேஸ்வரா ... ... ... ... ...*
உள்ளமுங்கலங்கியுடல்துள்ளியேவிழுந்தேனையா ... ... *
ஆதியே-பரஞ்சோதியே... ... ... ... ... *

இருசெவியில்நாராசங்கள்சொருகினாப்போலுருகினேனே... ... *
யீஸ்வரா-மயேஸ்வரா... ... ... ... ... *
உரிமையானவுடலிருந்துமாவதினாலென்னபலன் ... ... ...*
ஆதியே-பரஞ்சோதியே... ... ... ... ... *
இச்சடலமிப்புவியில்வைத்திருந்துமாவதென்ன ... ... *
யீஸ்வரா-மயேஸ்வரா .. ... ... ... ... *
தக்ஷணமேவிட்டுவிட்டால் மெய்ச்சிடுமேலோகமெங்கும்... ... *
ஆதியே-பரஞ்சோதியே... .... ... ... *
நான்முகன்சபையிலென்னையேனலைக்கவிதிவிதித்தாய் ... ... *
ஈஸ்வரா- மயேஸ்வரா... ... ... ... ... *
மான்மழுவணிந்தோனே நீ தாங்கபடமாயிருந்தால் ... ... *
ஆதியே-பரஞ்சோதியே... ... ... ... ... *
பதியிருந்தும்நிதியிருந்தும் பவன்றாதுநாளையென்றார் ... *
யீஸ்வரா-மயேஸ்வரா ... ... ... ... *
கதிபிணைத்தந்திடுவதற்கோர் காதல்சுதன்வேணுமென்றார் ... *
ஆதியே-பரஞ்சோதியே... ... ... ... ... *
இந்தசெதிபதிந்திடாம விருந்திட்டோமேமலடராக ... ... *
யீஸ்வரா-மயேஸ்வரா... ... ... ... ...*
எத்தனையோலயாவதொன்றுமில்லையெல்லாமுன்செயலே ... *
ஆதியே-பரஞ்சோதியே... ... ---- ... ... *
இப்பவாகிலுஞ்சுதனையெப்படியாகிலுந்தருவாய்... ... *
ஈஸ்வரா-மபேஸ்வரா . ... ... ... ... *
தற்பராநீயேகெதியெனைப்பனேகக்ஷித்தருள்வாய்... ... *
ஆதியே-பரஞ்சோதியே... ... ... ... ...*

மிருகண்டர் - சிஷருக்குச்சொல்-விருத்தம்.

அன்னையும்பிதாவென்றென்னையடுத்தசிஷர்களேகேளீர்..................*
சொன்னசொற்கேட்டமாத்ரந் துயரமுமதிகமானால்............ ......*
என்னமாய்நடப்பதப்பா யிளப்புமேமிகவுமாச்சு.....................*
இத்தலந்தனிலிருந்துயிளைப்பாறிநடப்போம்வாரீர்............ .........*

வசனம்,

கேளுங்களப்பா சிஷர்களே அந்தபிர்ம்மசபையிலே வேதவியாசர் சொன்ன சொல்லைக்கேட்டு நெஞ்சங்கலங்கித் துயரமும் அதிகமாகியிளப்

புகொண்டு நடக்கப்போனால் நடைகொடுக்கவில்லை ஆதலால்இந்தச்சோலை நிழலில் சற்றுநேரமிருந்து யிளப்பாறி அதன்பின்பு நடபபோம்இருங்களப்பாசீஷர்களே,

சீஷர்கள்-மிருகண்டருக்குச்சொல்-வசனம்.

அப்படியேதேவரீர்சொற்பிரகாரம்இருக்கிறோஞ்சுவாமி;

பொது-விருத்தம்.

சதுர்முகன்சபைக்குவந்ததபசிமாமிருகண்டையர்............*
சுதனிலாதாற்றயங்கித்துயரமாய்வருஞ்சம்போது...... ...*
நதியறிந்துதவுஞானச்சதிராளேக்காணவேண்டி......... ...*
மதியுள்ளரிஷிகள்பத்தினிமார்களுமிதோவந்தாரே... ......*

கட்டியக்காரன் சொல்-வசனம்,

அகோதெப்படி யென்றால் பிர்ம்மசபைக்கு வந்தமிருகண்ட மகாமுனிசுதனில்லாத துயரத்தால் மிகவும்வாடி சோலையிலிருக்கும் போது அவருடைய பத்தினியான ஞானச்சதிராளேக்காணும்படியாகரிஷிபத்தினிகள் வருகிறவிதங்காண்க.

ரிஷிபத்தினிகள்-வருகிற-தரு-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்,

பல்லவி;

நிலைமையுடன் தவத்தைவலுமையுடன்புரியும்...... .......*
ரிஷிபத்தினிமார்கள்வந்தார்.............................*

அநுபல்லவி,

உலகிலுள்ளபெண்களுமோடிவந்தடிநாழ்.........*
ஒருமைபானமாதர்களருமையுடனே சூழ.........*
உத்தமியான போதர் - ரிஷி............... ......*
பத்தினிமார்கள் நீதர்..........................*
உன்னென்றுஇன்பமிந்தஅண்டமதிக்கப்பெற்றோர்
ஓதுதற்கொருஆதிமெய்ப்பொரு............... *
ஞானத்துதித்தேதும்விட்டவர்................*
ஓருமையாகமனமுறுதியாகதினம்................*
கருதிவைத்தசிவனுறுதிபெற்றாருகும் ...(நிலைமை)

மூதற்பத்தினிமற்றபத்தினிகளுக்குச்சொல்கொச்சகம்.

என்னுயிருக்குயிரானயிருடியர்தன்றேவியரே...... ......*
இத்தகாசிரமம்விட்டுயெல்லவருந்தாணடத்து...... ......*
வன்னமலரிருக்கும்வனந்தேடிமலரெடுத்து...... .........*
துன்னிடநாம்கொண்டையினிற்சூடிவருவோம்வாரீர் ......*

வசனம்,

கேளுங்களம்மா ரிஷிபத்தினிமார்களே- நாமெல்லொரும் ஆசிரமம் விட்டு ஒன்றாய்க்கூடிக்கொண்டு கேளிவிலாசமாய் வனங்கள்தோறும்போய் அவ்விடத்திலிருக்கப்பட்ட நந்தவனங்களிற்புகுந்து நல்லசாதியான மலரெடுத்து கொண்டையில் முடித்துக்கொண்டு மகா வேடிக்கையாய்ப் போகையிலும் வருகையிலும் பந்தெடுத்துவிளையாடிவருவோம் வாருங்களடியம்மா,

மற்றபத்தினிகள் - மூதற்பத்தினிக்குச்சொல்-கவி.

மெல்லியேநீயும் வினவியவாறு...... ...... .........*
மல்லிகைமுல்லைநல் மலர்சூடிவருவோம்..............*

வசனம்.

அப்படியேஉன்சொற்பிரகாரம்வருகிறோம் போவோம் வாருமம்மா

பத்தினிகள்சொல்- தரு-இ-ம்-நாதநாமக்கிரியை- மிசுரதாளம்,

பல்லவி,

பத்தினிமாதே-நந்தவனம்-பாரடியிதே...... ..*

அநுபல்லவி.

சுத்திலும்வரலர்சோதித்தமலரெல்லாம்...... ...... .........*
வைத்திடாமற்பறித்துமடியிலேகட்டுங்கள்...... ...(பத்தினி)

(சரணங்கள்,)

பெண்ணேயிக்குறிப்பார்-செந்தாமரை...........................*
பொன்மேனைதிற்குதுபார்...........................*
கண்ணே நீயுன்னிடகைதொட்டுபறிக்காதே...................*
இன்னுநாளதின்மேலேயிச்சைகொண்டேனடி......(பெண்)
சுந்தர மாதே - சந்தனச்சோலை...........................*
தோன்றுதிதே...........................*

வந்திருயெதிராகவருகுதபந்திதோ.................. ......*
மூந்தினபிறகுநீமோசஞ்செய்யாதடி...... .......... (சுந்தர)
மங்கையேயோடி - பந்தையெடுத்து............ ... ......*
இங்கேநீவாடி......... .......... ........ ......*
சங்கையில்லாமலே சாலையிலாடுவோம்...................*
பங்கமாய்த்தோர்த்தோரைப் பத்துகுட்டுகுட்டுவோம் (மங்)

ரிஷிபத்தினிகள்சொல் விருத்தம்,

வேலைப்போல்விழியைவாய்த்த மென்சொடிமாதேகேள் நன்...........*
நூலைப்போலிடைகொள் நல்ல நோன்புசெய்மாதேகேளீர்... ..........*
தாலமாய்நாமெல்லாம்பந் தாடினததுவும்போதும்... ...... .........*
கோலமாய்ப்பகடைகையிற் கொண்டுசற்றுடுவோமே............... ...*

வசனம்

கேளுங்களம்மா ரிஷிபத்தினிகளே நாம்பந்தாடினதுபோதும் இப்போது சற்றுநேரம் நாம் உட்கார்ந்து பகடையாடுவோம் வாருங்களம்மமார்களே.

மற்றரிஷிபத்தினிகள் சொல்வசனம்,

ஆனால் அப்படியேஆடுவோம்வாரபம்மா,

ரிஷிபத்தினிகள்-பகடையாடுகிற-தரு. இ-ம்-கௌளிபந்து-ரூபகதாளம்;

முதல்ரிஷிபத்தினிசொல்லல்.

சந்திரகாந்திமிகுந்த . சுந்தரமாதேநான்... ... ... .... *
மூந்திவிநாயகனைச் - சிந்தையிற்றுதித்தேன்.............. ...*
தந்திரப்பாச்சிகையெடுத் - தெந்தன்கையினுவிதோ ... ...*
தொந்தமாய்விடுத்தேனிந்த வித்தையைப்பாராய்.............*

௨-வது-ரிஷிபத்தினிசொல்லல்,

வித்தையைப்பாராய்நீயென்று சொன்ன அன்னமேயென் *
மந்திரத்திலகப்பட்ட - யெந்தனல்விதாணியே........ ...*
உந்தனைக்கெலித்துவாவென் - நிந்தவேளையில்நான்.........*
பந்தமாய்விடுத்துவிட்ட - அந்தத்தைப்பாராய்...........*

௩-வது-ரிஷிபத்தினிசொல்லல்,

ஒன்பதுபத்திப்பகடை ஒன்றாய்க்கூடவிழநான்...... ......*
தென்புடன்பாச்சிகையெடுத்தேவிட்டேனிதோ...... ...*

உ-வது ரிஷிபத்தினிசொல்லல்,

அன்புடன்பன்னிரண்டும் அழகாய்த்தேடிவிழநான்.........*
இன்னமும்பாச்சிகையைத் தொட்டேவிட்டேனிதோ.......*

முதலாவது- ரிஷிபத்தினிசொல்லல்.

குங்குமக்கறுப்புசோடு கொண்டுகட்டினேனிந்த... ... ...*
சிங்காரம்பாரடியம்மா தெய்வீகமாதே... ............*

உ-வது-ரிஷிபத்தினிசொல்லல்,

குங்கமஞ்சளும்பச்சையுஞ் சோடுகட்டினேனடி............*
சங்கையில்லாமலேபாரடிதையலேமாதே..... ....... ......*

முதலாவது ரிஷிபத்தினிசொல்லல்,

எட்டிமதுக்கால்துக்கையாலேயெண்ணி தான்மெள்ளவுன்...*
இஷ்டமஞ்சள்பச்சைசோடெடுத்தெறிந்தேனே...... ......*

உ-வது- ரிஷிபத்தினிசொல்லல்,

வெட்டுப்பகையுள்ள துகைமெள்ளவேபோட்டுநீ... .. ...*
கட்டுங்குங்குமகறுப்பைக்கண்டெறிந்தேனே ............*

முதல்ரிஷிபத்தினி சொல்லல்,

கட்டினசோட்டைக்கலைத்த- கன்னியரோநானிதோ...... ...*
பொட்டெனக்கெலித்துனையிப்போதுவந்தேனே.. ...... *

உ-வது. ரிஷிபத்தினி சொல்லல்,

சட்டமாயுனைத்திடுஞ்சமர்த்தையறியயென்... ... ... *
இஷ்டதேவதையாலுன்னையிதோகெலித்தேனே... ... ...*

முதல்ரிஷிபத்தினிசொல் கொச்சகம்-

வந்துவெகுநேரமாச்சுதடியம்மைமாரே ... ... ... ... *
எந்தன்கணவனுக்குயென்னென்றுசொல்லுவனான் .. ... *
மூத்தினவர்கோபிப்பார்மொய்குழலாளேநாமும் ... ... *
இந்தவனம்விட்டியிருப்பிடம்போய்ச்சேர்வோமே...............*

வசனம்,

அடியம்மா ரிஷிபத்தினி மார்களே நாம்வந்துவெகுநேர மாச்சுது ஜனதுபத்தாவாகிய கணவன் கோபிப்பார் இந்த வனம்விட்டு ஆசிரமம் போவோம் வாருங்களடியம்மமார்களே,

மற்றரிஷிபத்தினிகள்-முதல்ரிஷிபத்தினிக்குச்சொல்
கொச்சகம்.

எத்தனைநாளாச்சுதடி யிப்படியுல்லாசமதாய்................ *
பத்துபேருங்கூடி பரிவுடனேவந்ததுவும்....... ... ......*
தத்தைஞானச்சதிராள் தானிருக்குமிடமிதுவே...... ......*
சத்தவலைப்போய்ப்பார்த்து தாம்நடப்போம்வாருமம்மா...*

வசனம்,

கேளம்மாஷிபத்தினியே இப்படி நாமெல்லோரும்ஒன்றாய்க்கூடிவந்துவெகுநாளாச்சுது அதோமிருகண்டமகாமுனியினிட தேவியான ஞானச்சதிராளுடைய ஆசிர்மமாகையால் நாமெல்லோரும்போய் ஞானச்சதிராளைக்கண்டுபேசிபிறகுநமது ஆசிர்மம்போய்ச்சேருவோம்வாராயம்மா,

முதல்ரிஷிபத்தினி சொல்வசனம்,

ஆனால் அப்படியே செய்வோமம்மா,

ரிஷிபத்தினிகள்-ஞானச்சதிராளுக்குச்சொல்கவி,

ஆரம்மாசெயமிருகண் - டையர்தன்தேவியாரே...........*
ஆரம்மாஆசிர்மத்தி - லருள்ஞானச்சதிரேவாராய்... ......*

ஞானச்சதிராள்- ரிஷிபத்தினிகளுக்குச்சொல்கவி,

சதிரேவாவென்றெந்தன் - றலைவாயத்படியில்நின்று ......*
மதியாலழைப்பதாரோ - வருவீர்வனவிற்றனே...... ... *

ரிஷிபத்தினிகள்-ஞானச்சதிராளுக்குச்சொல் கவி,

வனவினிலழைத்தமாதே - வந்துவுன்முகத்தைக்கண்டோம்*
இளமயிலானேநீதா - னெங்களையதிவாயோடி...... ......*

ஞானச்சதிராள் ரிஷிபத்தினிகளுக்குச்சொல் விருத்தம்,

ஆகமும்பரிவுமுள்ள அரிவையரோகேளீர்கள்..................*
நாகமங்கையரோசேடன் ரத்தினமணிவிளக்கோ... ... ...*
தேகமுமகிழ்ந்துயென்னைத்தேடியேவரப்பெற்றேனே!... *
வாகைசேர்நீங்கள்வந்த வாறதுவுரைசெப்வீரோ...............*

வசனம்,

வாருங்களம்மாநீங்களார்நாகமங்கையரோ முனிராதருடையதேவிகளோ அல்லது ஆதிசேடனுடையசிரசில் விளங்கப்பட்டரத்தினமோ நீங்க

ள்ளன்னிடத்திற்கு வந்தகாரியத்தைச்சொல்லுங்களம்மா,

ரிஷிபத்தினிகள்-ஞானச்சதிராளுக்குச்சொல்விருத்தம்.

மாமுனிதேவியானமயிலேமெய்ஞ்ஞானப்பெண்ணே.......*
நாமுமோரிஷிகள்பத்னி நங்கையேயுன்னைப்பார்த்து... ...*
க்ஷேமமாய்ப்போவோமென்றுசிறந்தவாசிர்மந்தன்னில்...*
நேமகமாகவந்தோம் நிலையெங்கள்வாறுதானே.............*

வசனம்-

கேளாயம்மா ஞானச்சதிரே நாங்களோரிஷிபத்தினிமார்கள்இன்றை யத்தினம்வேடிக்கையாய்ப்புறப்பட்டோம் புறப்பட்டவிடத்தில் உன்னை யுங்கண்டு பேசிப்போகலாமென்று உனதுஆசிர்மந்தேடிவந்தோம் இது தான்எங்கள்வரலாறு அம்மா,

ஞானச்சதிரான்-ரிஷிபத்தினிகளுக்குச்சொல்விருத்தம்,

வந்ததேபாக்கியம்பெற்றேன்மாமுனிதேவிமாரே...... ...*
சந்தோஷமாகயித்ததனழைத்தவாசிர்மத்தன்னில் ...... ...*
எந்தனோடினிதாய்நீங்களியாவருங்கூடிக்கொண்டு... ......*
பந்தாடவேணுமம்மா பரிவுடன்வருகுவீரே.......... ......*

வசனம்,

அம்மா ரிஷிபத்தினிமார்களே- நீங்கள் ரிஷிபத்தினிமார்களென்று என்னுடைய ஆசிர்மந்தேடிவந்தபோதேநான்மூன்செய்தபாக்கியந்தான் இப்பவும் ஆசிர்மத்தில் நீங்கள்சந்தோஷமாய் என்னுடனேகூடிசற்றுநே ரம்பந்துவிளையாடவேணும் வாருங்களம்மாரிஷிபத்தினிமார்களே,

ரிஷிபத்தினிகள்-ஞானச்சதிராளுக்குச்சொல்விருத்தம்,

மண்டலமெங்குநல்லமாமுனியென்றநற்பேர்..............*
கொண்டவேதத்தில்ஞானக்குச்சகபாலனுமிரு........ ......*
கண்டர்தன்றேவியாரே கதித்தசெங்காத்திலேதான்!.........*
அண்டொணுப்பந்தையேந்தி யாடுவோம்வருகுவாயே......*

வசனம்,

கேளுமம்மாஞானச்சதிரே அப்படியேசகைக்குஅண்டாதபந்தமனே பெத்துஆடுவோம் வாருமம்மா,

ரிஷிபத்தினிகளும்- ஞானச்சதிராளும்-பந்தாடுகிற
தரு-இ-ம்-புன்னாகவராளி-அடதாளம்,
ஞானச்சதிராள்-சொல்லல்,

பந்தெடுத்தேனிதோபாரடி-இதைப்... ... ... ... *
பார்த்துப்பிடித்துநீசேரடி... ... ... ... ... ... *
அந்தரந்தன்னிலேசுழன்றுவருகுது... ... ... ... *
தந்திரத்தாலதைமுந்திப்பிடியடி... ... ... (பந்தெடுத்)

ரிஷிபத்தினிகள்சொல்லல்,

இதோஅதோபந்தென்றுருட்டுறாய்-நீ ... ... ... *
யென்னடியென்னமெத்தமிரட்டுறாய் ... ... ... *
பதித்தக்கொண்டையவிழ்ந்துபாரினிற்புரண்டாலும் ... *
குதித்ததைப்பிடிப்பேனேகோதையரேயடி... ......(இதோ)

ஞானச்சதிராள் சொல்லல்

வேகமாய்வருகுது பந்தடி-அதில்... ... ... *
முன்னேயுன்பந்தைநீ மூந்தடி... ... ... *
மோகத்தினாற்பந்தைமுடுக்காயெறிந்தேனே... ... *
முன்பின்பாராதேநீ - யென்முன்னேநில்லடி ... (வேக)

ரிஷிபத்தினிகள்சொல்லல்

அப்படிதான்மோசம்போவேனோ - போனால்... ... *
அருந்தவரிஷிபத்னியாவேனோ... ... ... *
எப்படியாகிலுங்கெலிப்போமேபல்லாமல் ... ...*
ஏளிதத்திற்கிடங்-கோலிவைக்கிறதில்லை... (அப்படி)

ஞானச்சதிராள்-ரிஷிபத்தினிகளுக்குச்சொல்-கொச்சகம்,

நாகரிகமுள்ளதிருநங்கையரோ நீங்களெல்லாம்... ......*
வேகமதாயென்னுடனேமேல்விழுந்துவிளையாடி ...*
ஆகமெத்தமெல்லியரோ அலுத்துக்காதடைத்தீரோ... ...*
தாகவிடாய்தீருங்கள்சத்தரிஷிதேவிகளே....... ... ...*

வசனம்,

வாருங்களம்மா ரிஷிபத்தினிமார்களே - நீங்களெல்லோரும் என்னுட
னேகூட இந்நேரம் பந்துவிளையாடி மெத்தவுங்காதுவிடாய் கொண்டிரு

ந்திர்கள் ஆகையால் நீங்களெல்லோரும் நமது ஆசிரமத்தில் தாகபானஞ் செய்யுங்களம்மா ரிஷிபத்தினிமார்களே.

ரிஷிபத்தினிகள்-ஞானச்சதிராளுக்குச்சொல் - கொச்சகம்.

மெள்ளவந்துரைத்தபெண்ணே விளம்புவோங்கேளுமுத்தன் ...... *
வள்ளல்தானெங்கேயடி மைந்தனுண்டோசொல்லடிநீ ...... *
பிள்ளையில்லாரண்மனையில் பெண்ணே தாகமுமருந்தோம் ...... *
உள்ளதிதுமாமயிலே யுண்மைதனைச்சொல்வாயே ...... *

வசனம்.

கேளுமம்மா ஞானச்சதிரே நாங்கள் உன்வீட்டில் தாகபானஞ் செய்வது யிருக்கட்டும் உன்பத்தாவான மிருகண்டரிஷியெங்கே உங்களுக்குப் புத்திர சந்தானமிருக்குதா நாங்கள் மைந்தனில்லாதவீட்டில் தாகபானஞ் செய்கிறதில்லை நாங்கள் கேட்ட வார்த்தைக்கு வுண்மை யாகச் சொல்லுவாயம்மா,

ஞானச்சதிராள்-ரிஷிபத்தினிகளுக்குச்சொல்-கொச்சகம்

கள்ளமதுசொல்வதில்லைக் கதித்தமுனிதேவியரே ...... *
வள்ளல்நைமிசாரண்ய மாதவத்தோரிடஞ்சென்றார் ...... *
தெள்ளியதோர்பிள்ளையில்லை சிவன்செயலோ நானறியேன் ...... *
உள்ளங்கலங்கிமெத்தவுருகுது நானென்னசெய்வேன் ...... *

வசனம்,

கேளுங்களம்மா ரிஷிபத்தினிமார்களே உங்களுக்குப் பொய்யைச் சொல்வதில்லை என்பத்தாவாகிய மிருகண்டர் நைமிசாரண்யவனம் போயிருக்கிறார் எங்களுக்குப் பிள்ளையில்லை நீங்கள்சொன்னவிசேஷத்தைக் கேட்டு என துள்ளமுருகிப் போகின்றது என்னசெய்வேன் எப்படியாகிலுந் தாகம்அருந்தவேணுமம்மா,

ரிஷிபத்தினிகளுக்கும்-ஞானச்சதிராளுக்கும்-தர்க்கம்-தரு

இ-ம்-புந்நாகத்தோடி-ஆதிதாளம்,

ரிஷிபத்தினிகள்சொல்லல்,

புத்திரனில்லாதவீட்டில் போசனம்பொசியோமே ...... *
புகழ்பெற்றரிஷிசாதியெங்கள்சாதி-அம்மா ... *

ஞானச்சதிராள்சொல்லல்,

எங்கள்ஜாதியேதென்றுமென்சாதியீனமென்றும் ...... *
இயம்பலாமோவுங்கட்குவெறுப்பாச்சோ-அம்மா ...... *

ரிஷிபத்தினிகள்சொல்லல்.

வெறுப்பாகநீங்களிப்போவேறாகச்சொல்லவில்லை... ......*
விளங்கப்பிள்ளையில்லாதசஞ்சலந்தான்-அம்மா... ... .....*

ஞானச்சந்திரான் சொல்லல்.

சஞ்சலம்போக்கநீ ஞானச்சதிர்மார்க்கண்டனிதனைவிதிப்பதி...... ... ...*
தடுக்கவும்நீதியுண்டோ அம்மமாரே-அம்மா..... ... ......*

ரிஷிபத்தினிகள் சொல்லல்.

அம்மையப்பாகம்வைத்தஆண்டவனைத்தொழுதால்... ...*
ஆதிநாளினிற்செய்தவினைதீரும்-அம்மா... ... ...*

ஞானச்சதிரர்ள்சொல்லல்.

வினைதீர்ந்தபின்பாகிலுமிருகண்டமாமுனிபேர்...... .....*
விளங்கவெங்களுக்கொருபாலனுண்டோ-அம்மா..........*

ரிஷிபத்தினிகள்சொல்லல்;

பாலனிடபாக்கியமும்பதவியுந்தான்பெறுவீர்.............*
பாரும்நான்சொன்னபடிசெய்யுமம்மா-அம்மா............*

ஞானச்சதிரர்ள்சொல்லல்.

செய்வேனப்பிசாரணயஞ்சென்றமுனிவர்வந்தால்............*
சேதியுரைத்துதபஞ்செய்வேனே-அம்மா...... .............*

ரிஷிபத்தினிகள்-ஞானச்சதிரானுக்குச்சொல்-கவி;

அப்படியேசெய்வா - யருள்ஞானச்சதிரே...... ... ......*
மெய்ப்புடன்நாம்செல - விடையதுதருவாய்..........*

ஞானச்சதிரான்-ரிஷிபத்தினிகளுக்குச்சொல்கவி;

பொற்புடனெனக்குப் - புத்திசளுரைத்த.................*
கற்பினிலுயர்ந்த - கன்னிகளேசெல்வீர்...... ...... ......*

ஞானச்சதிரான்புலம்பல்;

இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

தெய்வமேயிதுயென்னதீவினைவார்த்தையென்... ... ... *
செவியிகேட்கலானேன் ... ... ... (தெய்வமே)
மெய்யானமாதர்களென்வீடுவந்துசொன்ன ... ... ... *
விபரீதமென்னசொல்வேன்... ... ... (தெய்வமே)

பின்னசொல்லைக்கேட்டுத்தியங்கிடவெந்தனை... ... ... *
சென்மித்ததென்னமோ ... ... ... (தெய்வமே)
என்னுடன்சமமதையா யிருந்திடும்பெண்கள்வந்து........................*
யேளிதஞ்செய்திட்டாரோ ... ... ... ... ...(தெய்வமே)

வாளாலேதானறுத்துவதைசெய்திடுகின்ற ... ... ... ... ...*
வாறுபோலிருந்ததே ... ... ... ... ... ... தெய்வமே)
கேளாதவார்த்தைகேட்டோனெப்படிக் இங் ... ... ... ...*
கிருப்பதுஞாயமோதான் ... ... ... ... (தெய்வமே)

இனிமேலுலகினிலெங்ஙேபோலொத்தபெண்கள் ... ... ... ... *
என்னைநகைப்பாரோ ... ... ... ... ... ...(தெய்வமே)
மனதாசைகொண்டபெண் மகுணனுமிந்நேரம் ... ... ... ... *
வந்திடக்காணேனே ... ... ... ... ... ...(தெய்வமே)

பாலகனில்லாப்படிபோவிநாணுகின்னேன் ... ... ..... *
பாடுதானென்னமோ... ... ... (தெய்வமே)
சீலமெனும்ரிஷிதேவியர்களுந்தாகம் ... ... ...*
செய்யாமற்போனாரோ... ... ... ...(தெய்வமே)

ஏனோசுதனெனக்கில்லாமலேபோனது... ... ... *
யீசாமயேசாஓ.. ... ... ... (தெய்வமே)
மானுளொப்பாகத்திலவைத்தோபெனக்கொரு ... ... ... *
மைந்தனுதவிசெய்வாய்... ... ... ..... (தெய்வமே)

பொது-விருத்தம்,

சித்திமுத்திகளைக்கண்டசிருன்ளரிஷிகள்மார்கள்... ... ........ .........*
பத்தினியோர்களெல்லாம்பரிவுடசென்றபின்பு...... ........... .......*
புத்திரனில்லையென்றபெருஞ்சோகத்தாலுறங்கும்.......................*
சித்தனுமிருகண்டர்க்குச்சிஷிருஞ்சொல்லுவாரே... ............... ...*

கட்டியக்காரன் சொல் வசனம்,

அகோ தெப்படியென்றால் ஞானச்சதிராளைக்கண்டுபேசி ரிஷிபத்தினிமார்கள்போனபின்புபுத்திரனில்லையென்றசோகத்தினால் சோலைநிழலில் நித்திரைசெய்திருக்கும் மிருகண்டமகா முனிவருக்குச் சீஷர்கள் சொல்லுகிறவிதங்காண்க,

சிஷர்கள்-மிருகண்டருக்குச் சொல்-விருத்தம்

அந்தையேகேளிரெங்கள்தாய்தனையாசிர்மத்தில்.. ............*
விந்தையாய்விட்டுவந்துவெகுநேரமாச்சுதையா...... ......*
இந்தமாநிழலிலேவிற்றிருந்ததாவிளைப்புத்தீர்ந்தோம் ......*
செந்திருவாசிர்மம்போய்ச்சேருவோமெழுந்திடீரே ... ...*

வசனம்,

சுவாமி சுவாமி எங்கள்தாயாராகிய ஞானச்சதிராளம்மாளை ஆசிர்ம த்திலவிட்டுவந்து வெகுநேரமாயிற்று நாமேன் இவ்விடத்திலிருக்க வேணும்இந்நேரம் போவோம்வாருஞ் சுவாமி,

மிருகண்டர்சிஷர்களுக்குச்சொல்-தரு-இ-ம்-சங்கராபரணம்-ரூபகதாளம்

பல்லவி.

வாராய்மநோன்மணியே-ஆசிர்மம்போவோம்...... *
வாராய்-சிரோன்மணியே ...... ...... ............*

அநுபல்லவி,

பூராயமொழிகேட்ட-தாராதிருக்குதே........... ........*
தீராதோஆராலும்-ஆராதடாகூட... ................(வாராய்)

சரணங்கள்.

தத்தைமொழியாளெனும்பெண்சித்தமுங்களித்திட........*
சுத்திலுமகத்துவமிகுத்துடன்வருகுவீர் ...........(வாராய்)
எந்தன்மனதுங்களிக்கமுந்தியேநடந்திடீரோ...... .........*
அந்தமுள்ளமைந்தர்கள்சுந்தரமதாகவே... ... (வாராய்)
கண்டவரதிசயிக்க-மண்டலம்புகழவே... ... ... ... *
அண்டபகிரண்டநவகண்டமும்நடுங்கவே... ... (வாராய்)

மிருகண்டர்-சிஷர்களுக்குச்சொல்கவி

மணியேமநோன்மணியேவாராய்... ... ... ... *
மணியேசிரோன்மணியேகேளாய் ... ... ... *
மணியேதிகழ்ஞானச்சதிராளை... ... ... ...*
மணியேயழைத்தோடியேவாரீர் ... ...... *

சிஷர்கள்மிருகண்டருக்குச்சொல்-கவி.

தேவரீர்சொன்ன - திருமொழிப்படியே........... ......*
ஆவலாய்அம்மையை- யழைத்தோடிவருவோம்...... ......*

சிஷீர்கள்சொல்கவி,

தம்பியையர்சொற்படியே - தம்பியிப்போதம்மாளே...... *
தம்பியழைத்தோடியேவருக- தம்பிநீவாடாவாடா... ....: *

சிஷீர்- ஞானச்சதிராளுக்குச்சொல்- பரணி.

அம்மா அம்மாபிரம்மசபைக்- கையர்போனார்வந்துவும்மை *
நம்மாலழையுமென்றுரைத்தார் - நங்கசக்கரமேவாராயே *

ஞானச்சதிராள்- சிஷீருக்குச்சொல் பரணி,

தேடிவந்தசிஷீர்களே - திசைமாமுகன்பால்நடந்து........ *
வாடிவந்தமாமுனிபால் - வருமேவலுனும்வருவீரோ... ... *

சிஷீர்மிருகண்டருக்குச்சொல்பரணி;

ஐயரேநின்சொற்படியே - ஆசிர்மத்துள்ளாகப்போய் ... ................ *
வையம்புகழெங்களைப்பெற்ற மாதாவைத்தானழைத்துவந்தோம்... ... *

மிருகண்டர் - சிஷீருக்குச்சொல்பரணி;

பாக்கியம்பாக்கியஞ்சிஷீர்களே - பரிவாயெந்தனிடந்தனிலே........... *
யோக்கியாயோக்கியமாயிருங்கள் - உமக்கோர்குறைவுமில்லைத்தானே...... *

ஞானச்சதிரான் - மிருகண்டருக்குச்சொல் - பரணி;

பிரம்மசபைக்குப்போயிருந்த - பிராணேசாநின்னையழைத்த....... ... *
மர்ம்மமேதாகிலுமுண்டோ - வழங்குந்துறைவிலாயெஞ்சாமி... ... ... *

மிருகண்டர் ஞானச்சதிராளுக்குச்சொல்- கொச்சகம்;

எந்தன்பக்ஷமானபெண்ணேயான்போனசபையிலொரு ... *
விந்தைதபதாயத்திசைமுகனும் வியாசனாக்கேட்டாரவரும் *
மைந்தனில்லாதார்க்குசொர்க்கவழியில்லையென்றுரைத்தார் *
அந்தமொழிகேட்டெழுந்துஅலறிவந்தேனென்னசெய்வேன்

வசனம்.

கேளும் பெண்ணேஞானச்சதிரோநான்பிர்ம்மசபைக்குப்போனயிடத்திற்பிர்ம்மாகாரணவிசேஷங்களைப்பேசும்போதுவியாசர்சொன்னதவன்னமேவனில் பிள்ளையில்லாதபேர்களுக்குச் சொர்க்கமில்லை யென்கிறதாய்ச்சொன்னார்அந்தமொழியை நானுங்கேட்டேன்கேட்டமாத்திரத்தில் எனக்குச்செவியில்நாராசமேத்தினாற்போலிருந்தது அந்தக்ஷணமேபிள்ளையில்லாதவர்க்கு எப்படியுபாயமென்று கேட்டேன அதற்குவீசனைநோக்கித்

தபத்தைச்செய்யச்சொன்ஞர் அதைக்கேட்டுமேனங்கலங்கிபோடிவந்தேன் பெண்ணேஞானச்சதிரே.

ஞானச்சதிராள்மிருகண்டருக்குச்சொல்-கொச்சகம்,

பிரமசபைதன்னில்வந்த பேச்சதுவுமல்லாமல்...........*
பரமனருள்பெற்றரிஷி பத்தினிமாரிவடம்வந்து...........*
அரும்தலையுண்டோவென் றவர்கேட்டாரில்லையென்றேன் ...*
திருமயிலேபாவியென்று செப்பியவர்போஞரே..........*

வசனம்,

கேளும் என்பிராணநாதரே நீரல்லவோபிரம்மசபையில் அப்படிக்குக்கேட்டுவந்தீர் இவ்விடத்தில் யாரோசிவரிஷிபத்தினிகள் வந்து என்னுடன்பந்தாடிஞர்பந்தாடினபேருக்கு இளப்புதீரத்தாகத்திற்குச்சலங்கொண்டுபோய்கொடுத்தேன் அதைவாங்காமல் உங்களுக்குப்பிள்ளையிருக்கிறதாவென்று கேட்டார்கள் நான்பிள்ளையில்லையென்று உண்மையைச்சொன்னேன் என்முகம்பாராமல் அடிபாவிபாவியென்றுசொல்லிப் போனுர்கள்சுவாமி.

மிருகண்டர்-ஞானச்சதிராளுக்குச்சொல் வசனம்,

அப்படியாஆனுல்அவர்கள்வந்ததும் உன்னுடனே பேசினதும்வகைக்குவிபரமாகச்சொல்லுவாய் பெண்ணே.

ஞானச்சதிராள்-மிருகண்டருக்குச்சொல்புலம்பல்

கண்ணிகள் - இ- ம்-கண்டா.

சட்டமாய்ப்பிரம்மசபையில் ... ... ... ... ... ... ... *
தங்கைகளறிந்துவந்த ... ... ... ... ரிஷிநாதா இங்கு
தானடந்தசங்கதியை ... ... ... ... ... ...*
நானுரைப்பேன்கேளுமெந்தன் ... ரிஷிநாதா ... *
வட்டவிழியாளரிஷி ... ... ... ... ... *
மாதரொன்றுசேர்மம்வந்து ... ... ரிஷிநாதா என்னை
வண்மையுடனேயழைத்து ... ... ... ... ... *
வள்ளலெங்கேயென்றுகேட்டார் ... ...ரிஷிநாதர் நான்
வந்தவரைப்பந்தாடுவோம் ... ... ... ... ... *
வாருமென்றுடனழைத்தேன் ... ... ரிஷிநாதா எந்தன்
வார்த்தைக்கிசைந்தென்னுடே ... ... ... ... *

வந்தாடினார்பந்தெடுத்து ... ... ரிஷிநாதா
தொர்த்தமாய்ப்பந்தாடினவர் ... ... ... ... *
சோர்ந்துமிகக்களைத்தார் ... ... ரிஷிநாதா நான்
தோத்திரபடிவணங்கி ... ... ... ... ... *
தொழுதுசலங்கொடுத்தேன் ... ... ரிஷிநாதா
உங்களுக்கேதேனும்பிள்ளை ... ... ... ... *
உண்டோவென்றென்னைக்கேட்டார் ... ரிஷிநாதா நான்
உள்ளதாய்ப்பிள்ளையில்லையென் ... ... ... ... ... ... *
றுரைத்தேனப்போதவர்க்கு... ... ... .. ரிஷிநாதா
தான்காமற்பாவியென்று ... ... ... ... ... ... ... ... *
தாகஞ்செய்யாமற்போனார் ... ... ரிஷிநாதா அதற்குத்
தபத்தினீயென்செய்குவ ... ... ... ... ... ... ... ... *
தம்மணிவுரையுமென்றேன் ... ... ... ரிஷிநாதா
புத்திரனும்வேணுமென்றாத் ... ... ... ... ... ... ... *
புருஷனும்நீயுமாக ... ... ... ... ... ரிஷிநாதா வனம்
புகுந்தெழிற்சங்கரனைப் ... ... ... ... ... ... ... ... *
போற்றித்தவத்தைச்செய்தால் ... ... ... ரிஷிநாதா ... . *
கர்த்தனும்வந்துங்களைக் ... ... ... ... ... ... ... ...*
கார்த்திரக்ஷிப்பாரென்றார் ... ... ... ... ரிஷிநாதா ஏந்தன்
கண்ணீர்துடைத்துவிட்டு ... ... ... ... ... ... ... ... *
குபீரென நடந்திட்டார்காண் ... ... ... ...ரிஷிநாதா ... *

மிருகண்டர்ஞானச்சதிராளுக்குச் சொல் கொச்சகம்.

சந்திரனைப்போல்விளங்குந்தையலரோதானறிந்து............*
வந்துரைத்தவாறேநீ மாதர்சொன்னொன்றுரைத்தாய்......*
சுந்தரமேமொழியிரண்டுந்தோதகமதாலிதற்கு.........'... *
அந்தரங்கமானதெனக்கறியதெரிந்துரைப்பாயே......... ...*

வசனம்.

வாராய்பெண்ணே ஞானச்சதிரோநான் பிர்ம்மசபைக்குப் போய் அறிந்துவந்தசொல்லுக்குச் சரியாகத்தானே நீயும் ரிஷிபத்தினிகள் சொன்னதைச்சொன்னாய் நமக்குப்பிள்ளையில்லாதபடியினாலல்லவோ இவ்விரண்டுசொல்லும் நமக்குத்தொடர்ந்தது இதற்கு உன்கருத்திலென்ன நினைத்தாய்சொல்லும்பெண்ணே,

ஞானச்சதிராள் மிருகண்டருக்குச்சொல் கொச்சகம்.

அகமகிழவெனக்கேட்ட அருமுனியேநீர்கேளீர்..................*
மருணின்சொல்லைத்தடுத்துமறுவார்த்தைசொல்வருண்டோ ... ...*
செகமதனிலெங்கினும்போய்த்திரிந்து வரப்பட்டவர்நீர் ..............*
வகையெனக்கிதென்றுரைத்தால் மனமகிழ்ந்துசெய்வேனே... ... ... *

வசனம்,

கேளும் என்பிராணநாதரே அடியாளைக்கேட்டாலெனக்கென்னதெரியும் நானென்சிந்தையில் நினைப்பதென்ன தேவரீர் எந்தசபைக்கும் போய்வரப்பட்டவர் உமக்கல்லவோதெரியும்நீரென்னசொன்னபோதைக்கும் அந்தப்படியே நடந்துவருவேன் இதற்குத்தேவரீரேசொல்லவேணுஞ்சுவாமி.

மிருகண்டர் ஞானச்சதிராளுக்குச்சொல்விருத்தம்,

மாதருக்கரசேவியாசர் வழங்கினபடிநமக்கு..............*
ஆதீனத்துக்கோர்பிள்ளை யாகிலுமிலாததாலே..............*
ஏதுபோனாலும்பெண்ணே யீசனார்பாதந்தேடிப்...... ...*
போதுநாம்தபத்தைச்செய்து புதல்வனைப்பெறுகலாமே...*

வசனம்,

கேளாய்பெண்ணே ஞானச்சதிரே நமக்குவெகுகாலமாய்ப் புத்திரசந்தானமில்லாதிருப்பது நமக்குத்தெரியுமே ஆகையா லந்தவேதவியாசர்சொன்னபடிக்கு நாமிருவருங்கூடிகானகத்திற்சென்று ஈசனை,நோக்கித்தவத்தைச்செய்துபுத்திரபாக்கியம்பெற்றுவருவோம் வாரும்பெண்ணே,

ஞானச்சதிராள்-மிருகண்டருக்குச்சொல் விருத்தம்,

வல்லமையுடையவேதமாமிருகண்டரோகேள்...... ----...*
செல்வனில்லாததென்ன செனனமேசெனனங்கண்டீர்......*
அல்லலைத்தீர்க்கநாமுமறிவையொன்றாகச்செய்து... ......*
எல்லையில்தவத்தைச்செய்வதெனக்கதுநன்றுதானே ......*

வசனம்,

கேளும் என்பிராணநாதா புத்திரனில்லாதசென்னம் என்னசென்னம் தேவரீர்மனதின்படியல்லலைத்தீர்க்க ஈசனைநோக்கித்தவத்தைச்|செய்து புத்திரபாக்கியம்பெறுவதேயுத்தமம் என்பிராணநாதா,|

மிருகண்டர் சீஷர்களுக்குச்சொல் விருத்தம்,

ஆரடாசீஷரோவென் அடியாளுநானுமிப்போ.......... ...*
சீருடன்தபத்தைச்செய்துசெல்வனைப்பெறுவதற்கு... ...*
பாரடாயிடந்தானுதிபரமனைக்காணவேணும் ......... ..*
ஓரடையாளமாக வேரடிவந்துரைசெய்வீரே ..........*

வசனம்.

ஆரடா சீஷர்களே நானும் எனதுதேவியுமாகஆரணியத்தில் தபஞ்செய்து யீசனைக்கண்டு புத்திரபாக்கியம் பெற்றுவரவேணும் ஆகையால்தபஞ்செய்யநல்லயோக்கியமான யிடமாய்ப்பார்த்துவாருங்க ளப்பாசீஷர்களே,

சீஷர்கள் சொல்பரணி,

நம்மையாளையரும் நமதம்மாளும்............ ... ...*
செம்மையாய்த்தவத்தைச்செய்யநினைத்தார்....... ...*
நம்மைப்போயிடத்தை நாடிப்பாரென்றார்...... ...*
வண்மையாய்ப்பார்த்து வந்துரைப்போமே... ......*

பொது-விருத்தம்,

மாசிலாமிருகண்டையர்வனத்தினிற்றவத்தைச்செய்து......................*
யீசனைக்காண்பதற்குயிடமதைப்பார்க்கச்சொல்ல.......................*
ஆசையாய்சீஷர்கூடியடர்வனம்வருகும்போது...........................*
தேசமாயவ்வனத்துரிஷிகளும்வருகின்றாரே.................................*

கட்டியக்காரன்சொல்வசனம்,

அகோதெப்படியென்றால்இவ்விதமாக மிருகண்டர்தபத்தைச்செய்யயிடம் பார்க்கும்படியாய் தம்முடைய சீஷர்களையனுப்ப அவர்களிடத்தைதத் தேடிக்கொண்டு வருகிறதருணத்தில் அவ்வனத்தில்தபஞ்செய்யப்பட்ட ரிஷிகள்யாவருங் கூடிக்கொண்டு அவ்வழியாய்வருகிறவிதங்காண்க.

வனத்துரிஷிகள்வருகிற-தரு-இ-ம்-சங்கராபரணம்அடதாளம்

பல்லவி,

நினைத்தப்படிமுடிக்கவே -சிவத்தைக்காண............*
வனத்துரிஷிகள்வந்தாரோ................ ......... ...*

அநுபல்லவி,

கனத்தமுனிவர்களைக்கணத்திலடைக்கக்..................*
காரணமறிவாருதாரணமாகிய............................*
சேரணிவனமதிலாரணமாகவே................. ......(நினைத்த)

சரணங்கள்.

நவத்துக்குமிகயோக்கியர்-பஞ்சாக்ஷரத்... ...... ........*
தனைத்துதிக்குஞ்சிலாக்கியர்............. ...... ...........*
பவத்தைப்பறக்கடிக்கப்பண்ணும்வலுமையுள்ளோர்... ...*
பரமனும்நிமையினிலருகினில்வரும்விதம்................*
தெரிகுவர்சிவசிவஹரகரவெனநிதம்............... (நினைத்த)
மதத்தபேர்களைச் சயிப்போர்-உலகிலுள்ள......... *
மர்ம்மத்தையெல்லாஞ்செயிப்போர்.........................*
மிருத்தவயன்விதியைவெல்லுமுறைதெரிந்தோர்.............*
விண்ணவரரசர்களெண்ணிலுமிவர்களைப் ................ ...*
புண்ணியர்களெனவெண்ணிடமனத்தினில்... ......(நினைத்த)

கண்டவர்மனஞ் சலக்க-நீறணிமலர்......... ........ ...*
கரத்தினில்தெண்டுதுலங்க.........................*
மண்டலம்புகழவே மணிசடையாடவே... ............ ......*
வமரர்களெவர்களுருவமையிதென்னவே........ ....... ...*
உமையவளுமகிழநிமையினில்வனமதில்...... ......(நினைத்த)

வனத்து ரிஷிகள்சொல்லுங்கொச்சகம்

காட்டிலுள்ளமிர்கங்களேகாக்கையெங்கள்வாக்கினைக்கேள்..............*
தாஷ்டிகமதாய்வனத்தில் தனித்துவந்தோந்தவத்தைச்செயிய ... .....*
ஓட்டிவிடாதேயிருங்களுங்களுக்கோர்புண்ணியந்தான்...................*
நீட்டுடனேகாலூன்றிநிலத்திலநின்றேந்தவத்தினிற்கே........ ... ... ...*

வசனம்,

சேளு மிவ்வனத்தில்வாழு மிருகங்களே பறவைபக்ஷிகளே நாங்கள் ஈசனைநோக்கித் தவத்தைச்செய்யக் காலூன்றி நிலத்தில் நின்றுவிட்டோம் எங்கள்தவத்திற்குப் பின்னம்வராமல் பார்த்திருங்கள் தவஞ்செய்தால்உங்களுக்குப்புண்ணியமுண்டு,

வனத்துரிஷிகள்-தோத்திரஞ்செய்கிற கன்னிகள்-எச்சரிக்கை,

ஐயனேமலர்க்கையனேயும்மை... ... ... ...*
யடுத்தோந்துதிதொடுத்தோம்......... .......... ...*
மெய்யனேயெங்கள் துய்யனேவந்து...... ......*
விடுவாய்-இன்புறடவாய்... ... ... *

மூத்தனேபரிசுத்தனேயாதி... ... ... *
மூலமேயின்னஞ்சாலமேன் ... ... ...*
அத்தனேயெங்கள்கர்த்தனேயிங்கு ... ... *
அடுப்பாய்வரங்கொடுப்பாய். . ... ... *
ஈசனேபூமயேகனேயுன்னை ... ... . ...*
யெண்ணினேமிகதண்ணினேம்... ... ... *
வாசனேபிரகாசனேமுன்பு... ... ... *
வருவாய்வரந்தருவாய்... ... ... ... *

சீஷர்கள்வனத்துரிஷிகளுக்குச்சொல்-வசனம்;

ஆண்டயா யிவ்வனத்திலே பாரம்பரியமாய்க்காலாகாலமாய்த் தபஞ் செய்து காதுங் கண்ணும் மூக்கும்வாயும்அடைபட்டுப்போன பெரியோர்களே பொச்சுபொச்சாயிருக்கும் தாடியும் மீசையும் சிகையும் வளர்ந்த சிறியோர்களே சந்நியாசிகளே தபசிகளே எங்கள்குச்சக மகாமுனிவருடைய குமாரரான மிருகண்டமகாரிஷியும் அவர் தேவியுமாகத் தவஞ்செய்யவருகிறார் அத்தவத்துக்கு கொஞ்சம்இடமகப்படுமா அகப்பட்டுதவஞ் செய்தால் ஈசனேக்காணுவாரா கலிதீருமா பரகதியடைவாரா சொல்லுங்கள் ரிஷிகளே தபசிகளே சந்நியாசிகளே (அடா-தம்பி-ஞானச்சிரோன்மணி-இவ்விடத்திலிருக்கு ரிஷிகள்பேசப்போகிறதில்லை நாமேன்வீணுக்குத்தொண்டைக்குக் கேடாய்க்கத்தவேணும்) அண்ணே அதுவாநியாயம் அதோ ஒருவர்இப்போதுதான் கண்ணைத்திறக்கிறார் பார் அவர்தான்சொல்லுவார்சத்துபொறு ஆக்கப்பொறுத்தறு ஆறப்பொறுக்க வேண்டியதில்லையா அண்ணே;

வனத்துரிஷிகள்சீஷர்களுக்குச் சொல்-விருத்தம்;

ஆடாயிவ்வனத்திலருமையாயோடிவந்து...... ..... ...*
ஓரிடங்கேட்பதாரோவுங்களுர்பேர்தானன்றாய்... .........*
வீருடனெங்களுக்குவிவரமாயுரைப்பீராகில்....... ...... ...*
சீருடனிடமிருக்குஞ்சேதியைச்சொல்லுவோமே...... .....௧

வசனம்.

ஆரப்பா இந்த அடர்ந்தவனத்தில் சுனையருகில்வந்து இடங்கேட்கப்பட்டபேர் நீங்களார் தபசியார் ஊர் பேரென்ன இன்னமொருதரந்தெரியச்சொல்லுங்கள் கேட்கவந்தஅதற்கு இடஞ்சொல்லுகிறோம்,

சிஷர்ரிஷிகளுக்குச் சொல்-கவி.

திருக்கடையூரில்வாழ்கின்ற..................*
செபமாமிருகண்டையர்வந்து..................*
உருக்கமதாகத்தவஞ்செய்ய..................*
யோடியிடம்பாரொன்றுரே..................*

வசனம்,

கேளுங்கள் சுவாமி வனத்து ரிஷிகளே திருக்கடையூரில் வாழுமிருகண்டரிஷியும் அவருடையதேவியுமாய் தபஞ்செய்யயெங்களையிடம்பார்த்து வரச் சொன்னார் நாங்களோ அவருடைய சிஷர்கள் இடந் தர வேண்டுஞ்சுவாமி,

வனத்துரிஷிகள்-சிஷர்களுக்குச்சொல் விருத்தம்,

சுபமதியுடையவேதசுந்தரமிருகண்டர்க்கு..................*
அபத்தநாம்சொல்வதில்லை அவர்மனமகிழ்வதாக..................*
தபமதுசெய்யச்சாலைசந்தனச்சோலையுண்டு..................*
செபமிகுசிஷரேநீர்க்ஷணத்திலழைத்துவாரீர்..................*

வசனம்,

வாருங்களப்பா மிருகண்டருடைய சிஷர்களே அவர் மகாயோக்கியர் அவருக்கு நாங்கள் அபத்தஞ்சொல்லக்கூடாது அவர்தபஞ்செய்யசந்தனச் சோலையும் தடாகங்களுமிருக்கின்றது அவருக்கிதுமகாயோக்கியமானவிடந்தான் சீக்கிரமாகஅழைத்துக்கொண்டுவாருங்களப்பா சிஷர்களே,

சிஷர்-மிருகண்டருக்குச்சொல்-கவி,

ஐயாஐயா நாம்சொன்ன..................*
அடர்ந்தவனத்திற்குள்ளேபோய்..................*
மெய்யாய்த்தபத்திற்கிடம்பார்த்து..................*
வேடிக்கையாகவந்தோமே..................*

மிருகண்டர்-சிஷருக்குச்சொல் - பாணி,

வேடிக்கையாகநீர் பார்த்த..................*
விடத்தானெங்கேசிஷர்களே..................*
பாடிக்கயிலைவாசகனைப்..................*
பணிவேனடக்கத்துணிவேனே..................*

சிஷீர்மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்,

சந்தனமரத்தினிழல்சாருகள்படர்ந்துமெத்த........................*
விந்தையாயிருக்குதங்கேவிளங்கியயிடந்தானையா.......................*
மைந்தனைப்பெறுவீரையாவள்ளல்வந்தருளேசெய்ய.......................*
செந்திருசதிராளோடுசிவதபஞ்செய்யவாரீர்................................*

வசனம்.

சுவாமிசுவாமி நாங்கள்போய்பார்த்துவந்தயிடத்திலே சந்தனச்சோலைநெருங்கியிருக்கின்றது தடாகமுமிருக்கின்றதுவெகு ரிஷிகள்தபம் புரிகிறார்கள் தாமும்வந்து தபஞ்செய்தால் உடனேயீசனைக்கண்டு புத்திரபாக்கியம்பெறுவீர் வாருஞ்சுவாமி.

மிருகண்டர்ஞானச்சதிராளுக்குச்சொல் பரணி,

பெண்ணேஞானச்சதிரேகேள்......................................*
பிள்ளைகளெல்லாந்தானடந்து....................................*
கண்ணேதவத்திற்கிடம்பார்த்து..................................*
கடிதில்வந்தார்வருவாயே.......................................*

மிருகண்டர்-சொல்-தரு-இ-ம்-தோடி-ரூபகதாளம்,

பல்லவி,

நல்கானகமிதுவோ-மநோன்மணி-சிரோன்மணி......................*
கண்டாமணி-சிந்தாமணி-நீங்கள்வந்து - சொல்லும்வனமிதுவோ*

அநுபல்லவி.

மல்லிகைவாசனை-முல்லையணிந்திடும்...........................*
தில்லை மயேசனை-மெல்லப்பணிந்திட............. (நல்ல)

சரணங்கள்.

சந்தனச்சோலையின்-விந்தைகளோயிது.............................*
நந்தவனங்கள் - மிகுந்தகானகமிது................... (நல்ல)
சோலைநெருங்கிய - ஆலயந்தோணுது ... ... *
நீலகண்டரிருந்தசோலைபோற்காணுது ... (நல்ல)
சிங்காரந்தன்னைநாம் - பொங்கமாய்ப்பணிந்திட ... *
இங்ஙனமேதபந் தங்கியிருந்திட... ... ... (நல்ல)

சிஷீர் மிருகண்டருக்குச்சொல்பரணி,

ஓங்கிடத்துதான்வந்த - வுறுதியுள்ளஐயாவே ... ... *
நாங்கள்பார்த்தயிடமிதுவே - நன்றோநன்றல்லோவுரைப்பீர்

மிருகண்டர் சிஷீர்களுக்குச்சொல் விருத்தம்.

மாணிக்கப்பொருளேதிவ்ய மநோன்மணிசிஷியாநீகேள் ... *
ஆணிப்பொன்முத்தேஞான அதிசிரோன்மணியேநீங்கள் *
பூணிப்பார்த்ததினாலிந்தப் புண்ணியவிடங்கண்டீர்நாம் ...... *
ஊணிட்டச்சிவனையிந்த வுடனுக்குள்காணலாமே ... ... *

வசனம்,

ஆரடா சிஷீர்களே நீங்களெனக்காக வெகுதூரம்வந்து பார்த்தபடி யினாலே உங்களுக்கு இப்பேர்க்கொத்தயிடமகப்பட்டது இவ்விடமேயி ருக்கட்டும் உடனே யீசனைக்காணலாம்,

சிஷீர்-மிருகண்டருக்குச்சொல் விருத்தம்,

ஐயரோகேளீனாயா யாவருந்தலைகீழாக ... ... ... *
மெய்யனைநோக்கியிங்கு வெகுகாலந்தவஞ்செய்கின்றார் *
செய்கினுஞ்சிவனைக்காணார் தேவரீர்செய்தபத்தால் ... ... *
பைய்யவேயிவர்களெல்லாம் பரமனைக்காணுவாரோ ... *

வசனம்

சுவாமிசுவாமி இவ்விடத்திலிதோ தவஞ்செய்யப்பட்ட தபசிகளெல் லாம்தலைகீழாகநட்டுக்கொண்டு வெகுகாலமாய்த் தவஞ்செய்கிறார்கள் இ துவரையிலும் பரமசிவனைக்கண்டபேர்களில்லை தேவரீர்செய்யவந்தத யோபலத்தினாலே இவர்களெல்லாம் ஈசனைக்காணலாயிற்று நாங்களும்அத் தசந்திலே காணுவோஞ்சுவாமி-

மிருகண்டர் ஞானச்சதிராளுக்குச்சொல் விருத்தம்,

மதியுள்ளமாதேகேளாய் வனத்தினில்வந்துவிட்டோம் ...*
மதியுடனென்னைப்போலுன் மதியையொன்றாகச்செய்து *
மதியுற்றபாலன்வேண்டி வள்ளலைமனதிலெண்ணி ... ... *
மதியுமேகலங்கிடாமல் மாதபத்திருந்திடாயே........, ...*

வசனம்,

வாசாய் மிகுந்தமதியுள்ளஞானச்சதிரோ புத்திரவாஞ்சையினாலேந மதுஆசிரமம்விட்டு ஆரண்ணியமானமலையடிசாரலிலே வந்துவிட்டோ

ம்தபத்துக்குயோக்கியமான யிடந்தான் ஆனதா லெனதுமதியைப்போ லமேயுனது மதியையும்ஒன்றாக்கிப்பரமசிவத்தைமனதிலெண்ணிதவம்புரி வாய்பெண்ணே.

ஞானச்சதிராள் மிருகண்டருக்குச்சொல் பரணி,

கெதிபெறுமுனியே - மதியையொன்றாக்கி........ ... ...*
சுதன்றனைவேண்டி - கதிதபஞ்செய்வேன்........... .....*

சிஷர்கள் சொல் பரணி,

அம்மாளும்ஐயாவுங்கூடி - யருமையாய்த்தவத்தைச்செய்தால்
தம்மாலானபடியிடக்கை - நாடித்தவம்நாம்செய்வோமே *

மிருகண்டரும்-ஞானச்சதிராளும் தபஞ்செய்கிற - தரு,

இ-ம்-ஆனந்தபைரவி,

ஆத்திமலரை யணிந்தோனே - புனைப் .................... *
போற்றிவந்து தவம்புரிந்தோம் ..... .............. (அரகரா)
கூத்துவனேயாதிமூலமேயெங்கள்முன்...... ............ ..*
தோற்றிவந்து வரந்தருவாய்........ .............. (அரகரா)

சிஷர் சொல்- தரு,

தோற்றுங்கடல்மீனைத்தோணைக்கொண்டேவந்து... ... ... ...*
ஆற்றில்சலத்தி லலைத்தேயெடுத்து ... ... ... .....*
தூற்றியென்னைவிட்டுச்சொய்ஞ்சொய்யெனவறுத்து...*
பார்த்துப்படைக்கிறேன் பகவிரிசியே... ............ ......*

மிருகண்டரும் ஞானச்சதிராளும் சொல்-தரு,

ஆற்றங்கரைதேடி வந்துயிருவரும் .................. ......*
ப்ரேத்தியுடனேதவம்புரிந்தோம் ... ... ... (அரகரா)
வேற்றுமையாகயிராமலேயெங்களைப்... ... ... ... *
பார்த்துவந்துவரந்தருவாய்... ... ... ... (அரகரா)

சிஷர் சொல் தரு.

பார்த்துப்பார்த்துமகிழ்ந்து பாவையைவிட்டிங்கு ... ...*
ஆத்திரமாய்வந்து அலைவானேன் ... ... ... ...*
காற்றுமழையில்திக்க் காரணமேனென்று ... ... ......*
கூத்தியாளைக்கொடுங் கொள்கையனே ... ... ... *

மிருகண்டரும் ஞானச்சதிராளும்சொல்-தரு,

சங்கரனேசுதம்வேணுமென்றேயெண்ணி... ... ... *
இங்குவந்துதவம்புரிந்தோம்... ... ... ... (அரகரா)
பொங்கமுடன்விடையேறியேவந்தெங்கள்... ... ... *
சங்கைகள்தீரவரந்தருவாய்... ... ... ... ... (அரகரா)

சிஷீர்கள் சொல்-தரு,

சங்கையாயிருந்திடத் தாளாதேயெப்படி... ... ... *
வங்கைப்பிசாசேநீவாவா... ... ... ... ... ... *
இங்கிதக்கறுப்பண்ணு யிருசியேவாடி... ... ... ... *
உங்களைக்கொல்லுவோம் ஓடிவாவா ... ... ... ...*

மிருகண்டரும்- ஞானச்சதிராளும்- சொல் - தரு,

மங்கையிடைப்பாகம் வைத்தவனேவனம் ... ... ... *
தங்கியிருந்து தவம்புரிந்தோம்... ... ... ... (அரகரா)
கங்கையுடன்கூடவந்துயெங்களிட...... ...... ...........*
அங்கங்குளிரவரந்தருவாய்... .......................(அரகரா)

சிஷீர்கள்-சொல்-தரு,

அங்கம்பசிக்குது அடிவயிறுபெருக்குது ... ... *
எங்கேதான்போவோம்அப்பாரே... ... ... ... ... *
பொங்கலிட்டிக்கிறோம்பொலிகிடாவெட்டுறோம்...............*
இங்கேநீயோடிவாயீஸ்வரனே...............................*

மிருகண்டர்சொல்-தபம்-கழிநெடில்-விருத்தம்-இ-ம்-தீனாப்புரி,

விடைமீதேறியசங்கரனே விண்ணோர்துதிக்குமெய்யோனே..........*
விமலாநீவரமேதருவாய் ........ ... .............................*
வடிவேவடிவேநற்றிருவேமதியேமதியேமெய்யுருவே.....................*
வருவாய்நீவரமேதருவாய்............... ..............................*
எந்தாயுமையேமனோகரியே யெங்கள்குறையுந்தீர்ப்பாயே...................*
இனிதாய்வரமேநீதருவாய்... ... ...... ... ........................*
சந்தானம்வேண்டித்துதித்தோஞ் சாஷ்டாங்கமதாகப்பணிந்தோம் ... *
சாமிநீவரமே தருவாய் ... ..........................................*

வேடர்வருகிற-பொது-விருத்தம்,

புத்திரவாஞ்சையாலேபுண்ணியமிருகண்டையர்........ ...*
கர்த்தனைத்துதித்துநிற்குங்காலத்திற்புதுமையாக............*

எத்திசைநடுநேயெங்கயிருளிடியிடித்தாற்போல... ...........*
மெத்தவெற்றிகள்கொள்காட்டுவில்லியர்வருகின்றாரோ... ...*

கட்டியக்காரன் சொல்-வசனம்,

அகோகேதப்படியென்றால் இப்படியாகமிருகண்டரும் அவர்தேவியாகிய ஞானச்சுதிராளும் புத்திரபாக்கியத்திற்காகத் தபஞ்செய்திருக்குங் காலத்தில் அந்த வனத்திலிருக்கும் வேடர் வேட்டையாட வருகிறவிதங் காண்க.

வேடர்வருகிற-தரு-இ-ம்-புந்நாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி,

வனத்துவில்லியர்வருகிறார்- வெகு.................. .....................*
வலுமையுடையகுட்டிப்புலியைமிரட்டித்தட்டி- வனத்துவில்லியர்வருகி[றார்

அநுபல்லவி.

நினைத்தப்படியேகானில்-நேரிட்டமிருகத்தைப்...... ......*
போரிட்டு மடித்திட-நேரிசங்கைப்பிடித்திதோ (வனத்து)

சரணங்கள்.

காட்டெருமைகளையெல்லாங்-கூட்டைவிட்டேகலைத்து... .............*
ஆட்டுக்குட்டிகள்போல ஓட்டிவிட்டடிக்கயிதோ...............(வனத்து)
சிங்கக்குட்டிகளெல்லாம்வங்கைப்பசாசைப்போல்......... ...........*
எங்கெங்கொளிப்போமென்று-அங்குநின்றுதிகைக்க... .......(வனத்து)
வெள்ளைமுசல்களெல்லாம்-பள்ளத்திலேபதுங்கி.................. ......*
மெள்ளமெள்ளவொதுங்கித்-தள்ளித்துள்ளிக்கொண்டோட... (வனத்து)

முதல்-வேடன்-சொல்-கவி

கானகக்கடம்பா - ஏனகத்துடும்பா.......................... ......*
மானுகள்படும்வலை - தானேதோகொடுவா.................. ..*

வசனம்,

இதராங்கானகக்கடம்பாங்-என்னடாங் ஏனகத்துடும்பாங்-இதராங்-மான்வலையெடுத்துவாடான் - எண்டாங்-வலைக்கட்டிபேட்டையாடுவம்- எடுத்து வாங்கடாங்(இதோ எடுத்துவந்தேன் - பாரடாங் - பாரடாங்)

வேடர்-வேட்டையாடுகிற - தரு-இ-ம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி,

பரும்வலையெடடாஐயே-ஐயேயித்தப்.. ............ ......*
பள்ளத்தில்விடடா ஐயே........................ ...............*

அநுபல்லவி.

பரும்வலையெடுத்திந்தப்-பள்ளத்தில்விடுத்தந்த............ *
கருங்கல்லினைப்பதித்துக்-காட்டடைக்கலைத்திடுவோம்(பரும்)

சரணங்கள்,

வரும்புலிகரடிகள்-மதமுற்றயானைகள்........ ... .. ......*
பெருந்தலைசிவிங்கிநாய்-பிரண்டுவிழுகுழிதில்... (பரும்வலை)
ஓடுங்கவுரிமான்- ஒருபுள்ளிமான்பன்றி........................*
கூடிக்கூடியலைந்து-குருடர்போல்விழுமிதில்... (பரும்வலை)
வானம்பாடிபறவை-வகையுள்ளகுயில்மயில்... ...... ......*
கானகத்தில்மயங்கிக்-கடுகவிழுகுழியிதில்......... (பரும்வலை)
வாணருக்கியாத-மடையரைப்போற்காக்கும்........ ......*
வீணருக்கெதிர்வந்துமிறண்டுவிழுகுழியிதில்...... (பரும்வலை)

உ-வது-வேடன்- சொல்-கவி.

பரும்வலையெடுத்துப்பள்ளத்-தருகினிற்கட்டிவைந்து..........*
பெருமிருகங்கள் துரத்தித்-துரிதவேட்டைகள்செய்வீரோ*

வசனம்,

இதிராங்க்ரனக்கட்டம்பாங் - எனடங்- எனகத்துடும்பாங் - இதிராங் பள்ளத்திற் பலைகட்டிமிருகங்களைக் கலைத்துவிட்டோம் - கலைத்தமிருகம் ஓடிப்போகாமுன்னம்பிடித்துத்திங்க-பேட்டையாடுடங்;

முதல் வேடன்சொல்-சந்தார்த்தம்,

சுத்திலுங்கடம்பைமான்கள்தூரத்தில்மேயுனாயே.......................*
பத்தியாய்முசல்கூட்டங்கள்பள்ளத்திலிருக்குதாயே... ..... ........ *
வெற்றிசெய்யாளியொன்றுவிடுபட்டு மேயுனாயே.......................*
உத்தமத்துடையமான்களெல்லாமிரோ .... ... ... ... *

ஓடுறுடையே-ஒன்றோடொன்று-கூடுறுடையே...... *

ஓடுறு-கூடுறு-தேடுறு-பொறு-பொறு... ... ..... ... *
நாடுறு-மனந்தட-மாடுறு-அரோடையே... ... ...(ஓடுறு)

உ-வது-வேடன்-சொல்-சந்தார்த்தம்,

உள்ளமுமகிழ்ந்துயானைவரும்புருபாரடையே... ... ... ... *
துள்ளியேயாளியொன்று சொகுசுடன்பார்க்குதாயே ... ... ... *

கொள்ளையாய்மயில்வர்க்கங்கள்கொக்கரித்திடுகுதாயே... ... ... *
பள்ளத்திலிருந்தமுசல்களெல்லமிரோ ... ... ... ... ... ...*

பரிக்குறுடையே-நம்மைக்கண்டு-சிரிக்குதுடையே...*

பறக்குது-சிரிக்குது-இருக்குது-பொறு-பொறு... ... *
அரிக்கலாமரிக்கலாம்பொறிக்கலாம்அரோடையே ... (பறக்)

௩-லது-வேடன்-சொல்-கந்தார்த்தம்.

வில்லிபர்தலைவாயிந்தவேடிக்கைப்பாரடையே ... ... ... ... *
தூல்லியகடம்பைகாணில்தூங்கிருபதுங்குதையே ... ... ... ... *
மலலிபெயயோடுமானுல்மடங்கிப்போர்செய்யுதாயே ... ... ... *
சொல்லிக்கொண்டோடிவருகாடுமன்னந்தலை ... ... ... ... *

தூக்குறுடையே-கொம்பைமண்ணில்-தாக்குதுடையே*

தூக்குது-தாக்குறு-பார்க்குறு-பொறுபொறு... ... ...*
ஏக்குறு-நோக்குறு-வாக்குறு-அரோடையே.. (தூக்குறு)

௪-வது-வேடன்-சொல்- கந்தார்த்தம்.

பக்கத்திதிய தூங்கிவாங்கள்பாக்கியம்பலிக்குதாயே ... ... ... *
கொக்குகள்கூட்டமிட்டுகுருடர்போல்தவிக்குதாயே ... ... ... *
சக்களத்திக்குவந்தசண்டைபோலுழலுதாயே... ... ... ... ...*
மூக்கிக்கி-கிக்கி-யென்றுகொக்கு ... ... ... ... ... ... *

மூளிக்குறுடையே-பள்ளத்தினில்-ஒளிக்குறுடையே*

மூளிக்குறு-வொளிக்குறு-பிளிகுது.பொறு-பொறு......*
வளைக்கலாம்-களைக்கலாம்-துளைக்கலாம்-அரோடையே (மூளி)

முதல்-வேடன்-சொல்-விருத்தம்.

இந்தாலமரத்தின்மீதிலினாச்சலேதோன்றுதாயே... ... ... ... *
குந்தியேயிருந்துபார்க்கக்கூடொன்றுதோற்றுதாயே ... ... ...*
யந்தமாயிதிலிருந்தபருங்குயில்மூளிக்குதாயே... ... ... ... *
எந்தன்கையம்பாலத்தைபெய்யுமோன்பாரடையே.......................*

வசனம்,

இதிராங்கானக்கடம்பாங்-ஏனடா ஏனகத்துமெம்பாங் - இதிராங்இந்தரிஷியிருக்கிற ஆலமரத்திலே கூடுகட்டிக்கொண்டு ஏதோஒருபெட்டைக் கருங்குயில் மூளிக்குதுராங் (ஆமடா) இதிராங் இதைப்பிஞ்சு போடுவேன்பாரடா (இதிராங்பிஞ்சுராங் பார்ப்போமடா,)

உ-வது-வேடன்.சொல்-விருத்தம்.

அடிக்கவேகுயிலலைந்து அருமுனிகையில்வீழ்ந்து...... ......... ......*
துடிக்குதுபாரடையேதூயமாமுனிவர்கண்டால் ..... ...... ... ...*
சடிக்கென்றுநம்மையெல்லாஞ்சபித்திடப்போராணாமே......... ... ......*
பிடுக்குடனோடிக்கானில்மெள்ளமையாய்ப்பிழைப்போம்வாரீர்...... ...*

வசனம்;

இதிராங் கானகக்கடம்பாங்--ஏண்டா ஏன்கத்துடும்பாங்-இதிராங் இந்தக்குயில் அடிக்கவே அடிபட்டுதுடிதுடித்து இந்த ஐயர்கையில் விழுந்து பதைக்குதுராங்-ஆமடாங் ஐயர்கண்ணைத்திறந்துபார்த்தால் நம்மைச்சபித்துப்போடுவார் ஓடிப்போவோம்வாங்கடாங்,

மிருகண்டர்-சிஷிருக்குச்சொல்-பரணி;

மண்தோன்றுக்கு மநோன்மணியே... ... ... ...*
வளருமெய்ஞ்ஞானச் சிரோன்மணியே...............*
எனதுகையிற்றுடிப்பதென்ன......... ...............*
யிதையாணறியச்சொல்வீரோ... ... ................*

சிஷிர் மிருகண்டருக்குச்சொல் பரணி,

ஐயா அரகரா அரகராயிவ் - வாலமரத்திலிருந்தகுயில் ..........*
மெய்யாய்வில்வியரம்பாலடித்தார்-விழுந்துகையிற்றுடிக்குதையா*

மிருகண்டர்-சிஷிருக்குச்சொல்பரணி,

அடடா அரகரா அவ்வில்லியர்கள்- அடங்கலுமிங்கிருக்கின்றாரோ ... *
கொட்டாதிரளையிலவர்களைத்தான்- கொலையேன்செய்தார்கேட்டறிவீர் *

சிஷிர் - மிருகண்டருக்குச்சொல்- பரணி;

குயிலைபடித்த வில்லியரிங் - கொருவரில்லையிக்கானில்...... ... ... *
பயில்போட்டோடியேயொளித்தார் - பார்த்தோமெங்குமில்லையையா ...*

மிருகண்டர் சிஷிருக்குச்சொல் - பரணி;

புத்திகெட்டவில்லியர்கள் - போனாற்போகட்டும்நீங்கள்... *
இத்தையெடுத்துநீர்பூசி - யெழுப்பிக்கூண்டில்விடுவீரோ ...*

சிஷிர்கள் சொல் - பரணி,

உபாயமாகமிருகண்டர் - உரைத்தபடியேகுயில்மீதில்... ... *
விபூதிதன்னைப்போட்டெழுப்பி-விடுவோங்கூண்டில்விடுவோமே*

சிஷர்கள் குயிலுக்குஉயிர்கொடுக்கிற மந்திரம்-வசனம்,

மொண-மொண-மொண-மொண-கிண-கிண-கிண-கிண-டிங்-டிங்-டிங்-டிங்-பே-பே-பே-பே-வா-வா-உயிர்வா-கூகூ-குயிலேகூவு,

சிஷர்கள் சொல்-பரணி.

அடாதம்பிநமையாளும் - ஐயர்கொடுத்தவிபூதிதனைத் ...*
தொடவேகுயிலெழுந்துடனே - சுகமாயோடிமூழிக்குதடா*

சிஷர்கள்-மிருகண்டருக்குச்சொல்-பரணி,

வேதாவெண்ணீர்தான்கொடுத்த- மெய்யாய்க்குயில்மேல்தான்போட்ட*
போதேயெழுந்துதன்கூண்டிற் - புகுந்துவிளையாடுகுதையா... ... ...*

மிருகண்டர்-சிஷருக்குச்சொல்-பரணி,

விளையாடினதேபாக்கியந்தான் - மெய்யானச்சொல்சிஷர்களே ...*
சளசலென்றுதேயிருங்கள் - தபத்தைச்செய்யும்வேளையிதே ...*

சிஷர்-மிருகண்டருக்குச் சொல் -பரணி,

புத்திபுத்தியையாநீர் - புகன்றபடியேமுன்பின்னும்... ...*
பத்தியாகவேயிருப்போம் - பண்ணுந்தபத்தைச்செய்வீரோ *

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்-சொல்-தோத்திரம் - கண்ணிகள்,

இ-ம்- முகாரி-திரிபுடை தாளம்.

மிருகண்டர் சொல்லல்,

சோதியேசொருபமே-அநாதியேயுனைநம்பினேனும் ... *
நீதியாசயிந்நேரம் நீவந்துநின்றுவரமருளீஸ்வரா ...... *

ஞானச்சதிராள் சொல்லல்,

சூதில்லாமலேசுதனுக்காகவே-மாதவங்களைச்செய்கிறேனும் *
மாதுவேபரமேஸ்வரியிங்கு- வந்துவரமருளீஸ்வரி ... ...*

மிருகண்டர் சொல்லல்,

பாம்பணிந்தகங்காதராசிவ - சாம்புவேவுன்னைநம்பினேனும் *
தேம்புதேநெஞ்சந்தேம்புதேதுயர்தீரவரமருளீஸ்வரா ...*

ஞானச்சதிராள்சொல்லல்,

சாம்பலாண்டிதன்சடையிலிருந்திடுஞ்சங்கரிமனமிரங்கியே *
காம்பரிசுதன்கண்ணிறைந்தாளவந்து வரமருளீஸ்வரி ...*

பொதுவிருத்தம்.

புத்திரசோபத்தினாலே புண்ணியமிருகண்டையர் ... ...*
இத்திசைவனத்தில்வந்து யெழிலுடன் றபத்தைச்செய்ய ...*
அத்திமாமுகனைப்பெற்ற ஐயரும்விடைமீதேறிப் .. ... *
பத்தியாய்வரமளிக்கப் பாங்குடன்வருகின்றாரோ... ... *

கட்டியக்காரன் சொல் வசனம்,

அகோ தெப்படியென்றால் புத்திரசோபத்தினாலே மிருகண்டரும் ஞானச்சதிராளும் வனத்தில்வந்து ஈசனை நோக்கித்தபஞ்செய்யும்போது மிருகண்டருக்குப் புத்திரவரமளிக்கப்பரமசிவனானவர் பார்வதிசமேதராய் ரிஷபவாகனரூடராய் வருகிறவிதங்காண்க,



ஈஸ்வரர்வருகிற-தரு-இ-ம்-சௌராஷ்டிரம்-அடதாளம்,

பல்லவி.

சங்கரர்வந்தார் - விடைமீதேறிச் ...............*
சங்கரர்வந்தார்.........................................*

அநுபல்லவி,

பொங்குங்கதிர்மதிபுனைந்தசடையாளர்...... ........ .....*
பொறிகொண்வெம்புலித்தோற் பொருந்துமிடையாளர் (சங்கரர்)

சரணங்கள்.

துதிக்குமான்மழுவுந் துலங்கிடுங்கையாளர்... ... ........... ... *
துல்லியவிபூதித் துன்னிடுமெய்யாளர் ..................... ... (சங்கரர்)
நாதகீதவேதாந்தர்கள் போற்றிடும்... ......... .............. .......*
நாடுங்கலைக ளைந்நாலுந்துதிசாற்றிடும்........................ (சங்கரர்)
கானிற்றபஞ்செய்மிரு கண்டர்க்குப்புத்ரவரம்.................... .......*
களித்துத்தந்திடுதற்குக் கடினவேகத்தோடு... ...... ........ (சங்கரர்)

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்-சுவாமிக்குச்சொல்

போற்றி விருத்தம்,

அத்தனேபோற்றிபோற்றி அருமறைப்பொருளேபோற்றி *
மூத்தனேபோற்றிமூவர் முதல்வனேபோற்றிபோற்றி ... *

எத்திசையோரும்போற்று மெங்களாண்டவனேபோற்றி *
கர்த்தனேசிலம்பணிந்த கமலத்தாள்போற்றிபோற்றி......*

ஈஸ்வரர் - மிருகண்டருக்கும் - ஞானச் சதிராளுக்கும்

சொல்வாழி-விருத்தம்.

அந்தணர்குலத்தில்வந்த அருமறைதன்னிற்றேர்ந்த... ...*
வித்தைசேர்மிருகண்டாநீ விரைவுடன்வனத்திற்முனும்....*
எந்தன்னைநோக்கிநீயு மெழிற்றபஞ்செய்தத்தாலே...... ...*
புத்தியில்மிகமகிழ்ந்தோம் புகலுவீர்வாழிவாழி............*

வசனம்,

வாழிவாழி மிருகண்டரோ வாழிவாழி ஞானச்சதிரோ நீங்கள்நம்மைத் துதித்துதபஞ்செய்யவந்தகாரியம் என்னசொல்லு மிருகண்டரோ.

மிருகண்டர்-சுவாமிக்குச்சொல்-உலா,

கானகத்தில்வந்துமிகக்காரணத்தாற்றவம்புரிந்தோம்... ...*
மானுமழுவேந்துகின்ற வள்ளலே - ஆனதினல்...... ...*
பாராநீயிவ்வேளை யாலனளித்திடவேயெங்கள்......... .....*
நேராகவந்தொரு மொழிசொல்நின்று... ......... ......*

வசனம்.

அரகரா ஆதியே ஐயனே சோதியே சுடரோ சாம்பவி சங்கரி லோ கரக்ஷி புத்திரவாஞ்சையினலே கானகத்தில் வந்து தேவரீரை நோக்கித் தவம்புரிந்தோம் எங்கள் குறைதீர ஒருமொழி யுரைக்கவேணும் இவ்விட ம்நின்று கர்த்தனே,

சுவாமி-மிருகண்டருக்குச்சொல்உலா.

நின்றுநமைநோக்கிநெடுநாளாய்ச்சுதன்வேண்டு...................*
மென்றுதவஞ்செய்கின்றவிருடிகளே-ஒன்றேகேள்..............*
நீங்கள்முன்புசெய்திருந்ததீவீரேவினையிருக்க... ... ... ... ...*
நாங்களென்னசெய்வோமுனிநாதனே... .. ... ... ... ... *

வசனம்.

கேளுங்கள்இருடிகளே-நீங்கள்செய்த தபமோமகா அருமையான தபந்தான் என்னதபஞ்செய்தும் நீங்கள்செய்தபாவவினை இன்னங்கொஞ் சமிருக்கின்றது ஆகையால் நாம்தானென்ன செய்யலாம் இருடிகளே,

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்-- சுவாமியும்-அம்மனும்-சொல்

கண்ணிகள்-இ-ம்- பூபாளம்- ஆதிதாளம்,

மிருகண்டர் சொல்லல்,

சோதியென்னசொல்வேனென்றுலெங்கட்கினி... ... *
துணைவேறுண்டோயென்-சுவாமி ... ... ... *

சுவாமி-சொல்லல்,

துணைவேறுண்டோவென்றுஞ்சோதிசொரூபமென்றுந் ... *
தொழுதாற்றீருமோமுனியே ... ... ... ... ... *

ஞானச்சதிராள்-சொல்லல்.

ஏதுபாவஞ்செய்திருந்தாலுமனம்வைத்து ... ... *
யீடேறப்பாருந்தேவி... ... ... ... ... ...*

ஈஸ்வரி-சொல்லல்,

ஈடேறப்பாருமென்றுமிருவர்வந்திக்காணி... ... ... *
லென்றுதிக்கிறீர்மாதே ... ... ... ... ... ... *

மிருகண்டர்-சொல்லல்.

நீதியாயுனைநம்பினேமெங்கட்கொரு ... ... ...*
நிலைசொல்லவேணுஞ்சுவாமி ... ... ... ... *

சுவாமி-சொல்லல்.

நிலைசொல்லவேணுமென்றும்நிஷ்டூரமாகநம்மை... ... *
நினைந்ததைச்சொல்முனியே... ... ... ... ... ...*

ஞானச்சதிராள்-சொல்லல்,

மாதபஞ்செய்தோமைந்தனுக்காகயிப்போ ... ...*
வரத்தாவேணுந்தேவி ... ... ... ... ... *

ஈஸ்வரி-சொல்லல்.

வரந்தரவேணுமென்னுவருத்தியேகைகூப்பி... ... ... *
வணங்குவதேனோமாதே... .. ... ... ... ... *

மிருகண்டர்-சொல்லல்

அன்னபூரணியம்மையைப்பாகம்வைத்த ... ... *
ஐயாரக்ஷியுஞ்-சுவாமி... ... ... ... ... ... *

சுவாமி-சொல்லல்,

ஐயாரக்ஷியுமென்று அநுதினந்துதித்தாலும்... ........ ...*
ஆவதுண்டோசொல்முனியே............................ ......*

ஞானச்சதிரான்-சொல்வல்.

அன்னமிகழைகள்செய்திருந்தாலுமனம்வைத்து ... ...*
பீடேறப்பாருந்தேவி.....................................*

ஈஸ்வரி-சொலலல்,

பீடேறப்பாருமென்றுயேனேயிக்கானகத்தி...... ...... ...*
விருக்கிதீர்போம்போம் மாதே.............................*

மிருகண்டர்-சொல்லல்.

மூன்னந்தெய்வமுண்டென்றுயெண்ணிவந்தோம் ...*
முத்தியருளுஞ் சுவாமி...... ---- ...... ...... ... *

சுவாமி-சொல்லல்,

முத்தியருளுமென்றுமுனியேநம்மைத்தொழுதால்...... ...*
மூயற்சியாவதோசொல் மூனியே ... ... ... ... *

ஞானச்சதிரான்-சொல்லல்,

உன்னைவிடதெய்வமுண்டோசந்தானந்தர... ... *
வுத்தரவுதாருந்தேவி......... ......... ...... ......*

சுவாமி-மிருகண்டருக்குச்சொல்-உவா,

உத்தரவுதாருமெனவுதுதியாய்தமைவேண்டி ........... *
பத்துவிதத்திலுந்துதித்தபடியினால்-இத்தினமே... ......*
மதியிலாச்சுதனூறுவயதினிற்றாவோபிள்ளை... ............*
பதினாறிற்சொல்தரவோபணிந்து............ ..............*

வசனம்.

சேருங்கள்தபசிகளே-நீங்கள் மிகவும்நம்மைத் துதிக்கின்ற படியினாலே நூறுவயதிலேமதியில்லாத பிள்ளைவேணுமா-அல்லதுபதினாறுவயதிலே மதியுள்ளதாய்-இயானமிருதியான பிள்ளைவேணுமோ- சொல்லுங்கள் உங்கள்மதியைப் பார்ப்போம்,

மிருகண்டர்-சுவாமிக்குச்சொல்-உவா,

மதியில்லாச்சுதனூறுவயதினிற்றந்தாவதென்ன... .........*
மதிபுனைந்தசங்கரனேநல்லகல்வி-விதியுடைய........ ......*

பிள்ளைபதினாறுகிற்பிரபலமுற்றேயிருக்க.......... ............*
உள்ளபடிசுதன்றுருமொன்றேசொல்......... ......... ... ...*

வசனம்,

அர்கரா நிறைஞ்சனமானசோதியே-அடியார்களுக்கு றாறுவயதில் மதியில்லாப்பிள்ளையைக் கொடுத்தாவதென்ன நல்ல-கல்வியும்- மதியும்-உடையதாய்ப்-பதினாறுவய துள்ளபிள்ளையாகத்தானே கொடுத்து ரக்ஷிக்க வேணுஞ்சுவாமி,

சுவாமி-மிருகண்டருக்குச்சொல்-உலா.

ஒன்றேசொலென்றுசொன்னவொருமையுள்ளயிருடிகளே *
இன்றேசந்தானமதையான்கொடுத்தேன்-கன்றவுங்கள்......*
ஆசிர்மத்திற்புகுந்துயன்புடனேவாழ்ந்திருங்கள் .........*
நேசமுடன்போய்வாரும்நீசமே.....................................*

வசனம்,

கேளுங்கள் இருடிகளே-அப்படியே உங்கள் மனதின்படிக்குப் ப தினாறுவயது பிள்ளையே கொடுத்தேன் நீங்கள் ஆசிர்மம்போய்ப் பிள்ளையைப்பெற்று வாழ்ந்திருங்கள்போய் வாருங்கள் இருடிகளே,

மிருகண்டரும்-ஞானச்சதிராளும் சொல்-வசனம்,

சரணஞ்சரணம் அப்படியேபோய்வருகிறோஞ்சுவாமி.

பொது-விருத்தம்,

பரமனார்மெய்மகிழ்ந்துபதினாறுவயதைப்பெற்ற... .....*
ஒருகுழந்தையின்வரத்தையுவந்துடன்கொடுத்தனுப்ப ... *
விளாவுடனவருஞ்சென்றார் வீச்ணுங்கயிலைசேர்ந்து ... ...*
அருமைசேர்திருக்குங்குண்டோதரனுக்குமறிக்கைசெய்வார்

கட்டியக்காரன்-சொல்-வசனம்.

அகோதெப்படியென்றால் பரமசிவமூர்த்தியானவர் திருக்கடையூர் மிருகண்டருக்குப் புத்திரபாக்கிய மளித்துகயிலாயம் வந்தபிறகு அவ த்தில் நடக்கிற விதங்காண்க,

சுவாமி-குண்டோதரனுக்குச்சொல்-கவி

எத்திசைமுனிவர்க்கெல்லாமெழிலுடன்வயதைப்பெற்ற ...*
பத்தியாய்நலமைபெற்றாளும்பணிகுண்டோதரனேவாராய். *

கட்டியக்காரன்-சொல்-வசனம்.

அதெப்படியென்றால் பரமசிவனுனவர்குண்டோதரனை அழைக்கக்குண்டோதரன்வருகிறவிதங்காண்க,

குண்டோதரன்-வருகிற-த-ரு-இராகம்-மோகனம்-அடதாளம்,

பல்லவி,

வந்தான்வந்தானே-குண்டோதரன் ...... ......*
வந்தான்வந்தானே... ... ...... ..............*

அநுபல்லவி,

வந்தான்கியான மிகுத்து ... ... ... *
அத்திவண்ணனைத் துதித்து... ... ... ...*
மந்தமாய்மனம் பூரித்து ... ... ... *
விந்தையாய்மண்ணிற்குதித்து.........(வந்தான்)

சரணங்கள்.

தேவதேவருங்கொழிக்க..................................*
பூவுலகத்தோர்திழைக்க.............................. ...*
பாவலர்களுஞ்செழிக்க............ .............. ...... ...*
ஆவலாய்ச்சிவனழைக்க;........... .......... ......(வந்தான்)

கண்டவர்கலங் கிடவே...... ................. ... *
மண்டலங்குலுங் கிடவே........... ......... .........*
துண்டர்கள்விலங் கிடவே.............................. ......*
தெண்டினுந்துலங் கிடவே.................. ......(வந்தான்)

வேதியர்களும் புகழ......... ......... ...... ............*
சாதியர்களுந் திகழ......... ............................ *
நீதியோர்களும் நிகழ... ....... ... ...... ...... ......*
ஆதிசிவனூர் மகிழ... ... ..................... (வந்தான்)

குண்டோதரன்-சுவாமிக்குச்சொல்-பாணி,

மானுமழுவுங்கைக்கொண்டு........................*
வானும்புகழுமகத்துடனே........... ... ......*
தானுமிருக்கும்வேளைதனில் ... ...... ..........*
எனையழைத்தீரென்சுவாமி...... ..................*

சுவாமி-குண்டோதரனுக்குச் சொல்-விருத்தம்,

பத்தியரென்றுநம்மைப்பணிகுண்டோதரனேகேளாய்.................*
ருத்திரபதவினுக்குநேர்நாடியினில்நடந்துமெத்த.................. ..........*
உத்தமன்சோழராஜனுறுதியாய்ப்பெற்றெடுத்த... ... ...................*
வித்தையோன்வேந்தன்வீதி விடங்கனையழைத்துவாராய் ...... ......*

வசனம்.

கேளாய் குண்டோதரா ருத்திரபதவியி லிருக்கும் வீதிவிடங்கனை நானழைத்தேனென்று சீக்கிரமாக நீபோய் அழைத்துவாரும் பிள்ளாய்.

குண்டோதரன் - சுவாமிக்குச்சொல் - விருத்தம்,

என்னுமெந்தனைரக்ஷிக்கு மீசனேகயிலைவாசா... ... ... *
புண்ணியசோழராஜன் புவிதனில்விளங்கப்பெற்ற......... *
மண்ணுலகாளும்வீதி வடங்கனையழைத்துக்கொண்டு... ...*
கண்ணிமைக்குள்நடந்து கடிதினில்வருகுவேனே... ...... *

வசனம்,

சுவாமி சுவாமி கயிலாசபதியே தேவரீர் உத்தாரப்படிக்கு ருத்திரபதவிக்குப்போய் வீதிவடங்கனை அழைத்துவருகிறேன் சுவாமி,

குண்டோதரன்-வீதிவடங்கனுக்குச்சொல்-பரணி,

எண்ணுஞ்சிரஞ்சீவிகள்பெற்றே - யிருக்கும்வீதிவடங்கையனே *
அண்ணலழைத்தார்நீயோடி - யருகில்வருவாயிப்போதே. ... *

வீதிவடங்கன்-குண்டோதரனுக்குச்சொல்-விருத்தம்,

நச்சுரிட்டதிக்வாழு மெழில்குண்டோதரனேகேளீர்... ... *
பேசிடாதோடிவந்து பேசிடியிடித்தாற்போல................*
ஓசையாயென்னையழைத்தீ ருயர்கதிதபவல்லோனே......... *
தேசமாயுனாயுமைய்யா நீர்சொல்லும்படிசெய்வேனே... ...*

வசனம்

சரணஞ் சரணங் குண்டோதரமூர்த்தியே தேவரீர் இவ்வளவு தூரந் தன்னைத்தேடி அழைத்தகாரியம் என்னசொல்லுஞ்சுவாமி.

குண்டோதரன்-வீதிவடங்கனுக்குச்சொல்-விருத்தம்,

பத்தியாய்வந்துகேட்கும் யாரையாண்டிருக்கும்... ... ...*
உத்தமசோழராஜனுமைமகிழ்ந்திடுவதாக...........................*

பெற்றிடும்பாலனேகேள் மிருகணனையழைத்து....... ...*
இக்ஷணம்வரவேசொன்னு ரீசர்பால்வருகுவாயே..... ... *

வசனம்,

வாராய் வீதிவடங்கனே கயிலாசபதி யுன்னை அழைத்துவரச்சொன்னார் வாருமப்பா,

வீதிவடங்கன்-குண்டோதரனுக்குச்சொல் - விருத்தம்.

எனையொருபொருளாயெண்ணி யீசனாரழைத்ததென்ன ...*
மனமதையறியவேணு மான்மழுவோனிடத்தில்.............*
தினமிருந்தடிவணங்கிச் சிறப்புறுபவமோகேளீர்............*
கணிதமாய்வருவேன்வாரீர் கந்தன்கண்காண்கத்தானே......*

வசனம்,

கேளுங் குண்டோதரமூர்த்தியே அந்தக்கைலாசபதி அழைத்ததே பாக்கியம் வருகிறேன் வாருங் குண்டோதரமூர்த்தி

வீதிவடங்கன்-வருகிற-ஓரடிதரு-இ-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்;

பல்லவி

வீதிவடங்கன்வந்தான் - ருத்திரபதவிவிட்டு ... *
வீதிவடங்கன்வந்தான்.............................. *

அநுபல்லவி.

ஆதிபராபரனையநுதினமனதினில்..................................*
அன்புடன் றுதிக்குங்குங்கற்னன்-தென்புடனடக்குமன்னன் (வீதி)

சரணம்.

சிரசினில்மகுடமுந்துலங்க - யிருபுசத்...... ... ... ... ... *
தினில்கிரீதியு மிலங்க ... ... ... ... ... ... ... ...*
வரிசையுடனே மணிமாலைகள்மின்னிட ... ... ........ ... *
வானவர்மகிழ்ந்திட தானதருமஞ்செய்வோன்... ... ... ... ... ...*

வாகைபெற்றிடுஞானகுணாகரன்............ ..... .........*
வாசமுற்றிடுதீனதயாகரன் ... ... ... ... ... *

வசையிலாதபுகழ் பெற்றவரோதயன்... ... ... ... .........*
நிசமதானசொ லுற்றசுரோதயன்.......................... ...... (வீதி)

குண்டோதரன்-சுவாமிக்குச்சொல் - விருத்தம்,

கீர்த்தனேகயிலைவாசா கங்கையைத்தரித்தநேசா .... ......*
ருத்திரபதவிதன்னில்விநோதமாய்வாழ்ந்திருந்த............*
தத்துவமானபிள்ளை சபைவீதிவடங்கனைத்தான்..... ... ..*
பத்தியாயழைத்துவந்தேன் பரமனேபோற்றிபோற்றி ...*

வசனம்,

சரணஞ் சரணம் கயிலாசபதியே அடியேன்போய்ருத்திரபதவியி லிருந்த வீதிவடங்கனை அழைத்துவந்தேன் சுவாமி,

வீதி வடங்கன்-சுவாமியைத்துதிசெய்கிற-தரு.
இ-ம், தாததாமக்கிரியை- ஆடதாளம்,

பல்லவி,

ஈசனேசரணம் - கைலாச - வாசனேசரணம் .........*

அநுபல்லவி.

மாசில்லாதமழுமான்தரித்தகையனே .......................*
ஆசையாய்த்தரிசனங்காணவந்தோனயனே......... (ஈசனே)

சரணங்கள்,

கெங்கையைச்சிரசினிற் சீர்த்தியாகவைத்த........................*
சங்கராவுன்றனைச்சரணமெனவடைந்தேன்....... ..............(ஈசனே)
அரவாபரணமணிந் தாதியானவிநோதா.................... ...*
பரமதேவனேவுந்தன் பாதங்காணவந்தேன் .................. (ஈசனே)
வெள்ளைமேனியனே விடைமீதில்வீற்றிருக்கும்... ... ...*
வள்ளலேவுன்றிரு வடியைக்காணவந்தேன் ... ... ... (ஈசனே)

வீதிவடங்கன்-சுவாமிக்குச்சொல்- விருத்தம்.

கைதனிற்பாசமேந்தி காளிதன்னுடனேநின்ற ... ... *
வையகமதிக்கவாடி வந்ததோர்சிவனேபோற்றி ... ... *
துப்பவேபதவிதன்னிற் றுலங்கவேயிருந்தவென்னை ... *
ஐயனேயழைத்ததென்ன வருளுறவீரெனக்குத்தானே... ...*

வசனம்

சரணஞ்சரணம் கைலாசபதியே-ருத்திரபதவியி லிருந்த வென்னை அழைத்தகாரியம் அருளிச்செய்யவேணுஞ் சுவாமி,

சுவாமி-வீதிவடங்கனுக்குச்சொல்-விருத்தம்,

அறிக்கைசெய்வீரொன்றெந்த னடியினைத்தொழுதபாலா... *
திருக்கடையூரில்வாழுஞ் செயமிருகண்டருக்கு... ... ...*
உருக்கமாய்வரமளித்தே னுண்மையாய்த்தருகவேணும்... *
பெருக்கமாய்நீயவர்க்குப் பிள்ளையாயுதித்திடாயே... ...*

வசனம்,

வாராயப்பா வீதிவடங்கா- நீருத்திரபதவியில் என்றுஞ் சிரஞ்சீவியாய் வயதுபெற்றவனுனபடியினாலே இப்பவும் நீஇந்தவயதை பெற்றிருக்கப் பூரணமான வரமளித்தேன் நீமிருகண்டர் தேவியாருடைய வயிற்றிற் ஜென்மிக்கத் திருக்கடையூருக்குப்போவாயப்பா,

வீதிவடங்கன் -சுவாமிக்குச்சொல்- விருத்தம்,

தேவர்சொற்படியேயந்தச் செயமிருகண்டனார்தன்... ... *
றேவிதன்றிருவயிற்றிற் ஜென்மிக்கப்புத்திபுத்தி .. ... ...*
தேவர்கள் துதிக்கும்நாதா சிவசிவாகயிலைவாசா... ... ...*
தேவரீரென்னைக்காக்கத் திருவடியோற்றிபோற்றி...... ...*

வசனம்,

சுவாமிகைலாயபதியே அடியேன்ருத்திரபதவியில் என்றுஞ்சிரஞ்சீவியாய் வயதுபெற்றிருந்த என்னைப்பூமியிற்போய்த்தபசிகளுடையவயிற்றிற் பிள்ளையாய்ப்பிறக்கச் சொன்னீர் அப்படியேஜென்மிக்கிறேன் அவ்விடத்திலும் இந்தவயதோடும் வாழ்ந்திருக்கவுமது திருவாக்கனுக்கிரகஞ்செய்தனுப்ப வேண்டுஞ் சுவாமி,

சுவாமி-வீதிவடங்கனுக்குச் சொல்-விருத்தம்,

வயதுபெற்றிருந்தவீதிவடங்கனேகேளாயென்றும்........*
வயதுண்டாகவும்நீவாழ்கவரமதுமிசவளித்தேன்.............*
வயதினில்மிகுத்தவந்தமாமிருகண்டன்றேவி...... ........*
வயிற்றினிற்றரிப்பதற்குமைந்தனேநடத்திடாயே... ... ...*

வசனம்,

வாராய்வீதிவடங்கா - இப்பவும் நீருத்திரபதவியில் என்றும் சிரஞ்சீவியாய் வயதுபெற்றவனுன படியினலே இப்போது நீ இந்தவயது பெற்றிருக்கப்பூரணமான வரமளித்தேன் நீமிருகண்டருடைய தேவியார் வயிற்றிற்சென்மிக்கத் திருக்கடையூருக்குநடந்திடுவாயப்பா,

வீதிவடங்கன்-சுவாமிகளுக்குச்சொல்-வசனம்

அப்படியேநடக்கிறேன் உமதுபாதாரவிந்தமேதுணை சரணஞ் சரணஞ்சுவாமி,

கட்டியக்காரன்-சொல்-வசனம்,

அகோதெப்படியென்றால் இப்படிக்குக் கயிலாயபதியின் அநுக்கிரகம்பெற்று ருத்திரபதவியிலிருந்த வீதிவடங்கன் திருக்கடையூர்வாழ்கின்ற மிருகண்டர் தேவியான ஞானச்சதிராளுடைய வயிற்றிற்பிள்ளையாக வந்துசென்மிக்க அதின்பின்பு வனத்தில் நடக்கிறவிதங்காண்க,

மிருகண்டர்-ஞானச்சதிராளுக்குச் சொல்-விருத்தம்,

தங்கையேசதிரோகேளாய்நாம்செய்ததபோபலத்தால்....................*
பொங்கமாயீசர்வந்துபுதல்வனையளித்தார்பெண்ணே....................*
அங்கமுங்குளிர்ந்தோமிந்தஅடர்வனந்தன்னைவிட்டு....................*
சிங்காரவாசிரமம்போய்ச்சேருவோம்வாராய்கண்ணே,....................*

வசனம்,

வாராய்பெண்ணே ஞானச்சதிரோ - நாம் மனதொன்றாகச்செய்த தபோபலத்தினலே உடனேயீசர்வந்துபுத்திரபாக்கிய மளித்தார் ஆகையால் முத்திமோக்ஷம் பெற்றோம் இனிநாம்நமது ஆசிரமம்போய்ச் சேருவோம் பெண்ணே.

முதல்-சிஷ்யன்-மற்றசிஷ்யருக்குச்-சொல்-விருத்தம்.

கேட்டுதாதம்பீயையர்கிளிமொழியம்மையாரை.................*
நாட்டமாயழைத்தாரிப்போநம்மையெலாமழைக்கவில்லை... *
வீட்டுக்குவாடாவென்றுவேண்டிடும்பிறசெல்லோரும்......*
நீட்டிப்போட்டாகப்போவோம்நிலத்திளிற்படுத்திடமோ...... *

வசனம்.

கேட்டோதம்பி ஐயர்சொன்னசொல் ஏதடா யிர்தக்காலம் - அல்ல

வே-நமக்குத்தான் ஒருவரங்கேட்டாரா கேழ்க்காதவராயினும் நம்மைத்
தான் வீட்டுக்குவாருங்களென்று முன்னடி அழைத்தாரா-அதையும்விட்
டுவிட்டு அம்மாளை அழைத்தாரோ அதுசரியா இப்பவும் நம்மை யெல்லா
ம்வீட்டிற்கு வாருங்களென்று வேண்டி வேண்டி அழைக்குமட்டும் நாம்
பிகுவாயிருந்தால் நமக்குவரம் அகப்படும் அதுவரைக்கும் ஒருவருடனே
யொருவர் பேசாமல் பூமியிலே கவிழ்ந்துபடுத்துக்கொள்ளுங்க ளப்பா
தம்பிமார்களே,

மிருகண்டர்-சிஷ்ஷர்களுக்குச் சொல்-விருத்தம்,

திணிமனோன்மணியேஞானச்சிரோன்மணியானசீஷா......*
மணிகெண்டாமணியேமெத்தமவுனசிந்தாமணியேகேளாய் *
பணிவிடைசெய்யும்நீங்கள் பாவையும்நாமுமாக...... ......*
அணியணியாய்நடந்துஆசிர்மம்போவோம்வாரீர்... ... ...*

வசனம்.

ஆரடா அடாசிஷ்ஷர்களே-நாம் ஆசிர்மம்போய்ச் சேருவதாக அழை
த்தால் ஒருவரும் பேசாமலிருப்பதென்ன இடக்கானவார்த்தையைக் கொ
டுப்பதென்ன அடாவுங்களுக்கு ஏதோகொஞ்சங்குறைவு வந்திருக்கிறதை
ப்போலத் தோற்றப்படுகின்றது அந்தக் குறையைச் சொன்னீர்களானல்
உங்கள் மனக்குறையைத் தீர்த்து அழைத்துப் போகிறேன் சொல்லு
ங்களப்பாசிஷ்ஷர்களே.

சிஷ்ஷர்கள்-மிருகண்டருக்குச் சொல்-விருத்தம்,

தேவரீர்தவத்தைச்செய்திர்சிவன்வந்துவரமளித்தார்....... ..........*
ஆவலாய்க்கார்த்திருந்தும்அடியார்கள்வீணதானோம்.............. ...*
சேவகப்பசகளுக்குத்தேவைதானென்றுமில்லை... ... ... ... ...*
தீவரமாகயிந்தச்சிறுபுட்டைப்பருக்கவேணும்... ... ... ...............*

வசனம்.

சுவாமி சுவாமி எங்களுக்குக்குறையொன்றிருக்கின்றது அதென்ன
வென்றால் உமக்குமாத்திரம் ஈசர்வந்துவரமளித்தார் நாங்களிது வரைக்
குங் காத்திருந்தும் வீணாய்ப்போனோம் இப்பவும் எங்களுக்கு வேண்டி
யது ஒன்றுமில்லை இந்தப்புட்டை பெருக்கும்படியாய் வரங் கொடுக்க
வேண்டுஞ் சுவாமி,

மிருகண்டர்-சிஷீருக்குச் சொல்-விருத்தம்;

பூமியிலில்லாவார்த்தைப்புதுமையாய்ச்சொல்லவந்தீர்...... *
ஆமடாசிஷீரேநீராசையாய்க்கேட்டபோதே... ... ...... *
பாழடைந்திட்டாற்போலப்பருத்திடவேணும்புட்டை......*
நாமிதோவரமளித்தோம்நடந்திடீர்மனைக்குப்போவோம் *

வசனம்;

டளா டளா-பூமியிலில்லாத வார்த்தையாய்ச் சொல்லவந்தீர் சரிபெ
க்குமா-நல்லது வுங்களுக்கேன் குறைவாயிருக்கவேண்டும் நீங்களே-ஆ
சையாகப் புட்டைபெருக்க வரங்கேட்டபடியினாலே அப்படியேஇன்னம்
புட்டைபெருக்க வரமளித்தேன் நடந்துவாருங்களப்பா சிஷீர்களே;

சிஷீர்-சொல்-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்;

பல்லவி

சந்தேபருத்துதே-இது-மெத்தவருத்துதே........*

அநுபல்லவி

இத்தைஎப்படியெடுப்போந்தம்பி.......................... *
யேதடாவுன்னுது-யீதடாயென்னுது................ (சந்தே)

சரணங்கள்

மோசம்வந்துதே-அப்போ..................................*
ஆசை தந்துதே... ... ... ... ... ...... ... *
வீசிநடப்பதெப்படி-தம்பி.................. ... ... *
விட்டுப்போகுதே-புட்டையுந்நோகுதே...........(சந்தே)

ஆட்டிப்புடைக் குதே இதே..............................**
நாட்டித்துளைக் குதே..................................*
ஓட்டிநடப்பதெப்படி-தம்பி... ... ... ... ... *
ஒடுக்கிப்போடுதே-கெடுக்கத்தேடுதே... ... ...(சந்தே)

காலும் நையுதே-மெத்தக்...... ... ... ... ... *
கோலஞ்செய்யுதே ... ... ... ... ... ... ...*
ஞாலமுனிவர்செய்ததுந்தம்பி........ ... ... ..........*
ஞாயமோவது-வுபாயமோயிது ... ... ... (சந்தே)

சீஷர்-மிருகண்டருக்குச்சொல் - விருத்தம்,

கொப்பனவரமளித்த கோலமாமுனிவர்கோவே... ... *
அப்பனேயிதையெடுக்க ஆகுமோயெங்களாலே ... *
தப்பிதம்வந்ததற்குத் தாடையிற்போட்டுக்கொண்டோம்.. *
இப்பவும்வவிசிறுக்க யினிபதாய்த்தயவுசெய்வீர்... ... *

வசனம்,

சுவாமி-சுவாமி நீங்கள்தியாமல் மாட்டிக்கொண்டோம் புத்திவந்தி ஆ தாடையிற்போட்டுக்கொண்டோம் இதையெடுக்க எங்களால் ஆகாது போதும்போதும் எப்போதும்போல இந்தவவிசிறுக்கவரங் கொடுத்துர க்ஷிக்கவேணுஞ் சுவாமி.

மிருகண்டர் சீஷர்களுக்குச்சொல்பாகணி,

வருத்தந்தெரிந்துதாயிப்ப - மதியுந்தெளிந்ததாநானும் *
உருக்கமாகவரமளித்தேன் - ஓடிநடந்துவருவீரோ ...... *

சீஷர்கள்சொல் - வசனம்,

மகாசந்தோஷம் மகாசந்தோஷம் அப்படியே இதோ வருகிறோம் சுவாமி,

மிருகண்டர்-சொல்-தரு- இ-ம்- புந்நாகவராளி - மீசர்தாளம்,

பல்லவி,

நடந்துவாமயிலே - பதிசேரவேணும் ... ... *
நடந்துவருவாயிலே ... ...... ... ... ... *

அநுபல்லவி.

நடந்துவாயிந்த - அடர்ந்தவனம்விட்டு.............. ......*
வுடந்தையானபெண்-மடந்தையேயினி............ (நடந்து)

சரணங்கள்.

எண்ணினப்படி-யிஞ்ஞானவனத்தினில்...... ... ... ...*
அண்ணலொருவரங்-கண்ணயீந்தனர்..............(நடந்து)
நந்திவாகன-ரித்தவேளையில்.......... .......................*
வந்துநமக்கொரு-மைந்தனளித்தனர்..... ........(நடந்து)
நன்மையில்லாம-லுள்ளபடியிங்கு ........................ *
அன்னல்நமக்கொரு-பிள்ளையளித்தனர்...............(நடந்து)

மிருகண்டர்-சிஷர்களுக்குச்-சொல்-விருத்தம்.

அரிதானபாலரோநாமருந்தவஞ்செய்பவீசன் ... ... *
பெரிதானவரமளிக்கப்பேதையநாளுமாக... ......... ...*
விரிவானவாசிரமத்தின்விடுதிக்குவந்தோமப்பா... .........*
பரிவானவாசனத்தைப்பவளிக்கப்போடுவீரோ...............*

வசனம்,

ஆர்டா அடா சிஷரே நாம்கானகத்தில் தபஞ்செய்ய ஈசர்வந்துவரமளிக்கவரம்பெற்றுக்கொண்டு பெண்ணுளாகிய ஞானச்சதிராளும் நீங்களும் நானுமாக ஆசிரமம் வந்துசேர்ந்தோம் சற்றுநேரம் பவளிக்கவேணுமென்ற ஆசையால் ஆசனத்தைப்போடும் பிள்ளாய்;

சிஷர்-மிருகண்டருக்குச்சொல்கவி,

சித்தனேதேவர் - நித்திரைசெய்யப்.................. *
பத்திரியாசன - மத்தைநாம்போட்டோம்..............*

மிருகண்டர்- ஞானச்சதிராளுக்குச்சொல் கவி,

தவனமாய்க்கானில் - சிவனருள்பெற்ற........ ... ...*
தவநிலைபெண்ணே - பவளிக்வாராய்.......... ... ... *

ஞானச்சதிராள்-மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்,

என்னிட்பிராணநாதா யீசனுந்தன்னைநோக்கி...... .........*
முன்னம்நாம்தபத்தைச்செய்து மூர்த்தியைக்கண்டுபுத்ரன் *
தன்னைநாம்வாங்கிவந்த தயவதினாலேகர்த்தன்......... ......*
சொன்னசொற்படிமுடித்தார் சோதியைத்தொழுதிடடோ *

வசனம்,

கேளும் என்பிராணநாதரே அடியாளைப்பவளிக்கச்சொன்னீர்மெய்யே நாம் தபசுசெய்துவந்த தபோபலத்தினாலேயும் சாம்பசிவமூர்த்தியின் அநுக்கிரகத்தினாலேயும்,சிறுவனைப்பெறுவதான வேளைபோலக்காணுகின்றது அதுவெப்படியென்றால் நான்வழியில்வரும்போதுதானே அடிவயிறு கனத்துவந்தது தேகம்பாரித்திருந்தது இப்போது இரண்டுபக்கமும் விட்டுப்போகுது தேகம் ஒருவகையாயிருக்கவில்லை நான்சிறுவனைப்பெறுகிறவரைக்கும்தேவரீர்சிவத்தியானத்திலிருக்கவேணும் சுவாமி,

மிருகண்டர்-ஞானச்சதிராளுக்குச்சொல்-கவி,

அப்படியேயுன் - சொற்படியேசிவன்... ............... ...*
பொற்பதங்காணவே - சற்பனைசெய்வேன்..... ..... ...*

ஞானச்சதிராள்-கர்ப்பவேதனையால்-சொல்-சீசபத்தியம்-

இ - ம் - கண்டா.

ஆதிமூலப்பொருளமெய்ச்சுடரோயென்............ ... ...... ..... *
ஆலேயினிபாகுமோரிந்நாளில்வருவாய்........ ... ........ ... .. *
காதைவந்திப்படிக்கப்பென்றடைக்குதே ... ...... ......... .... *
கயிலாசவாசனேகருணைபுரிவாய்.......... ...... ....... *
மெய்தன்னிலெங்கினும் வீணைபோல்மீட்டுதே........ ...... ..*
மெய்யனேயொருவர்மெள்ளதருவாய் ........ ........ ..*
வாதையிப்படிபடவைத்தாயோகர்த்தனே............. ..... *
வள்ளலேயென்னிட மனதையறிவாய் ... .. ........ .... *
வந்துநீயெந்தனை யிந்தவேளை... ... .... ... *
தொந்தமாய்க்காத்திடும் நந்திவண்ணா...... ... ... *
நொந்துநொந்தழுகிறேன் சிந்தைவைத்தீர்......... ... *
கந்தனைப்பெற்றிடும் அத்திவண்ணா... ... ... ... ...*

இதுவும்-ஞானச்சதிராள்சொல்-சீசபத்தியம்.

இ - ம் - கண்டா,

நந்திவண்ணாவுனைநம்பினேனம்பினேன்... ... ... ... ... *
நாகபூஷணசிவநாதநாதா... ... ... ... ... *
இந்தவேளையினிலே யெனைக்காருமீசனே ... ... ... ...... *
இவ்வேதைபடவேனோ யீசயீசா ... ... ... ... ... *
உத்தனருளாச்சுதேவுள்ளமலதையேதிது... ... ... ... ... *
வுண்டில்லையென்றுதே வுமையேவுமையே... ... *
சித்தைபயமானனேசெல்வனைக்காணனே ... ... ... *
திரிபுரமெரித்திடுந்தேவதேவா... ... ... ... ... *
சித்தம்வைத்தெந்தனையித்தினமுமே... ... ... ... *
காத்தனேகாத்திடீர த்திமுகனைப்... ... ... ... *
பெற்றிடும்வல்லவனேபத்தியுள்ள ... ... ... ....... *
புத்திரனைப்பெற்றிடசித்தம்வைப்பாய்............. ...... *

ஞானச்சதிராள் - கர்ப்பவாதனையால்-சொல்-தரு
இ-ம்-ஆகிரி- அடதாளம்,

பல்லவி,

கர்த்தனேயிதவாய்ச் - செல்வனைநான்.................*
பெற்றிடவுதவாய்.....................................*

அநுபல்லவி,

அத்தமுகனைப்பெற்ற - வுத்தமயேசனே.............. *
இத்தனைவேதையில்-வைத்தாயோயீசனே ... (கர்த்தனே)

சரணங்கள்,

ஏந்தனுள்வயிற்றினித்- பந்தாகச்சுருட்டுது... ... ... *
இந்தப்பக்கமிரண்டும்-நொந்துநொந்துருட்டுது... ...... (கர்த்தனே)
இத்தனைவேதையில்வைத்தாயோயீசனே... .. ... *
குத்துதென்குலைமார்பில்-சத்திமயேசனே ... ... ... (கர்த்தனே)
எப்படியெப்படி- அப்பணிசடையோனே.................*
இப்படிப்படுவதும் ஒப்புமோகடையூரானே............... (கர்த்தனே)
பிள்ளைபெற்றிட சஞ்சலந்தீர்த்திடும்.................. *
செஞ்சடையீசனே டஞ்சைசபைக்காத்திடும்...... ............(கர்த்தனே)

ஞானச்சதிராள் சொல்-கொச்சகம்-

ஆதியபராபரஞ்சுடரோ யாதரிக்குமுமையவளே... .......... ......*
நீதியுடன்சுதமளித்து நிஷ்டூரமாகயிப்போ.............. ........*
வாதைக்கிடம்வைத்ததென்னவயிறுளப்புக்கென்னசெய்வேன் ...*
காதகமிநஞ்சத்தைவிடடுக்காத்தருளுமெய்ப்பொருளே... ......*

வசனம்.

அரகரா அரகரா ஆதிபரஞ்சுடரோ ஆதரிக்குமநோன்மணியே அடியார்களுக்குப் புத்திரபாக்கியமளித்து இப்பேர்கொத்த வேதனையைக் கொடுத்ததென்ன அடியாளெவ்விதம்பொறுப்பேனென்னைக்காத்தருளும் ஈசா-ஈசா,

பொதுவிருத்தம்,

தத்தைநேர்மொழியாள்ஞானச்சதிராளுங்கெர்ப்பமாகி... *
மெத்தவுஞ்சிவனைநோக்கி வீதிட்டுப்புலம்பும்போது......*

உத்தமர்பாகம்வாழு மூமையவள்காதிற்கேட்டு... ... *
கர்த்தனுக்கோர்த்தவார்த்தைக்கடிதினிலுரைக்கின்றாளே ... *

கட்டியக்காரன்-சொல்வசனம்.

அகோதெய்படியென்றால் இப்படியாகஞானச்சதிராள் கெர்ப்பவேதனைப்படுகின்றதைக்கேட்ட உமைபவளானவள் மனந்தாளாமல் தன்னுடையநாயகராகிய பரமசிவனுக்குச்சொல்லுகிறவிதங்காண்க.

ஈஸ்வரி-சுவாமிக்குச்சொல்-கொச்சகம்.

மாசில்லாமணியே மாகயிலைவாழ்பரமே ... ... *
ஆசையுடனேவனத்தி லருந்தவத்தைச்செய்வதற்கு... ......*
பாசமுடன்வரமளித்தீர் பாவைஞானச்சதிராள்...... ..... *
ஈசாயீசாவென்னவேயேங்கித்தவிக்கின்றாளே..................*

வசனம்,

சரணஞ்சரணஞ் சுவாமி தேவரீர்இப்போது வரமளித்திமோ திருக்கடையூர்மிருகண்டமகாமுனியினுடையதேவியான ஞானச்சதிராள்கெர்ப்பவேதனையினாலேமிகவும் ஈசாஈசாவென்று பரதவிக்கின்றாள் அதற்குக்கிருபையருளிச்செய்யவேணுஞ் சுவாமி.

சுவாமி- ஈஸ்வரிக்குச்சொல் கொச்சகம்,

ஏங்கித்தவித்திடுமா துக்கிந்நேரம்நீயுமொரு .. ... *
பாங்கியர்போல்வடிவு கொண்டு பக்கலிற்போயுதவியதாய் ... ...*
தூங்குமஞ்சமேல்வளர்த்திச் சுதன்றுப்பேவுருகச்செய்ய ...... ...*
மாங்குயில்லயிடப்பாகம் வாழ்மனைவிபோய்வாராய் ... *

வசனம்,

கேளாய் என்பிராணநாயகியே அந்ததபசிகளுக்குப் பிள்ளையளித்தபோதே முழுமையுங்காக்கத்தான்வேணும் இப்பவும் நீஒருமருத்துவக்கிழவியைப்போலவே வேஷங்கொண்டு அந்த ஞானச்சதிராளிடத்திற்குப்போய் அப்பெண்ணைக்காத்து ரக்ஷித்துதாய்வேறுபிள்ளைவேறுகச்செய்துபாலனைவாழ்த்திவாராய்பெண்ணே.

ஈஸ்வரி-சுவாமிக்குச்சொல்-வசனம்,

தேவரீர்சொன்னபிரகாரம்அப்படியே போய்வருகிறேன் சுவாமி.

பொதுவிருத்தம்,

மெய்யனுரிடத்திலம்மன்விடையதுபெற்றுக்கொண்டு......*
வையமீதினிலேமெள்ளமருத்துவக்கிழவியைப்போல்......*
கையிலேதடியொன்றாணிக்கண்களைச்சிமிட்டிக்கொண்டு...*
தையலாளெனும்பெண்ஞானச்சதிராளினருகில்வாறாள் ...*

கட்டியக்காரன்-சொல்வசனம்,

அகோதெப்படியென்றல் இப்படியாக ஞானச்சதிராள் பிரசவவேதனைகாலத்தில்ஈஸ்வரி பரமசிவனிடத்தில்விடைபெற்றுக்கொண்டுமருத்துவக்கிழவியைப்போல வேஷம்பூண்டு ஞானச்சதிராள் அரண்மனைக்குவருகிறவிதங்காண்க,

மருத்துவக்கிழவி.வருகிற-தரு-இ-ம்-புன்னுகவராளி-ஆதிதாளம்

பல்லவி.

கிழவியும்வந்தனளே-மருத்துவக்.........................*
கிழவியும்வந்தனளே.........................*

அநுபல்லவி,

கிழவியம்வந்தனளழகொழுகிடவிதோ..............*
முழமுழத்தோப்புமுலைகளுமாடவே......(கிழவியும்)

சரணங்கள்.

வாயினிற்சுங்காணும்வைத்து.........................*
வாறுகள்தான்பெற்று.........................*
தாயினுந்தாயதுபோலமெள்ளத்.........................*
தள்ளாடித்தள்ளாடிக்கொண்டிதோ..............(கிழவியும்)

கொங்காணிமுகமும்படைத்துக்.........................*
குலுங்கக்குலுங்கநகைத்து.........................*
சிங்காரங்கெட்டிமுங்குழிக்கண்களைச் .........................*
சிமிட்டிச்சிமிட்டிக்கொண்டுமேயிதோ..............(கிழவியும்)

கூனுமுதுகுமாகக்காட்டிக்.........................*
கோண்டுகைகளைநீட்டி.........................*
ஞானச்சதிராளிடவேதைப்பராட்டி.........................*
நயத்துடனேவெகுமுகங்களைக்காட்டி..............(கிழவியும்)

வேறு-தரு,

தலங்கெடக்குதுகழுவாமல்.............................. *
கலநெல்லுகெடக்குதுநோம்பாமல்...................... *
நிலத்தரிசிகிடக்குதுருத்தாமல்........................... *
தோமிலேகேவுராளாத்திடவும்.............................. *
குந்தாணியுன்னைநாளுமிப்போ.............................. *
கூத்துப்பார்க்கச்சொன்னேனே.............................. *
கூத்துவந்துகும்குமென்ன.................................... *
கூத்திலேசட்டச்சிலையில்லை... ... ....................... *
வந்தாளேவந்தாளேயிதோ.................................... *
மருத்துவக்கிழவியும்வந்தாளே ... ........................ *

மருத்துவக்கிழவி ஞானச்சதிராளுக்குச்-சொல்-கவி

ஏனடியம்மா-யீசனைத்துதித்தாய்........................... *
மானிடசெனனமே-வாதைவைச்சொல்வாய்..................... *

வசனம்.

அடியம்மாஞானச்சதிராளே (ஏனடியம்மா) ஈசனைமிகவும்-நினைத்து நினைத்துப் புலம்புகின்றாய் உனக்கு என்னமாய்த் தானிருக்கின்றது சொல்லடியம்மா,

ஞானச்சாதிராள்-சொல்-தரு-இ-ம்-கண்டா-ஆதிதாளம்,

பல்லவி,

என்னமென்றுரைப்பேன்-அம்மாஅம்மாநான்... ... ... *
எப்படிப்பொறுப்பேன்.............................. *

அநுபல்லவி,

இன்னதின்னதென்றென்னமாய்ச்சொல்லுவேன் ... ... *
எப்பவாகிலுமிப்படிகாணேனே ... ... ...... ...(என்ன)

சரணங்கள்.

மைந்தனுசையாலேமகுணனுடன்கூடி...... ...... ... ... *
மாதபஞ்செய்தேனே-ஆதலாலேயிதை......... ...(என்ன)
அம்மணிமார்பைபடைக்குதென்னடி......................... *
அறிவிலேனிதைத்தெரியவுரையடி...... ...... ......(என்ன)
பக்கத்திலேதோபதைக்குதுவுதைக்குது.................. *
பாரடியென்னைநீகாரடியம்மணி ...................... (என்ன)

நீசராலேவந்தயிடிதிந்தையோயிது.......... .......... *
எப்படியம்மணி யிப்படிநேருகுதே.................(என்ன)

மருத்துவக்கிழவி-ஞானச்சதிரானுக்குச்சொல்-கவி.

உத்தமிமாதேஒருபயமில்லை...... ...... ...... *
கர்த்தனைத்துதிசெய்கார்க்கிருரம்மா....... ...... ...... *

ஞானச்சதிரான்- சொல்-கந்தார்த்தம்;

மாதேகர்த்தனை மனதிலெண்ணினேன்வாடி ... ........ ... *
யேதோயித்துடியிடைநேருகுதயென்ன ... ... ... *
ஆதோவறிகிலனில்லடியிதுதில்லைசொல்லடி ...... ...... *
ஆதிசோதியானேரவர்சுரூபம்...... ................ *
அறிகிலேன்ம்மாசங்கரன்குணந்தெரிகிலேனம்மா ... ... *
அறிகிலேனெப்போதும் அறிகிலேனிப்படி ... ... ... *
திருபுரமெரித்திடும்பரமன்செய்திடுங்கோலம்-(அறிகிலேன்)

வேறு- கந்தார்த்தம்;

சிவனேசிவனேசிருடன்வன்மதிற்செய்த......... ...... *
தவமோதனையினிற்றள்ளுதுதரிக்கிலேதானே.......... *
அவமாயேனோஅலைவதுயென்னிட--அப்பா....... ....... *
ஒவ்வுதோயிதுவுன்மனமிதங்கியிங்கு .................. *
ஓடிவாஅரனே - என்னைநீயிப்போ - தேடிவாபரனே...... *
ஓடிவாவுமையுடன்-கூடியநாதனே.......................*
காடுவந்தளித்தாற்போலோடிவந்தருள்புரி..(ஓடிவா அரனே)

ஞானச்சதிரான்-சொல்-கொச்சகம்;

வள்ளலேசங்கரனேமான்மழுவுந்தரித்தவனே... ... ..... *
எள்ளுக்குள்ளாயிருந்தயெண்ணெயும்வேறானதுபோல் ... *
பிள்ளையைநானுமதருளாற்பெற்றெடுத்தேன்சங்கரனே... *
வுள்ளநாள்சுகமடையவொருமனதாய்க்கார்ப்பாயே........*

வசனம்;

அரகரா மான்மழுவணிந்த மயேசனே பேதைக்கிதங்கும் ஈசனே வாதையைத்தீர்த்த கர்த்தனேகயிலாசபதியே உமதருளினாலே பிள்ளையைப்பெற்று சுகமதாகினேன் இனிமேலும் எங்களைக்கார்த்து ரக்ஷித்தருளிப்பதவிதாருங்கர்த்தனே

கிழவி-ஞானச்சதிராளுக்குச்சொல்-கவி,

உத்தமிமாதே உன்மகன்வாழி............*
சித்தமுமகிழச் செலவ துதாராய்... ...... *

ஞானச்சதிராள்- கிழவிக்குச்- சொல்-கவி.

பாட்டிநீகேளாய்பாக்கியமேயுன்னைக்.........  ......*
கூட்டிற்றுதெய்வங்குறைவில்லைநடவாய்...............  ...*

சிஷீர்கள்-மிருகண்டருக்குச் சொல் கவி,

சந்தோஷீஞ்சுவாமி சந்தோஷமிப்போ...  ...  ...  ... *
சந்தோஷம்பின்னுஞ்சந்தோஷந்தானே  ...  ...  ... *

மிருகண்டர்-சிஷீருக்குச்சொல்-கவி,

என்னடாசிஷீர்களே என்னடாவுங்களுக்கு...  ...  ...  *
என்னடாவந்ததுதான் என்னடாசொல்வீரோ ...  ...  ... *

சிஷீர்-மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்,

அப்பாவுமிறந்தானையாயாங்களுக்கினிமேலத்தை........................ *
செப்பமாயெடுத்துப்போயிசெண்டுகளாடிபின்னும்..............  ......*
கொப்பாகக்குதித்துக்கோலிகுண்டுகளாடிமொச்சை... .........  ......*
பப்புகள்தின்னுக்கொண்டேவிளையாடுவோமே......  ......  ......... *

வசனம்.

சுவாமி சுவாமி அப்பாவுமிறந்தான் இனிநாங்க ளவனை யெடுத்துக் கொண்டுபோய் பப்புகள்வாங்கிக்கொடுத்து-கெச்சக்காய்-செண்டு -கோட்டியாடி குதித்துக்குதித்துபலிசப்பளாங் குடுகுடு ஆடிவருவோஞ்சுவாமி:

ஞானச்சதிராள்-மிருகண்டருக்குச் சொல-மட்டு-விருத்தம்,

வேதாமுனிநாதாசரணம்...  ...  ...  ...  ... *
ஆதிமூலப்பொருளாலே  ...  ...  ...  ...  ... *
நாதாயரனோர்புத்திரனிப்...  ...  ...  ...  ... *
போதேபெற்றுவந்தேனே  ...  ...  ...  ... *

மிருகண்டர்-ஞானச்சதிராளுக்குச்சொல்-விருத்தம்.

திருவுளச்செயலினாலேசென்மித்தபாலனுக்கு  ...  ...  ...  ... *
மருவிபேவாழ்த்தியாளு மார்க்கண்டனெனும்பேர்தந்தேன்  ... *
அருமையாய்தேவர்வாழ்த்த அருமறைமுனிவர்போற்ற...  ...  ... *
பெருமையாய்நீபுமித்தப்பிள்ளையும்வாழ்கவாழ்க  ...  ...  ... *

வசனம்,

ஆராய்பெண்ணே ஞானச்சதிரோ- அந்த திருவுளச்செயலினாலே உனது வயிற்றிற் சென்மித்த இந்தப் பாலனுக்கு மார்க்கண்டனென்று பேர்கொடுத்தேன் - இனி இந்தப்பிள்ளையும் நீயும் சிரஞ்சீவியாய் வாழ்க வாழ்க, இப்போது யிந்தப் பாலகனைத் தொட்டிலிலே வளர்த்தி தாலாட்டும் பெண்ணே ஞானச்சதிரே,

ஞானச்சதிராள்-தாலாட்டுகிற-கண்ணிகள், இ-ம்-நீலாம்புரி. ஆதிதாளம்

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ... .. ... ... *
சீரானமாமுனியேசெல்லவமேயென்கண்ணே ... ... *
பேரானபாலகனேபிள்ளைகலிதீர்த்தவனே... ... (ஆராரோ)
பொன்னேநவமணியேபட்சமோங்கவந்தவனே ... ... *
மின்னேதிருவழகேவிளங்கவந்தமார்க்கண்டா......(ஆராரோ)
குச்சரிஷிவங்கிஷ்டமே-குலக்கொழுந்தேயென்கண்ணே......*
உச்சிதமாயபசுடரே-உத்தமனேகண்வளராய்......(ஆராரோ)

மிருகண்டர் சிஷர்களுக்குச் சொல்-விருத்தம்,

சிஷரோகேளீரெந்தன் செல்வமார்க்கண்டனுக்கு ... ... *
சிஷரோவயதைந்தாச்சு தெரிவிக்கவேணுங்கல்வி...... ... *
சிஷரோநீங்களெந்தன் தேவிதன்னிடத்திற்சென்று ... ... *
சிஷரோயிதுவுணர்த்துச்செல்வனையழைத்துவாரீர்......... *

வசனம்,

ஆமடா சிஷரே யென்றுகுமாரனாகிய மார்க்கண்டனுக்குஐந்து வயதாச்சுது கல்விகற்பிக்கவேணும் நீங்கள் ஞானச்சதிராளிட ஆசிரமத்துக்குப்போய் மார்க்கண்டனை அழைத்து வாருங்களப்பா,

சிஷர் பரணி.

வாடாஞானச்சிரேஷ்டன்மணியே-மகிழ்வாய்மிருகண்டையர்பெற்ற *
நாடோர்புகழும்பாலகனே - நாம்போயழைத்துவருவம்வா... ...*

சிஷர்-ஞானச்சதிராளுக்குச்சொல் கவி,

தாயேமிருகண்டையனுந் - தன்பாலிருக்கும்பாலகனை... ...*
மாயாவினோதமாயழைத்து - வருகச்சொன்னானனுப்பாயே *

ஞானச்சதிரான் சிஷருக்குச்சொல்பரணி,

சிஷரே நீரிப்படிக்கே - செல்வனானபாலகனைப்...............*
பாசமிகுந்த மிருகண்டர் - பக்கல்கொண்டுபோய்விடுவீர் *

சிஷீர்மார்க்கண்டனுக்குச்சொல் பரணி.

அப்பாஸமந்தாமார்க்கண்டா- அய்யருனைப்பேசயழைத்துக்கொண்டு *
யிப்போதே வரச்சொன்னார்- எழிலாய்நடந்துவருவாயே ..... ..... *

மார்க்கண்டன் சிஷீருக்குச்சொல்-பரணி,

ஆசைப்பாயென் தந்தையார்தான் - அழைத்தபோதேதான்மெத்தப் *
பாசமாகவேவருவேன் பரிவாய்நடவீர்சிஷீர்களே....... ..... *

மார்க்கண்டன்வருகிறதரு-இ-ம்-பந்துவராளி ஆதிதாளம்,

பல்லவி

மார்க்கண்ட னிதோவந்தான் - ஜெய..... ........ *
மார்க்கண்டனிதோ வந்தான் ..... ... ...... ...*

அநுபல்லவி.

தீர்க்காயசு படைத்தோன்பென்.................. ... ...*
சித்தமதைவிடுத்தோன் ஜெய........ .......... (மார்க்)

சரணங்கள்.

அண்டரண்டமதிக்க - இந்த ... ... ......*
அவனியெங்குந் துதிக்க ... ... ... ... *
கண்டமர்தொழுதிருக்க- மிரு ... ... ... *
கண்டவர்மனங்களிக்கச் செய ... ... .... (மார்க்)

ஞானங்கல்வியுடையோன் - முனி .... ... ... *
நாதர்வணியும்விடையோன் ... ... ... *
தியானகுதிக்கிடையோன் - அர ... ...*
சிரேஷ்டபூசைக்குடையோன் செய ... ... ... (மார்க்)

அல்லிமலரையெடுப்போன் - மெத்த ... ...... *
அன்பனுகத்தொடுப்போன் ... ... ... ...*
செல்விசிரசில்விடுப்போன் - ஆதி ... ... ... *
தேவர்பாதம்அடுப்போன் செய ... ... ... (மார்க்)

சிஷீர்-மிருகண்டருக்குச்சொல்பரணி,

மெய்யனேசரணம் - விச்சித்ரபாலனை............. *
ஐயனேநாங்கள் - அழைத்தோடிவந்தோம்...... ... ...*

மார்க்கண்டன்-மிருகண்டருக்குச்சொல்பரணி,

காதலாய்பெற்ற - நாதரோயென்னை...................*
ஏதிருலமைத்தீர் - ஓதுவீர்புத்தி......................*

மிருகண்டர் மார்க்கண்டனுக்குச்சொல்விருத்தம்,

அப்பனேகண்ணேவாடா அருமைமைந்தனேயுனக்கு......*
இப்பவும்வயதைந்தாச்சு யினியுனக்கிசைந்தகல்வி.........*
செப்பமாய்ச்சொல்லிவைக்கச்சிந்தையிலெண்ணியுன்னைக் *
கொப்பெனவரவழைத்தகுறியிதுவறிந்திடாயே............*

வசனம்,

அப்பாமார்க்கண்டா உன்னை அழைத்ததேதெனென்றால்இப்பவும்உனக்குஐந்துவயதாயிற்று காலத்தில் கல்விகற்பிக்கவேணும் ஆகையால் உனக்குச்சீக்கிரமத்திற்கு கல்விகற்பிக்கவேண்டுமென்று அழைப்பித்தேனப்பா மார்க்கண்டா,

மார்க்கண்டன்-மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்,

தந்தையேயுமதுவாக்கியத் தவறுமலப்படிக்கே ... ... ... ... *
வந்தனுக்கடுத்தவித்தையெல்லாம் நீர்சொல்லிவைத்தால்...... ......*
உந்தனுசீர்பாதத்தாலுலகத்தோரதிசயிக்க..........................*
அந்தகனென்னைக்கண்டு அலறிடச்செய்குவேனே.............*

வசனம்,

கேளும் எனதுதந்தையே உமது திருவாக்கின்படியே எனக்குண்டாகிய வித்தைகளைச்சொல்லிவைத்தால் இந்தயீரேழுபதினாலுலோகமும் அதிசயப்பட அந்த எமதர்ம்மராஜனும் என்னைக்கண்டுபயந்துபின்னிட்டோடும்படிசெய்விப்பேன் ஐயாவே,

மிருகண்டர், சிஷீருக்குச்சொல்பரணி,

பாசமாகப்பெற்றெடுத்த - பாலகனுக்குத்தமிழுரைக்கச் ...*
சீஷீரோநீரோதுவரா - க்ஷணத்திலழைத்துவருவீரோ......*

சீஷர்கள்-சொல் பரணி,

தம்பிமார்க்கண்டனுக்கிப்போ ..............................*
தையர்கல்விசொல்லிவைக்க...................................*

தம்மாலே ஓதுவர்தான்வருக........ ............... ...ஃ
தாடிக்காரணையழைப்போம்வா............................ *

சிஷர்-வசனம்.

ஆனால் அப்படியே போவோம்வா அண்ணே.

பொதுகவி,

வேதமாமிருகண்டையர் ... ... ... ... *
வேண்டியீன்றமைந்தனுக்குச் ... ... ... *
சாதகத்தமிழுணாக்கத் ... ... ... ... *
தானேவோதுவர்வாராரோ ... ... ... *

கட்டியக்காரன்சொல்வசனம்.

அகோ தெப்படியென்றால் மிருகண்டமகாமுனிவருடைய புத்திரனாகியமார்க்கண்டருக்குக்கல்விசந்பிக்க உபாத்தியாயராகிய வேதியர்வருகிறவிதங்காண்க,

உபாத்தியாயர்வருகிற-தரு- இ-ம்,சங்கராபரணம்-அடதாளம்

பல்லவி,

ஓதுவர்வாரார் - குலக்குரு... ... ... ... ...*
வேதியர்வாரார் ... ... ... ... ... *

அநுபல்லவி.

நீதியறிந்தவர்நேர்மைதெரிந்தவர் ... ... ... ... *
சாதகநூல்முறைசாஸ்திரங்கற்றவர் ... ... (ஓதுவர்)
அஷ்டாங்கஞ்சத்தியறிந்துபேர்பெற்றவர் ... .. ... *
அருமறைமுனிவர்க்குமறிவுசொலித்தவர் ... ... (ஓதுவர்)
வேதமார்கங்களும் வெண்ணிட்டறிந்தவர் ... ... *
வித்தியாகுருவென்றும் வீதியேவாழ்ந்தவர் ... ... (ஓதுவர்)
பூமியையாளும்புகழுள்ளமன்னர்க்குப் ... ... *
புத்தியுரைத்துப்பெருமைபடைத்தவர் ... ... (ஓதுவர்)

உபாத்தியாயர்-சட்டாம்பிள்ளைக்குச்-சொல்-விருத்தம்,

ஆடாசட்டாம்பிள்ளை ஆதிமூலமேநீவாடா ...... *
பாரடா பசகளெல்லாம் பயப்படாதிருப்பதென்ன *

கூறடாயேட்டைப்பார்த்துக் கூக்குரலாய்ப்படிக்க *
சீர்டாபிரம்பினாலே சிவுக்கெனவடித்திடாயே ... *

வசனம்,

அடாவாடாசட்டாம்பிள்ளை ஆதிமூலம்என்னடா பசகளெல்லாம்கல கலவென்று படிக்காமல் விளையாடிக்கொண்டிருப்பதென்னகோஷ்டி மா கப்படிக்கச்சொல்லிப் பிரம்பையெடுத்து சிவுக்குசிவுகென்று அடியடா அடியடா சட்டாம் பிள்ளை யாகிய ஆதி மூலமே (அப்படியே செய்கி றேனையா,)

சட்டாம்பிள்ளைப்-பசகளுக்குச்-சொல்-தரு- இராம்-கேதாரகௌளம் -மிசு [ரதாளம்

பல்லவி

அடடாபடியடா-சுவடியைநல்ல..............................*
தாகட்டுந்தகடியே... .............. ... ... ... ... *

அநுபல்லவி

கொடடாவவன்றுடையில்குமரப்பாவுன்பாடம் ... ... *
கொண்டுவாவண்டையில்மொண்டுநீபண்ணாதே ... (அடடா)

சரணங்கள்

ஆத்திச்சூடிபடித்திடும்வீராசாமி-நீயிங்கேநில்லடா ......*
நேத்துவருகாதமுத்தையாயித்த-நிலத்திற்காலூன்றிநில்லடா*
போற்றிப்பணிந்திடும்புண்ணியவோதுவர் ... ... ...*
பொல்லாதகாதகர்வல்லாண்மைசாதகர்... ... .........(அடடா)

நிகண்டுபன்னிரண்டுக்குணாசொல்லும் ... ... ... *
நீலகண்டாநீவாயைத்திறவடா...... ...... ... ...... ...*
சிகண்டிவேஷங்கொண்டுசேர்ந்தீர்களிருவரும் ... ... *
சீச்சீமதமோடாகூச்சலேதடா... ... ...... ... ...(அடடா)

சரட்டுச்சொல்லேசொல்லாய்ப்பேசிடுமெப்பு.... ... ......*
கானத்தியுன்பாடங்கொண்டுவா ... ......... ... .....*
உருட்டிப்பார்ப்பதேதுவுள்ளாமுழுஞ்சிநாயே... ..........*
வுலகத்தைநீவெல்லகலைத்தலைதனைக்கொண்டாய............ (அடடா)

சட்டாம்பிள்ளை-உபாத்தியாயருக்குச்-சொல்-விருத்தம்,

அந்தணரோநீரெங்களையரோநீலகண்டன்................ ......*
தந்தைதாய்ச்சொற்கேளாமற்றநிதலையாகியின்னம் ... ......*

சத்தனைமதித்திடாமலெடுத்துமேகவிழ்த்துவிட்டான்.......*
இந்தகாதகஞ்செய்தோனுக்கென்செய்வோஞ்சொல்லுஞ்சுவாமி

வசனம்.

சரணஞ்சரணம் வித்தியாகுருவே-நீகண்டேக்குவுனாகேட்கப்பட்ட இந்தநீலகண்டன் நாம்இத்தனைவித்தைகற்றுக்கொண்டோமென்கிறகெர்வத்தினலே தன்தாய்தகப்பன் சொல்லுங்கேளாமல் என்சொல்லுங்கேளாமல்நான் எதாகிலுஞ்சொல்லப்போனல் உருமி மிரட்டிக் கொண்டு மகாதரிதலையாப் தன்மனது போனபடிக்குநடக்கிறான் அவனையென்ன செய்கிறது சுவாமி,

உபாத்தியாயர்-சட்டாம்பிள்ளைக்குச் சொல்-விருத்தம்.

புத்திநானுனைப்பேன்கேளாய்ப்புகழ்பெற்றசட்டாம்பிள்ளை*
இத்தனைகெர்வங்கொண்டுயெண்ணாமல்நடந்தோன்றன்னை..*
குத்திடுஞ்சிட்டக்கல்லைக்கொணவந்துகாற்குங்கைக்கும் ...*
வித்துறமாட்டிவிட்டுவெய்யிலில்நிறுத்துவாயே.. ..... ...*

வசனம்.

அடாகேளடா சட்டாம்பிள்ளை ஆதிமூலம்இப்பேர்க்கொத்த பொல்லாதவனு அந்தநீலகண்டன் அவன்தாடையிலனைத்து பசகளையெல்லாம்விட்டு காரியுமியச்சொல்விகறநிமுநடாயிருக்கப்பட்டசிட்டக்கற்களைக்கொண்டுவந்து காலுக்குங்கைக்கு மாட்டிஅவனுக்குப் புத்திவருகிறவனைக்கும் இந்தவெய்யிலில் நிறுத்திவையும்பிள்ளாய்,

சட்டாம்பிள்ளை-நீலகண்டனுக்குச்சொல்விருத்தம்.

வாத்தியாருனைத்தபோதேவழக்கென்னடுழுக்காவுன்னை ... ... *
சேர்த்துநான்பிடித்துக்கட்டித்திட்டினேன் நீலகண்டா... ............*
பார்த்தையாசிட்டந்தன்னைப்பதைத்திடவுன்காத்கைக்கும் ... ... *
சாத்துவேனிந்தவெய்யில்தன்னில்நீயிருந்திடாயே ... ... ... ... *

வசனம்.

அடாவாடாநீலகண்டா உபாத்தியாயர் உத்தரவுவந்தபோதே உன்னைக்கொஞ்சத்தில் விடப்போகிறதில்லை இதோமாட்டின சிட்டமுங்கொஞ்சத்தில்வாங்கப்போகிறதில்லைஉன்னுணுவம்இப்போதெங்கேபோயிற்று

சீச்சீதிருட்டுமுஞ்சி உனக்குப்புத்திவருகிற வரைக்கும் இந்தவெய்யி
லிற்றானே விழுந்துகிடவும் பிள்ளாய்,

நீலகண்டன்-புலம்பல்-கண்ணிகள்-இ-ம் மூகாரி-ஆதிதாளம்,

ஐயாசட்டாம்பிள்ளையென்னையாசிட்டத்தை.................*
அன்புடனேவாங்குமையா..........................*

ஐயாஐயாசரணம்-ஐயாவுன்திருவடிக்................... ...*
கையாசட்டாம்பிள்ளையென்னையா... ... ..... ......*

காலுங்கடுக்குதேஐயாஐயாஐயாசிட்டத்தை... ... ...... ...*
கடுகெனநீர்வாங்குமையா-எந்தன்... ... .........*

மார்பையுளைக்குதே ஐயா சிட்டத்தை............... ......*
மகிழ்ச்சியாய்நீர்வாங்குமையா-எந்தன் ... .........*

இடுப்புங்கடுக்குதேஐயாஐயாஐயா-சிட்டத்தை...... ... *
பெரிதுடனீர்வாங்குமையா-எந்தன்...... ... .....*

பக்கமுளைக்குதேஐயாசிட்டத்தைப்... ... ... ... *
பரிவுடனேவாங்குமையா ... ... ...... ...*

ஐயாசரணமென்னையாசிட்டத்தை... ................ ......*
அன்புடன்வாங்குவீரையா... ...... ... ... ...*

வெய்யலுறைக்குதேவிடாய்மிகக்கொடுக்குதே.............. *
வேர்வைநீரொழுகுதேஐயா.. .......... ........... ...*

ஐயாபள்ளிக்கூடமென்னையாயினிதான்... ... ... ...*
அமர்ந்துபடிக்கிறேனையா ... ... ... ... ...*

சட்டாம்பிள்ளை-உபாத்தியாயருக்குச்-சொல்-விருத்தம்,

ஐயரேசரணமையா அவனுக்குச்சிட்டமாட்டி...... ........*
வெய்யலிற்போட்டபோதேவிடாய்த்தணிதுவல்லாமல் ...*
கைகளுங்காலும்வீங்கிக்கதறுமுன்புத்திவந்து... ...... ...*
தையலேசிட்டம்வாங்கத்தயவதுபுரிந்திடீரோ... ... ......*

வசனம்,

சரணஞ்சரணம் வித்தியாகுருவே இந்த நீலகண்டனுக்கு அவன்
கொழுப்புக்கேத்தாப்போல பொல்லாதசிட்டக்கலைக் கொண்டுவந்துகா
லுக்குங் கைக்கு மாட்டிவெய்யலில் உருட்டிவிடவேமிகவும் வி

மாய்பட்டுப்போனான் விக்கமுங்கண்டுகேதிக் கதியழுகிறான் புத்திவந்திருக்கும் செவ்வையுட னடப்பான் அந்தச்சிட்டத்தை வாங்கச்சிலவு தாருஞ்சுவாமி,

உபாத்தியாயர் சட்டாம்பிள்ளைக்குச்சொல்-விருத்தம்.

சிட்டத்தைவாங்குமென்றுதிருடனுக்குபமுல்வந்த..........*
மட்டும்நீயினியெத்தானுமவனுக்குவருவதெல்லாம்..........*
சட்டமாயுனைப்பிடிக்குந்தயிரியமிருந்ததானாற்..........*
பொட்டெனச்சிட்டம்வாங்கிப்புத்திகளுரைத்திடாயே..........*

வசனம்,

வாரும்பிள்ளாய்ச்சட்டாம்பிள்ளை ஆதிமூலமன்தடாநீயே அவனுக்கு உபாரல்வருவதுக் அடா அவன்திருடனுச்சே அவனுக்குநீஉபமுல்வந்துபே சுகிறபடியினாலே இனிஅவன்என்னசெய்தபோதும் அந்தக்குற்றம் உன்னைவந்துசாரும் அதற்குத்தைரிய மிருந்தால்சிட்டக்கல்லை வாங்கிப்புத்தி சொல்லி வுட்காரவையுமப்பா,

சட்டாம்பிள்ளை-நீலகண்டனுக்குச்சொல்-பாணி.

ஈத்தாசிட்டம்வாங்கிவிட்டேன்..........*
இனியாகிலும் நீ நீலகண்டா..........*
பார்த்தோர்நகைக்கப்பேரொடுக்காமற்..........*
படித்துக்கொண்டேயிருப்பாயே..........*

நீல-கண்டன்-சொல்-வசனம்,

அப்படியேபடித்துக்கொண்டுவருகிறேன் சட்டாம்பிள்ளை.

கட்டியக்காரன்-சொல்- வசனம்,

அகோதெப்படியென்றால் இப்படிக்குவாத்தியாரும் சட்டாம் பிள்ளையும் பிள்ளைகளுமாகயிருக்கும் போதுமிருகண்டமகா முனியினுடைய சீஷர்கள்அவ்விடத்திற்கு வருகிறவிதங்காண்க,

சீஷர்-உபாத்தியாயருக்குச்-சொல்-கவி

கல்விசிறுவர்தமக்குரைக்குங்..........*
காவியந்தெரிந்தோதுவரோ..........*
செல்வமிருகண்டயரும்மை..........*
க்ஷணத்திலழைத்தார்வருவீரோ..........*

உபாத்தியாயர்-சட்டாம் பிள்ளைக்குச்-சொல்-கவி

அடடாஆதிமூலமேகே.............................*
வருமாமுனிவர்தமையழைத்தார்......... .......*
கொடடாபிரம்பைநீயிந்தக்...... ......... ......*
குமாரனைப்பார்த்திருப்பாயே......... ....... ...*

சட்டாம்பிள்ளை உபாத்தியாயருக்குச்சொல் கவி,

குபேரனொக்குங்கலைபாமத் - குருவேவைத்துக்கொண்டிருப்பேன்*
சமானமானமிருகண்டர் - தன்பாற்சென்றுவருவீரோ...... ...*

உபாத்தியாயர்-மிருகண்டருக்குச்சொல் கவி.

தபமாமிருகண்டையரோநீர் - தானேனுதாநமைவேண்டி *
சுபமாயழைத்தகாரியத்தைச் - சொல்வீரறியச்சொல்வீரோ *

மிருகண்டர்-உபாத்தியாயருக்குச்-சொல்பரணி,

வந்தவோதுகரோகேளீர் - மகிழ்வாயென்றுபாலனுக்குச்... *
செந்தமிழையெல்லாமுரைக்கச்- சீக்ரமழைத்துப்போவீரோ*

உபாத்தியாயர்-மார்க்கண்டனுக்குச்சொல்பரணி,

மதியும்விதியுந்தானுள்ள.............................*
மைந்தாமணியேமார்க்கண்டா... ......................*
விதியால்விளங்கச்செய்திடுவேன்.................. ...*
மெய்யேயென்பின்வருவாயே......................... ...*

உபாத்தியாயர் சொல்அகவல்.

கணபதியென்றிடக்காலனுங்கைதொழும்...... ..............*
கணபதியென்றிடக் கலங்கும்வல்வினை... ... ...... ......*
கணபதியென்றிடக்கருமமாதலாற்...........................*
கணபதியல்லதோர் கருமமில்லையே........................ *
விநாயகனென்றிடவினைகள்தீர்ந்திடும் ............... .........*
விநாயகனென்றிட வெறுமைமாற்றிடும்...... ...... ......*
விநாயகனென்றிடவேழ்விகுணந்தரும்... ................ ...*
விநாயகனல்லதோர்வேறுமில்லையே............... ...........*

வசனம்,

நமோஸ்த்து- நமோஸ்த்து- கட்டைபோய்- புத்திவா- [illegible]

கெனபாடம்வா-கூராயெழுத்தாணியும்-குறும்பனிர்ஓலையும்-வாராயெழுத்தெல்லாம் யெனக்கேவா- கட்டைமரத்திலே புத்திமுளைத்தது கர்ப்பகப்பிள்ளையாருக்கு -மூன்றுகுட்டும் மூன்றுதோப்பணமும் -போட்டுச்சேவித்துக்கொள்ளும்பிள்ளாய்.

உபாத்தியாயர் சொல்-தரு- ஜம்பை.

ஆதிமுதல்-சுபநமோஸ்த்து அலங்கார குருவே துணை *
ஆனைமாமுகவன் துணை அருள்வாணி துணையே *
ஓம்நமோத்துடன் சித்தம் - அ - ஆ *
அறியிதுவும் - இ - ஈ - யீது *
உ - ஊ - உயர்ந்தசொல் - எ- *
உறுதியுள்ள - ஏ - ஐ - யீது *
ஒ - ஓ - ஒவ்வாத - ஔ- *
ஒன்றுக்கு - மாகாத - ஃ - யீது *
க - ங - ச - ஞ - சுரோமுள்ள - ட - ண - யீது- *
த - ந - ப - ம - தருணமுள்ள - ய - ர - யீது *
ல - வ - ழ - ள - லலிதமுள்ள - ற - ன - யீது- *
பக்குவமதாகயிந்தப்பதினெட்டெழுத்தையும் *
பார்த்தபேரெப்போதும் பாலித்துவாழ்வார் *

உபாத்தியாயர்சொல் முச்சீரடி திபிதை,

உண்மையெழுத்திது உடலெழுத்திது வுலகில்வழங்குமிது.........*
நேமவெழுத்திது நிஷ்டையெழுத்திது நினைவறிவானதிது...... *
பூமியெழுத்திது புதுமையெழுத்திது புண்ணியமானதிது......*
காமியெழுத்திது கரேயெழுத்திது காணவேணுமிது............*

உபாத்தியாயர்சொல் சந்தவிருத்தம்.

உலகமாக்கலும் காக்கலுமாகிய.... ................. ................*
வுண்மையானதோரக்ஷரந்தானிது......... ... ........ ........*
கலகமூத்திலும் வைத்தலுமாகிய.......................... .......*
காரணப்பொருளக்ஷரந்தானிது.............................. ... ......*
நிலையமாதவர்நெஞ்சிலுதித்திடும்...................................... *
நின்றதோரிந்த வக்ஷரந்தானிது.......... ................ ..........*
வலுமையாகும் விவேகமுமாகிய............. ... ... ..........*
வள்ளலைக்காணு மக்ஷரந்தானிது... ... ... ... ... ....... ......*

மார்க்கண்டன்-உபாத்தியாயருக்குசொல்-கவி,

உத்தமகுருவே - வித்தையையறிந்தேன்.........................*
ஏர்த்தனையறியப் -புத்திதந்திடுவீர்.........................*

உபாத்தியாயர்-மார்க்கண்டருக்குச்சொல்-கவி.

கல்வியையறிந்த - செல்வனேயினிமேல்........ ........ ...*
வள்ளலையறிய - இல்லறம்வாராய்............ ........... ...*

மார்க்கண்டன்-உபாத்தியாயருக்குச்சொல்-கவி,

உமதருளதனால் - நமனை நான்வெல்ல........................ *
திமையினில்வருவே - னுமதடிசரணம்........................ *

உபாத்தியாயர் - மிருகண்டருக்குச்சொல்-கவி.

மிருகண்டமுனியே - கலைகண்டான்பாலன் ........ ......*
அறிவுண்டாயிருப்பான் - திறமுண்டாமையா........ ......*

மிருகண்டர்-உபாத்தியாயருக்குச்சொல்-கவி.

அறிவினையுணர்த்த - மறையவாவுமக்குத்............ .......*
திரவியமளித்தேன் - பிரியமாய்நடப்பீர்....................*

ஞானச்சதிரான்- மிருகண்டருக்குச்சொல்-கொச்சகம்.

வேதமுமெய்ஞ்ஞானமுநீர்வேண்டிமைந்தனுக்குணர்த்தீர் *
மாதவத்திற்சிவனளித்தவயதுபதினாறுச்சே........ ....... ...*
ஏதுபதேசஞ்செய்துமிக்கிருப்பதிலையேயிவன் ... ... ... *
ஆதலினுற்கேட்டேனிதையறிந்தெனக்குச்சொல்லிரோ... *

வசனம்,

சேனுக் பிராணநாதா இவ்வளவு சீக்கிரமாய் நமது குமாரனுக்குக் கல்விகற்றுக்கொடுத்துமென்ன அப்போது இந்தப்பாலகனுக்குப்பரமசிவ ளாளித்த வயதுபதினாறுதானே அந்தப்பதினாறுவயதிற்குப்பின்பு இந்த ப்பிள்ளை இவ்விடத்திலிருக்கப்போகுதா இந்தக்காரணத்தைஅறிந்து சொல் லும்பிராணநாதா,

மிருகண்டர் ஞானச்சதிரானுக்குச்சொல் கொச்சகம்,

ஆமிதுவுமெய்தானே அறிவுடையதேவியரே... ... ... *
பூமியினிலுயிர்வதைசெய் பொல்லாதகாலனிட... ... *

நேமகத்திற்கென்னென்றந்நேரமேயிருவருமாய்ச்.........*
சாமியைக்கேட்காதுவந்த சஞ்சலத்திற்கென்னசெய்வேன் *

வசனம்

வாராயென்பிராணபதமானபெண்ணே ஞானச்சதிரே இப்போது நீசொல்லவந்தசொல்மெய்யே இந்தப்பாலகனுக்குப் பதினாறு வயதுஞ் சென்றபிறகு பிடிக்கவரப்பட்ட எமனுக்கு என்னவிதஞ்சொல்வதென்று நாமிருவோரும் ஈசனைக்கேட்காதுவந்த சஞ்சலத்திற்கு நான்தானென்னசெய்வேன் நீதானென்னசெய்வாய் உள்ளபடிக்குநடக்கும்பெண்ணே,

மார்க்கண்டன்-மிருகண்டருக்குச்சொல் கொச்சகம்,

எந்தனைப்பெற்றுவமகிழ்ந்து யிஷ்டமுடன்பார்த்திருந்த *
தந்தையேதாயேநீர் சஞ்சலமுற்றேதியங்கி.. ... ... *
வந்ததென்னவென்றேயவ்வகையுரைத்தீராகிலுங்கள்.... ... *
சந்தேகந்தீர்த்திடுவேன் சட்டமுடன்சொல்வீரே... ......*

வசனம்,

கேளும்மென்னைப் பெற்றுவளர்த்த தந்தையே தாயே நீங்களெனக்குக் கல்விகற்பித்துக்கொடுத்து இப்போது என்னைப்பார்த்து நீங்களிருவரும் சஞ்சலப்படுவதென்ன அந்தச்சஞ்சலமான சங்கையையென்னுடனே சொல்லுங்கள் சஞ்சலத்தைநிவர்த்திசெய்கிறேன்தந்தையே,

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்- புலம்பல்- கண்ணிகள்-இ-ங-

பைரவி- ஆதிதாளம்,

என்னென்றுசொல்வோமுந்தனெழுத்தின்விதிவசத்தை...............*
யேதென்றுசொல்வோமடா-மகனே-மகனே-ஐயோ... .... ......*
இந்நாள்வரையிற்புத்ரனில்லாததோஷத்தாலே... ...............*
யிருள்வனந்தேடியடா-மகனே-மகனே ... ... ... ... *
தபத்தைச்செய்திணுஞ்சிவன்றனைக்கண்டுமிப்போது ... ... ... *
சங்கைபார்க்குதேயடா-மகனே-மகனே ......*
தபத்தைச்செய்தபேர்க்கொருபாலன்கிடைத்ததானல்...... .........*
தன்பாக்கியமில்லையோடா-மகனே-மகனே... ... ... ... ...*
ஈசர்வரந்தவயதுயிரெட்டுனக்களித்தார்... ... ... ... ... ...*
இனிவேறில்லையோடா-மகனே-மகனே......*

ஆசையாய்ச்சிவன்வயதளிக்கும்போதேகேட்டு ... ... ... ...*
அறியாமற்போனோமடா-மகனே-மகனே ......................*
வயதுசரியானாலேமன்னன் நமனுமுன்னே.................. ... .........*
மடக்கிப்போவானேயடா-மகனே-மகனே ......... ... ... *

மார்க்கண்டன்-மிருகண்டருக்குச்சொல்-கொச்சகம்,

முனிவர்குலத்திற்பிறந்துமுத்திபெற்றவையாவே... ... ... ... *
புனிதனெனயெனை நினைத்துப்புலம்பிநிற்குமென்றுவே ... ... ...*
தனியதவத்திற்குடையோர்சஞ்சலத்தையென்னுவரோ...... ... ...*
மனதைத்தேற்றியுமிருக்கவகையதனைத்தேடுவீரோ ... ...... *

வசனம்,

கேளும்எனது தந்தையேதாயே-தபசிகளா யிருக்கப்பட்டபேர்இப்படிக்குச் சஞ்சலப்படுவதுநீதியல்லநான் எப்படிக்கானாலும் நீங்கள்வேண்டிய தவத்தைச்செய்து வேண்டியபிள்ளைகளைப்பெறலாம் தந்தையேதாயே,

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்.

மார்க்கண்டனுக்குச்சொல்-விருத்தம்,

எப்படிமகனேயீசனீந்ததோர்வயதுதன்னை ... ... *
எப்படியினியழித்துயெழுதவும்நம்மாலாமோ ... ...*
எப்படியுனைவளர்த்துயேமன்றன்கைக்கொப்பித்து ... *
எப்படிவாழ்ந்திருப்போமெங்களாருயிரேகண்ணே ... *

வசனம்.

கேளாயப்பாஎங்களுயிருக்குயிராய்வந்து பிறந்தமார்க்கண்டா எப்படிஎங்கள் மனதைத்தேற்றியிருக்கச்சொன்னாய் உனக்கு யீசரளித்தபதினாறுவயதையழித்து யெழுத எங்களாலே யாகுதா அல்லது மற்றொருவராலேயாகுதா இல்லையேஇனி யெப்படி உன்னைவளர்த்துக்காலன்கையில் ஒப்பித்து மனந் துணிந்து இப்பூமியிலிருப்போமடாமார்க்கண்டா,

மார்க்கண்டன்-மிருகண்டருக்கும்-ஞானச்சதிராளுக்கும்
சொல்-விருத்தம்,

இனியென்னசெய்வோமம்மாவென்னிடவையாகேளீர்... ...............*
இனிகைலாசவாசரிதங்கியுத்தாரஞ்சொல்வாரோ ... ... ... ...*
இனிமேல்தான்சிவனைக்கண்டுயிடர்நீக்கிக்கொள்ளவேண்டும்... ... *
இனிமனத்துணித்துவாழ்ந்துயிருந்தென்னைரக்ஷிப்பீரோ... ... ... *

வசனம்,

கேளுந்தந்தையேதாயே இனிமேல் என்னசெய்வது அந்தக்கயிலா சுவாசகர் இனிஉங்களுக்குக்கு உத்தரஞ் சொல்லப் போகிறா ஆகையா ல்தான் அந்தயீசனைக்கண்டு இடர்நீக்கிக்கொள்ளவேண்டும் உங்களாலேஆ வதென்ன இனிமனத்துணிந்து இருவரும் எல்லை ரகஷியும் தந்தையே தாயே,

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்

மார்க்கண்டனுக்குச் சொல்-தாழிசை இ-ம்-தோளுப்பத்து.

கொஞ்சுமஞ்சுகமுடைத்தருஞ்சரமேகோகிலச்சுரமே.................. *
குமாருக்கு மழகானகண்மணியேகுறையேனுவைத்தெழுதினன் ... *
செஞ்சுடர்முடியுடைத்தவாக்கினன்செய்ததபத்திற்குறைவாச்சுதோ...*
சென்மதீவினையோசெய்தபாவமின்னந்தீரவில்லையோவறிகிலோம் ... *
வஞ்சகமாகச்சிவனுனையளித்த துவுமாயமோ அபனுபாயமோ ... ....... *
மர்ம்மமோயிதுவுங்கர்ம்மதீவினையோவல்வினைகளோசெல்வமே......*
அஞ்சிடாதேயென்னையாதரிக்கயினியாரடாவுனதுபின்புதான்............*
ஐயையோமகனேதெய்வமேவிதியும்அலையுதேநெஞ்சமலையுதே ... ...*

வசனம்.

அப்பாமகனே மார்க்கண்டா கொஞ்சிக்கிளியே கோகிலமே குமரவேளுக்கு மழகானகண்மணியே வுனக்கேனுவயதைக் குறைத்தார் ஈசர்க்குக் குறைவான தவத்தைச் செய்திருந்தோமோ அல்லதுசெய்தபாவமின்னந் தீரயில்லையோ அந்தயீசனுருடைய மாயமோ அல்லது அயனிடவுபாயமோ எந்தமர்ம்மமோ கர்ம்மதீவினையோ அடா செல்வமே உனக்குப்பின்பு எங்களுக்கு ஆதரவுசொல்லப்பட்டவர் ஆரிருக்கிறார்கள் எப்படி திடங் கொள்ளுவது தெய்வமே-மகனைப்பார்க்கப் பார்க்க நெஞ்சங்கலங்குதேதெய்வமே,

மிருகண்டரும்-ஞானச்சதிராளும்புலம்பல்,

ஆனந்தக்களிப்பு.



மகனேயுனைவளர்த்ததேனோ - அந்த.......................................*
மறலிகையிலொப்பிக்க- வகைதேடலானேம் ............ (மகனே)
சுகமாயிருந்திடக்காணேம்—காலன்......... .......... ........ ......*
துள்ளிவந்துவுன்னைத்துடிக்கக்கொல்வானே............ (மகனே)

பண்ணுதபத்ததைச் செய்தோமே— யிந்தப் ... ... ... ... ...... *
பாரிலுள்ளவரெல்லாம் பழிக்கவாளுமே ... ... ... (மகனே)
கண்ணேயுனைவளர்த்துநாமே—அந்தக் ... ... ... ... *
காலத்திலாகொடுக்கக்காத்திருந்தோமே ... ...(மகனே)
சிறுபிள்ளையாயிற்றேயென்று— விட்டுத் ... ... *
திரும்புவாளுகாலன்திசைக்கிழுப்பானே ... (மகனே)
அறிவானகல்விகற்றேனே - வரும் ... ... ... *
அந்தகன்பாசங்கொண் டடித்திழுப்பானே ... (மகனே)
பெற்றும் வளர்த்தும் வீணச்சே— ஊளர் ... ... *
பெண்களெனைப்பழித்துப்பேசவுமாச்சே ... (மகனே)
கர்த்தனைத்துதித்தும்வீணச்சே - என் ... ... ... *
கண்மணியிதுவென்னகாரணமாச்சே ... ......(மகனே)

ஞானச்சதிராள்-மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்-கெண்டா,

மகுணனேகேளாயிந்தமகனுக்காயடவிதன்னில் ... ......... ... *
வெகுகாலந்தபமிருந்தும்வீணச்சேயினிமேல்நம்மால் ... ...... *
வகைதேடவேணுமென்றல்வளருமோஆயசிந்த...... ... ........ *
செகமெலாம்நகைக்கலாச்சேசெல்வனுக்கென்னசெய்வேன் ... ... *

வசனம்.

கேளும்பிராணநாதர் இந்தப்பாலகன் வேணுமென்று வெகுபாடு பட்டு தவஞ்செய்தோம் செய்தும் பலனில்லாமற் போயிற்று இனிஆயிசு வளரப் போகுதா அதுவும் நமக்குத் தெரியாது யிதற்குயென்ன புத்தி சொல்லும் என்பிராணநாதா,

மிருகண்டர்-ஞானச்சதிராளுக்குச்சொல்-விருத்தம்-கெண்டா,

ஒழித்திடுவேனென்றேதமுறுதிமாமயிலேகேளாய் ... ... ... *
அழித்துபின்னெழுதுவாரோஆயசுமகனுக்கிப்போ..... ............... *
வழித்துணையில்லாவார்த்தைவழங்கினுலகிலுள்ளோர்......... ... ... *
பழிததிடாரோநீயந்தப்பக்ஷத்தைவைக்கவேண்டாம்... ... ...... *

வசனம்.

வாராய் பெண்ணே ஞானச்சதிரே நாம்தானே தபத்தைச்செய்து பாலகனைப் பெற்றபோதும் நாம் பெரியோர்களா, மகனுக்கு யீசன் கொடுத்திருக்கிற வயதையழித்தெழுத ஒருவராலே யாகுதா - உலகினில்

அடாதவார்த்தையைவழங்கினால் உலகம்பழிக்காதா இனிமேல் இந்த தீ யஞ்செய்ய மாட்டோமா இப்பேர்க்கொத்தப் பிள்ளையைப் பெறாதே பெற்றோமா நீ இப்போதுசொன்னபுத்தியை நெஞ்சில் வைக்கவேண் டாம்பெண்ணே,

ஞானச்சதிரான்-மிருகண்டருக்குசொல்-கொச்சகம்.

வைக்கவேண்டாமென்வேம்தியுணர்க்குமாமுனியே.............................*
ஒக்காதவார்த்தைசொன்னாலொக்குதாயினிநமக்கு.........................*
நிக்குதாஞானித்தச்செல்வனுக்குப்பிற்காலம்...................................*
இக்குணமசொல்வார்களேனெனக்கதனைச்சொல்வீரோ.........................*

வசனம்,

கேளும்பிராண வல்லபா பிட்டிக்கி - ஒவ்வாதவார்த்தை சொன்னால் ஒவ்வுதா இந்தப்பிள்ளைக்குப்பிறகு-நமக் காதரவிருக்குதா யென்ன வித மாயென்னை மனந் துணிந்திருக்கச் சொன்னீர் பிராணநாதா,

மிருகண்டர்-ஞானச்சதிராளுக்குச்சொல்-கொச்சகம்;

சொல்லுவேன்கேளாய்ஞானச்சுந்தரமேநம்மாலே ... ........................*
வல்லமைகள்பேசவுண்டோமழுவணிந்தோன்செயலிதுவே...... ......*
இல்லையென்றுவிருவோருமீசனைத்துதித்ததனால்.......................*
வல்லையிலெப்போதுஞ்சுதனிருக்கவருள்செய்வாரோ..................... ...*

வசனம்,

கேளாய் ம்றியுள்ளமாதே வல்லமையாய்ப்பேசுதற்கு நம்மாலே ஆகுதா மைந்தனையளித்தசுவாமியின்செயற்படிநடக்கும் செயற்படி நட க்குமென்றதாலும் சும்மாயிருக்கலாகாது இப்பவும் விசாரத்தை விட்டு சிவத்தியானத்திலிருந்தால் மகன் எப்போதுமிருக்க அருள் செய்குவாரெ ன் றுநினைக்கிறேன் பெண்ணே ஞானச்சதிரே,

ஞானச்சதிராள்-மிருகண்டருக்குச்-சொல்-கொச்சகம்,

செய்குவாரொன்றானத்தசெயல்மிருகண்டரேகேளும்...... *
வையகமெலாம்மதிக்கமைந்தன்மண்மீதிருப்பதற்கு ... *
பொய்கையினீற்றுளித்திப்போபுகழீசன்றனைநோக்கி......*
கைகளைக்குவித்துநின்றூர்காக்கவருள்செய்வாரே ...... ... *

வசனம்,

கேளும் பிராணநாதா நீர்சொன்னது மெய்யே மேலும் நாமிருவரு
ம்பொய்கையில்நீராடிக் கைகளைக்குவித்துநின்றால் ஈசன் மகனைக்கார்ப்பா
ரென்று நானும் நினைத்தேன் பிராணநாதா,

மார்க்கண்டன்-மிருகண்டருக்குச்சொல்-கொச்சகம்,

அன்னையேயென்னைப்பெற்றவையாவே நீங்களிப்போ ....*
சொன்னசொல்லுறுதியாகத் தோற்றுதுயெந்தனுக்கும் ...*
இந்நேரமப்படிக்கேயிருந்திட்டாலேமன்வந்து... ... ...*
என்செய்வான்சிவனிருந்து யெந்தன்னைக்காத்திடாரோ... ...*

வசனம்

கேளும் என தந்தையே தாயே இப்போது நீங்களிருவரும்பேசிக்கொ
ண்டது சரியே விசாரப்படுவதினாலொன்றுமாவதில்லை இதுவெனக்கும்
நல்லயோசனையாயிருக்கின்றது அப்படிக்கு நீங்கள் சிவத்துதி செய்துக்
கொண்டிருந்தால் எமன்வந்து யென்னையென்னசெய்யமாட்டுவான் அப்
போதைக்குத்திருக்கடையூரா ரென்னைக் கார்ப்பாரென்று நினைக்கிறேன்
என்னையாவே,

பொது கவி-

மிருகண்டயருந்தேவியுமாய் - விளங்குமுனிமார்க்கண்டருமாய்*
அறிவுகொண்டுபேசுங்கா - லையர்நாரதருமுனிவாரார்...... .........*

கட்டியக்காரன்சொல்- வசனம்,

அஃதெப்படியென்றால் இப்படியாக மிருகண்டரும் ஞானச்சதி
ராளும் மார்க்கண்டனுமாகப்பேசிக்கொண்டிருக்குங்காலையில் அவர்களை
க்காணும்படியாக நாரதமகாமுனிவர் வருகிறவிதங்காணக,

நாரதர் வருகிற-தரு-இ-ம்-புந்நாகவராளி- ஆதிதாளம்,

பல்லவி

தபமேபுரிநாரதமாமுனிவந்தார் - பரன்குருளுவபல...*
தபமேபுரிநாரதமாமுனிவந்தார்...... ..............*

அநுபல்லவி.

சுபலிதமுடைய தூயமிருகண்டையர்...... ......*
தோகையாள்புலம்ப லாசையால்மெள்ள...........(தபமே)

சரணங்கள்.

சுந்தரவரிப்புலிதோல்நாதரை தனென்ன........ ...*
சோதியுடையதொங்கல்மேலதுபளயனென்ன... ....... ... *
சந்திரகாந்தியுள்ளசடைகளுமொருமொளென்ன ... ... ... (தயமே)
வெள்ளிப்பாதக்குறடெங்கும் வீதிட்டுத்துன்னவே... ... .. *
விண்ணுமண்ணுலகெங்கும் ஆடரா வென்னமே............*
சள்ளயத்தொருபாரஞ் சகலரு.........மென்னவே............ (தயமே)
மெய்யினிலெங்குமிகவெண்ணீ திலங்க ........................*
வில்தாரமானமூன் லூல்மார்பினிற்றுலங்க............ .......*
தையலாரிடமனந்தான து கலங்க ...... ... ......(தயமே)

நாரதர் மிருகண்டர் சிஷிர்களுக்குச்சொல்சந்த விருத்தம்.

அப்பாமிருகண்டையர்தொண்டர்களே...... ... ... ...*
அப்பாநீங்களாசீர்மம்போய்... ... ... ....... ... *
அப்பாமுனிநாரதர்வந்தாரென்...... ... ... ... *
தப்பாசொல்விரதிவேகமதாய்...... ... ....... ... ... *

சிஷிர்-மிருகண்டருக்குச்சொல் சந்தவிருத்தம்,

ஐயாமிருகண்டையாசரணம் ... ... .. ... ... ...*
ஐயாமுனிநாரதரும்வந்தார்... ... ... ... ... ... *
ஐயா தேவர்க்கதிபியென்றார்...... ........ ... ... *
ஐயா துய்யா அதிவீரதிவீரா............................*

மிருகண்டர் ஞானச்சதிராளுக்குச்சொல்-சந்தவிருத்தம்,

அனமேநம்பாலருமையதாக ................................*
அனமேதபநாரதர்வந்தனராம்.................................*
அனமேநாம்போயவரைக்கண்டு...............................*
அனமேவருவோ மழகாய்வாராய் ... ......... ... *

மிருகண்டர்-ஞானச்சதிராள்-இருவரும்-நாரதருக்குச்சொல்
சந்தவிருத்தம்

சரணஞ்சோதியே சொரூபாசரணம் ... ... ... *
சரணமாதி முதலேசரணம்.. ... ............ ...*
சரணமினிதாய் வந்தீர்சரணம்................ .......*
சரணம்நாதா வுனையுஞ்சரணம்.... ............................*

மார்க்கண்டன் - நாரதருக்குச்சொல்-கவி,

முத்தாசரணம் - சுத்தாசரணம்... ....................... .......*

வித்தாசரணம் - பெற்றுய்சரணம்...... ... ........*

நாரதர்-மார்க்கண்டனுக்குச்சொல்- கவி,

அப்பனேயென ஆயனுங்கொண்டு ... ... ... ...*
செப்பமாய்வாழ்வாய் சிரஞ்சீவிசுகீபவா........ ... ......*

நாரதர்-மிருகண்டருக்கும்-ஞானச்சதிராளுக்கும்சொல் விருத்தம்,

தவமிருகண்டரேஞா னச்சதிரோதயத்தால்...............*
சவுரியமுடனேவந்த தனையனைக்காணவந்தேன் ............*
இவடம்தான்வந்ததற்கு யிருடிகளேநீர்மெத்த .... ......*
கவலையாயிருப்பதென்ன காரணமுனாசெய்வீரோ... ......*

வசனம்.

வாருமிருகண்டனே ஞானச்சதிரே நீங்கள்தபத்தைச்செய்து மகா அருமையானபிள்ளையைப்பெற்றீர் நானந்தப்பாலகனைப்பார்த்துப் போகலாமென்று ஆசையாக இவ்விடம்வந்தேன் நான்வந்தேனென்கிறதோ நீங்கள்மகாமனக்கவலைகொண்டிருக்கிறீர்கள் அப்படிகவலைகொண் டிருப்பதென்ன அந்தக்கவலையைச் சொல்லுங்கள் அதற்கேகாரணவழி சொல்லுகிறேன்,

மிருகண்டர்-நாரதருக்குச்சொல்-விருத்தம்,

கடிதினிலுனாக்கச்சொன்ன கடடமாமுனிவர்கோவே... ...*
திடமுள்ளதபத்தைச்செய்து செல்வனைவாங்கிவந்தோம் ... *
கடவுள்தன்கிருபையாலே காளைக்குவயதீரெட்டே... ..... *
திடமிலாதாகையாலே தியங்குறோமயங்குறேமே... ... *

வசனம்,

கேளும்நாரதமகாமுனிவரோ எங்களுக்குமத்தொரு விசாரமுமில்லை இந்தப்பாலனுக்கு வசனாளித்தவயது பதினாறுஞ் சரியாயித்து ஆனல்வரப்பட்டயெமனுக்கு என்னசொல்லுவது பிள்ளையைப்பிரிபாடு ஏப்படி காண்பது அதினால்தியங்குகின்றோஞ்சுவாமி,

நாரதர்-மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்.

அழித்தாயசெழுதவில்லை அருந்தபத்தோரேபிள்ளை.........*
பிழைத்ததேதுன்பேர்கொண்ட பித்தனைக்காணப்போறான் *
எழுத்தொன்றேசிரஞ்சீவி பெத்தாளுமிருப்பான்கண்டாய் *
பழித்தோருக்கிடங்கொடாமற் பாலித்துவாழ்குவீரோ... ...*

வசனம்,

கேளாய் முனிவனே இந்தப்பாலகனுக்கு அற்பாயசிராதுளழுத்தோசி

சஞ்சீவியானயெழுத்தேயிருக்கும் நாலுஞ்சிரஞ்சீவிவாழ்த்தல் கொடுத்தேன் இனிமேல் கர்த்தனையுங்காணப்போகிறான் உங்களுக்குச்கீர்த்தியுங்கொண்டுவருவான் பழிப்போருக்கிடங்கொடாமலிருங்கள் நமக்குச் சில வுதாருங்கள்.

மிருகண்டர் நாரதருக்குச்சொல் விருத்தம்.

உமதுநல்லருளினாலே யுயர்பாலனிருக்கவேணும்... ......*
நமனையும்வென்றேயிந்த நகர்தனிலிருக்கவேணும்.........*
அமரர்கள்வணங்குநாதா வையனேமுனிவர்கோவே... ...*
எமக்கொருபுத்திசொல்லி யெழுந்திடிராசிரமத்தே...... ..ஞ

வசனம்,

சுவாமி நாரதபகவானே உம்முடைய திருவருளினாலேஇந்தமார்க்கண்டன் ஆசிரமத்திற்குப்போயிருக்கவேண்டும் நமனையும் வெல்லவேண்டும்நகரிலுமிருக்கவேண்டும் இன்னம் எங்களுக்குப்புத்தியுரைத்து ஆசிரமத்திற்குயெழுந்தருளுஞ் சுவாமி,

நாரதர்-மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்.

புத்தியுமறிவுமெத்தபுகழையும் பெற்றுவாழும்...... ......*
உத்தமமிருகண்டாகேளுயர்வில்மார்க்கண்டாகேளாய் . ...*
பத்தினிஞானமாதேபாலித்துவாழ்வீர்நீங்கள்...... ... ...*
கர்த்தனைத்துதிப்பீரின்னேர்காலத்தில்வருகுவோமே... ...*

வசனம்,

வாராய் மிருகண்டனே அப்பாமார்க்கண்டா ஞானமாதே இன்னம்புத்திரகளத்திராதிகளாய் நீடூழிகாலம் வாழ்கவாழ்க இனிநீங்களிருவருங்கர்த்தனைத்துதிசெய்துக்கொண்டிருங்கள் போய்வருகிறேன்,

மிருகண்டர்- ஞானச்சதிரான்- மார்க்கண்டன்
இம்மூவருநாரதருக்குச்சொல்வசனம்.

சரணஞ் சரணம் அப்படியேதேவரீர்எழுந்தருளலாஞ்சுவாமி,

மிருகண்டர் மார்க்கண்டருக்குச்சொல்கொச்சகம்,

பாலகனேயுன்வயது பதினாறுமாகிலுடன்.............. ......*
சூலம்படைத்தானுந் துனாராஜனமனுமெத்த..... ..........*
கோலஞ்செய்துாதர்களைக் கொண்டுவருவானவனைச்........*
சாலவித்தையாற்செயிக்கச் சமர்த்துனக்குமுண்டோதான் *

வசனம்,

அப்பா மார்க்கண்டசெல்வனே ஆகிலும் உன்னுயுள்சரியாச்சு தானுவ்

உடனேஎமன் தூதாளைவிடுத்து உன்னைப்பிடித்துவரச்சொல்லுவானே அ
ப்போதைக்குஅவர்களைச்செயிக்கவும் எமனைவெல்லவும் உனக்குச் சமர்த்
துண்டா சாலவித்தையுண்டா நீஜெயம்பெற்றிருப்பாயா சொல்லுமப்பா
மார்க்கண்டா,

மார்க்கண்டன் மிருகண்டருக்குச்சொல் கொச்சகம்,

இதனைப்பெரிதாயெண்ணி யேங்குவரோவையாவே...... ...*
விதனமனதத்தீர்ப்பேனுன் மேவிவில்வமலரெடுத்து... ...*
எதுவிதத்தாலுமந்த யீசனைக்கண்டடிபணிந்து......... ...*
அதனவிதஞ்செய்யவருமந்தகனைவெல்வேனே......... ...*

வசனம்,

கேளுமென தந்தையே தாயே இதற்கோநீங்கள் பயப்படுவதுநீங்
களாசிர்மத்திற்றனேயிருந்து சிவத்தியானஞ்செய்யுங்கள் நான்போயா
லயந்தோறுஞ்சுத்தி நந்தவனம்புகுந்து விச்சித்திரமான மலர்களெடுத்
து அர்ச்சனைபுரிந்து ஈசனைக்கண்டென்னைத் தொடவரப்பட்ட எமனைவெ
ல்லவரம்பெற்றுவருகிறேன் நீங்கள்சந்தோஷமாய் எனக்குச்செலவுகொ
டுத்தனுப்புமையாவே,

மிருகண்டர்-மார்க்கண்டனுக்குச்-சொல்-விருத்தம்,

பண்ணினதபத்தில்வந்தபாலன்மார்க்கண்டாயிந்த.............. ..........*
அண்ணலைக்காணவுன்னாலாகுமென்றல்லோசொன்னாய்.......... ..........*
எண்ணிலும்பதினாறாகயிருக்கவேவயதுண்டாகக்.................. .......*
கண்ணனைக்கண்டேயந்தகாலனைவென்றுவாராய்.......... ..............*

வசனம்

கேளாயப்பாமார்க்கண்டா அப்படியேநீஆலயந்தோறுஞ்சுத்தி எ
ப்படியாகிலும் அண்ணலைக்கண்டு என்றும்பதினாறாக யிருக்கவயது பெ
ற்று எமனைவென்று பூமியிலிருக்க விண்ணுமண்ணுமதிக்கத் தக்கதாக
வரம்பெற்று வருவாயப்பா.

மார்க்கண்டன்மிருகண்டருக்குச்சொல்-விருத்தம்,

ஆதினம்விளங்கயீன்றஐயனேசரணம்பத்து......... ......*
மாதருஞ்சுமந்துபெற்றமாதாவேசரணமம்மா............ *
காதகநமனைவெல்லக்காளகந்திரிந்துபூத......................*
நாதனைக்கண்டுவாரேனலமுடனிருந்திடீரோ......................*

வசனம்.

மகாஅருமையான தபத்தைச்செய்து யென்னைப்பெற்றதந்தையே

தாயே சரணஞ்சரணம் அர்த்தசாதிகநமனேவென்று உம்மிடமிருந்தவர் மும் பூதநாதனைக்கண்டு வரம்பெற்று வருகிறேன் நீங்களாசீர்மத்தி விருங்கள் தந்தையே தாயே,

மார்க்கண்டன்-வருகிற-தரு-இ ம்-இயால்-ஆதிதாளம்.

பல்லவி,

திகழ்மாமுனிமார்க்கண்டன் வந்தானிதோ... ...*

அநுபல்லவி.

புகழ்சேர்கடையூர்பரனைத்துதிசெய்..................*
தலையாய்ப்பணியுங்குகனேபுகழ்சேர்.........(திகழ்)

சரணங்கள்

மறையேபொருளேதெளிவாகியசீர்.....................*
பரனையகமே பரிவாய்துதிசெய்...............(திகழ்)
பரிவாய்வபதேமிகவேபெருக.........................*
வரமேயருளும்பரனைத்துதிசெய்..............(திகழ்)
விசுவாசமதாய்அனைதந்தையுமே.......... .........*
சசிபோற்பணியும்மிகசுந்தரமே......... ......(திகழ்)

மார்க்கண்டன்-சொல்-தேவாரம்

செஞ்சடைமுடிமேல்பகீரதிபுனையுந்தேவனேதிருபுரத்தரசே...... ...*
பஞ்சைமெல்லடியார்பாகனேகடையூர்பரமனேபசுபதியானே...,....*
நஞ்சமெனமனூர்வந்திடாமுன்னந்தயங்கியுன்பாதத்தைநம்பி... ......*
அஞ்சலென்றடைந்தேனென்துயர் தீர்த்து அடியனையாண்டுகொண்டருளே

வசனம்,

அரகரா-கயிலைடங்கிரிவாசா-அரகரா - காலகண்டதிரிநேத்திரமுடையயீசா- அரகரா - கங்கையைத்தரித்தநேசா-அரகரா - கர்த்தனே திருக்கடையூரீசா-நான் தபத்துக்கு வருகிறேன் என்தபத்துக்கு ஒருவிக்கினம்வராமல் என்னைக்காத்தாகூஷிக்கவேண்டும் - கர்த்தனே - அரகரா - அரகரா-அரகரா-அரகரா.

மார்க்கண்டன்-பூசைசெய்கிற-தரு,இ-ம்- ஆனந்தபைரவி-ஆதிதாளம்.

தேவர் முனிவர் சித்தர்போற்றிடும் -ஸ்ரீகாசியில்வாழும் ......... ...*
தேவனே-விஸ்வநாதலிங்கமே-ஓம்-அரகரா... ......................*
மூவரும்ஒருரூபமானிரோ-சாம்பசிவா....... ...................*
முதல்வனேயுனைப்பூசைசெய்குவேன்-ஓம்-அரகரா................*

மாயன்பூசைபுரியும்பாதனே-திருக்கடையூர்...... ... ......... ......✻
யேழையர்போற்றுந்தியாகராயமே-ஓம்-அரகரா ... ...... ✻
இந்திரன்பூசைபுரியும்பாதனே-திருக்கடையூர்..............................✻
திபாகமாகிய அருணலிங்கமே-ஓம்-அரகரா...............................✻
சரணமென்றுனைப்பூசைசெய்குவேன்-சாம்பசிவா ... ... ......✻
தயவுவைத்தெனையாளவேணுமே-ஓம்-அரகரா ... ... ......✻
துதிக்கவுன்னைவினைகள்தீருமே-கடையூரீசா..... ........... .......✻
யேழையர்போற்றும்அருணலிங்கமே-ஓம்-அரகரா... ... ...✻
யோகமொருவடிவானயீசனே அருணகிரியில்..... ......... ... ..✻
உண்ணாமுலையங்காளவாசனே-ஓம்-அரகரா..... ..................✻
சதைக்கயென்னைக் காலன்வராமலே-சாம்பசிவா... ... ...............✻
சங்கராவுன்னைப்பூசைசெய்குவேன்-ஓம்-அரகரா... ... ...✻
சரணமென்றுனைப்பூசைசெய்குவேன்சாம்பசிவா................. ......✻
ரக்ஷித்தருள்வேணுமையனே-ஓம்-அரகரா ... ... ...... ...✻
பகவனேயுன்னைப்பூசைசெய்குவேன்-சாம்பசிவா...........................✻
பரிவுடனென்னையாளவேணுமே-ஓம்-அரகரா...........................✻

மார்க்கண்டன்சொல்-விருத்தம்-இ-ம்- தேவாரம்,

கையின்மான்மழுதரித்தகாசிவாழ்க்கனலிங்கேசா.................. ...✻
ஐய்யசெம்பாதம்போற்றிதொழுகிறேன்மனமிரங்கி..........................✻
வெய்யகாலனைக்கடிந்துவிர்த்திக்கமனதுகந்து...........................✻
பையவேயாட்கொண்டெந்தன்பணிவிடைபேர்ப்பாய்சுவாமி...... ...✻

வசனம்,

அரகரா-கையில் மான்மழுதரித்த மயேசாஅடியேன் தேவரீருடைய சிவந்தபாதத்தைத்தொழுது நின்றேன் அதற்குக்கொடியகாலனைத் துரத்தி விர்த்திக்க மனதுகந்து என்னை யாட்கொண்டு ரக்ஷியும் கர்த்தனே அரகரா-அரகரா,

மார்க்கண்டன்-சிவனைத்தோத்திரஞ்செய்கிற-கண்ணிகள்-இ-ம்
புந்நாகவராளிஆதிதாளம்,

அரகரா சிவசிவா அமூர்த்தகண்டீஸ்வரா.................. ........✻
அன்புடன்மலர்தேடிசூடுவேன்-சுவாமி ...... ✻
திருபுரதகனுவுன்திருவடிகாணவே ... ........ ......✻
தேடித்திரிந்துமலர்சூடுவேன்-சுவாமி... ... ........✻

கரியுரிபோர்த்திடுங்கர்த்தனேயுமைபாகா ... ... ... *
கருத்துடன்மலர்தேடிசூடுவேன்-சுவாமி... ....... ...*
வரிவிழியுமையாள்நன்மணவாளனேயுத்தன்...... ........*
மலரடிகாணமலர்சூடுவேன்-சுவாமி... ............... *
சிறுவனுனும்மிடதிருவடிகாணவே.......................*
சித்தமொன்றுகிமலர்சூடுவேன்-சுவாமி...... ......, *
தெரியாதபேதைமைசெல்வனுனும்மிட......................*
திருவடிக்காணமலர்சூடுவேன்-சுவாமி................... *
இருகரத்திலுமலரேந்தியேயுன்னிட...... ...... ..........*
இணையடிகாணமலர்சூடுவேன்-சுவாமி ...... ..........*
அறியாதபாலகனை ஆட்கொள்ளுமீசனே........................*
ஆத்திமலரெடுத்துசூடுவேன்-சுவாமி ....................*

மார்க்கண்டன்-சொல்-கொச்சகம்.

இந்தப்பூவனம்போல்தானெந்தவனமுங்காணேன் ......... ...... ......*
அந்திவண்ணனுக்கேத்தஆத்திமலரிருக்குதிங்கே........................*
சந்திரமுகவனைப்பெற்றதனியொளியுமிருக்குதிங்கே... ...........................*
எந்தனிடபாக்கியமோயாதொன்றுமறிகிலனே... ...... .......... ......*

வசனம்,

அரகரா - அரகரா - அரகரா - அரகரா - இந்தவனமேநந்தவனமோ-அந்த அந்திவண்ணனே-வாசமாயிருக்கப்பட்டவனமோ அவருமிதோயிருக்கிறார் அவருக்குமிகவும் அற்புதமான ஆத்திமலரும் வில்வமலருமிருக்குது-ஆ ஆ-சோதிப்பிரகாசம்போலசிவாலயமுந்தோற்றப்படுகின்றது இதைவிட அப்பால் நடப்பதென்ன இந்தயிடமேநாம்செய்தபாக்கியமானயிடம் இனியிந்த-ஆத்திவில்வம்-செண்பகம்-கொன்றை-பாரிசாதம்- இப்பேர்க்கொத்த மலரெடுத்து பூதொடுத்துஇந்த ஆதிமூலப்பெருளையே அர்ச்சனைபுரிவது உத்தமம் அரகரா,

மார்க்கண்டன்-மலரெடுக்கிற-தரு,இ-ம்-புந்நாகவராளி-அடதாளம்;

கொன்னமலரெல்லாம்பரித்தேன்-இந்த......................*
கோமனுக்காமெனச்-சூடினேன்............. .............. ...*
வண்ணமலரெல்லாம்பரித்தேன்-இந்த.... ........ . . . ...*
வள்ளலுக்காமெனச்சூடினேன்.....................................*
நீண்டமலரெல்லாம்பரித்தேன்-இந்த..................................*
நிமலனுக்காமெனச்-சூடினேன்................................ ..*

எண்ணமலரெல்லாம்பரித்தேன்-இந்த........ ........ *
யீசனுக்காமெனச்-சூடினேன்........ ........ *
மல்லிகைமலரெல்லாம்பரித்தேன்-இந்த........ ........ *
மான்மழுவோனுக்குச்சூடினேன்........ ........ *
வில்வமலரெல்லாம்பரித்தேன்-இந்த... ... ... ... *
மெய்யனுக்காமெனச்சூடினேன்... ... ... ... ... *
முல்லைமலரெல்லாம்பரித்தேன்-இந்த... ... ... ... *
மூர்த்திக்கேயாமெனச்-சூடினேன் ... ... ... ... *
நல்லமலரெல்லாம்பரித்தேன்—இந்த... ...... ....... *
நாதனுக்காமெனச்சூடினேன் ...... ............ *

மார்க்கண்டன்-சொல்கொச்சகம்.

கொன்னமலரெடுத்துந்தன்கொண்டையினிற்சூடிநின்றேன் ... *
வண்ணவண்ணமலரெடுத்து மலரடியிற்சூடிநின்றேன்........... *
புண்ணியனேயுன்பாதம் போற்றிமலர்சூடி-நின்றேன்......... ... *
அண்ணலேயென்றடிபணிந்து ஆத்திமலர்சூடிநின்றேன்........ *

வசனம்

ஆகாசகடையூரீசர் கள்ளங்கவடறியேன் அறியாதபுத்தியாலே என் கண்ணுக்குத்தோன்றினமலரெடுத்து சாத்திநின்றேன் அறியாதபாலகனை உமதுபாதாரவிந்தம் சேர்த்துக்கொள்ளுங் கர்த்தனே,

மார்க்கண்டன்சொல்-தரு-இ-ம்-ஜம்பை,

கடையூரில்மர்த்திருக்குங்கர்த்தனேயெனக்காக... ...... *
படிமீதிலென்னுயிரைப் பாலிக்கவேணும்........ ...... *
அன்றுமிருகண்டருக்கு அருமதலையளித்ததுபோல்........ *
இன்றெனக்குவரமளித்து -வீடேற்றவேணும்... ... ........ *
ஏழையடியார்களது யிடர்தீர்க்குஞ்சோதியே........ ........ *
தாழ்வில்லாதிடர்நீக்கித்தற்காக்கவேணும்........ ........ *
சங்கராவுனைத்தொழுதேன் சண்டன்வந்தணுகாமல் ........ *
பொங்கமாயெனைக்காத்துப் புகழ்தருகவேணும்...... ........ *

மார்க்கண்டன்சொல் கொச்சகம்,

வாசமலரெடுத்துந்தன் மலர்ப்பாதங்காணயிப்போ........ *
பாசமுடன்சூடிநின்றேன் பார்வதிசமேதகனே...... ...... *

கூசாமலேமனென்னைக்கொடுபோகவராமுன்னம்... ......*
ஈசாயென்னைக்காருமெழிற்கைலைநாயகரோ.............. ......*

வசனம்.

அரகரா மயேசா அமூர்த்தகண்டீசா திரிபுரதகனு அடியேன்உமது பாதமேகதியென்று நம்பினேன் என்மீதில் எமன்வந்து அணுகாமுன்னம்உமது பாதாரவிந்தஞ்சேர்த்துக்கொள்ளுங்கர்த்தனே,

பொதுவிருத்தம்.

இப்படிமார்க்கண்டன்று னீசனைப்பூசைசெய்து... ... ...*
ஒப்புடனிருக்கும்போது வுயிர்வதைசெய்யுமேமன் ......*
சொற்படிகேட்டிருக்குஞ் சுந்தரக்கட்டியக்காரர்... .........*
மெய்ப்படியெச்சரித்துமின்னல்போல்வருகின்றனே...... *

கட்டியக்காரன்வருகிற-ஓரடி-தரு-இ·ம்-சங்கராபரணம்-மீசுரதாளம்;

பல்லவி.

வாசற்கட்டியக்காரனுனே - கொலு ...... ... ......*
வாசற்கட்டியக்காரனுனே... ...... ... ...*

அநுபல்லவி.

தேசத்திலெனக்கிணையானசேவகருண்டோ ... ... *
திக்குமுக்கிட்டோடவேயடிப்பேனென்சொல்விரண்டும்... *
ராஜராஜர்கள்மெச்சரவுத்ராகாரங்கள்கூற ......*
தாளுமிகவலுமைபுஜங்கள்தட்டி ... ... ... ...*
நீளுஞ்சமரசித சிங்கக்குட்டி ... ... ... ... (வாசற்)

சரணங்கள்,

அடிக்கும்பெருங்காற்றுக்குமஞ்சேன் - ஆனல்............*
அருங்கவிபுலவர்பால்...... மிஞ்சேன்........... .......*
இடிக்கும்பெருமழைக்குந் தஞ்சேன் - சற்றும்...........*
இணக்கமில்லாநாய்களைக் கெஞ்சேன்... ... .........*
துடிக்கும்ரணமுகத்திலிவிதக்கங்கள்செய்யேன் ... ...*
சொந்தத்தாய்தந்தைமேலுந்தயவுதாக்ஷண்யம்வையேன் ...*
துரைகள்மகிழவெகுபணி யலங்கரிப்பேன்...... ... ...*
சிரசுமுதலுடலில் விருதுகள்தரிப்பேன்......... ... *
துஷ்டரைமடிப்பேன் - எடுப்பேன் ... ... .......*

கட்டியம்படிப்பேன்-தொடுப்பேன்...... ........ .........*
அதிமேவுபணிபாத - கனலோபர்தனைமவாரி... ... ......*
அடித்தடித்தனைநொடிக்குளுக்ரம......... ... ......*
மிகுத்தடிக்கடிபடைக்குளொப்பென... ... ... (வாசத்)

காலதூதர்கள்வருகிறபொதுவிருத்தம்,

கோலங்கொள்தென்றிசைக்கோர் குறைவின்றிநடத்துன்ற *
நீலங்கொள்மேனியான நெடுமுடிஎமனூர்தன்..............*
வேலையிலட்டியின்றி வெகுதுரிதமதாய்ச்செய்யும்...... ...*
காலதூதர்கள்சபைக்குக் கடிதினில்வருகின்றுரே...........*

கட்டியக்காரரன் சொல்வசனம்,

அகோதெப்படியென்றால் எமதர்ம்மராஜன் கொலுவிற்குக் காலதூதர்கள் வருகிறவிதங்காண்க.

தூதர் வருகிற-தரு-௩-ம்- கலியர்ணி-ஆதிதாளம்,

பல்லவி.

வாததூதர்நாங்களே - எம காலத்தூதர்நாங்களே ......... *

அநுபல்லவி,

நீதியுள்ளயெமதர்ம்மராசனும்......... ......... ...... *
நித்தந்துதித்திடும்பத்தர்களாகிய...... ............ (வாதத்)

சரணங்கள்,

அண்டாண்டநவகண்டமெல்லாங்கையிலடக்கித்தாக்குவோம் .........*
அச்சமில்லாமல்நடக்குமடையனை அலைத்தூக்குவோம்... .........*
எண்டிசைபுகழும்குலத்திருக்குத்தி.. .............. ..............*
இஷ்டப்படிசெய்யகெட்டிக்காரர்நாங்கள்........... ... ... (வாத)
காலத்துக்கொவ்வாதபாவிகளைக்கண்டால் கடித்துக்கொல்லுவோம் ... *
காதகநெஞ்சம்படைத்தவனைக்கண்டால்கடுகவெல்லுவோம்............*
மூலமறியாதமூடர்தங்களை... .............. ......... .. ... ......*
முட்டிக்காலதூதரால்கட்டிவரச்சொல்லுவோம்,....... ... ... ...(வாத)
துஷ்டரைக்கண்டாலிடங்கொடுக்காமலேகுலத்தினுவிடிப்போம்......*
துள்ளத்துள்ளக்குத்திப் பாசக்கயிற்றினுல்தூக்கியேயிடிப்போம்......*
கட்டுக்கடங்காதகாலத்தூதர்நாங்கள் ...... ................ ........*
காசினிப்புகழேமன்-வாசத்படிகார்க்கும் ... ... (வாததூதர்நாங்களே)

கட்டியக்காரன் கூறல்-விருத்தம்,

ஒளிவுள்ளசெனங்களேகேளுமத்தசொற்காட்டவேண்டாம் ... ...*
மொளமொளவென்றுசொல்லி மூத்திரமும்பேசவேண்டாம்...... *

சளசளவென்னவுமிங்கே சக்கட்டம்படிக்கவேண்டாம்... ... ...*
தனமுள்ளதருமர்வாரார் சந்தடிபண்ணவேண்டாம் ... ... *

இதுவுங்-கூறல்-விருத்தம்,

அதிபதிவாரார்வாரார் அங்கங்குநிற்கவேண்டாம்.................*
எதிர்மதியுரைத்தால்வெட்டி யிருதுண்டமாகச்செய்வார் ..........*
இதுகெதிசொன்னேனுஞ்சொன்னேனுமிழுத்தடித்துதைப்பார்தூதர் *
பதியதுதேடிக்கொண்டு பதலமாயிருந்திடுமோ ... ... ... *

இதுவுங்கூறல்- விருத்தம்,

கூத்தினைப்பழித்தபேரைக்கொடுவந்து கழுவில்மாட்டி ... *
சாத்துவோம்பாறையாலே தடையில்லைபயந்துநின்று ... ...*
பார்த்துசந்தோஷங்கொண்டு பதியினுக்கேசெல்லுங்கள்.........*
நாற்றிசைமன்னரோடும் நமனிதோவருகின்றாரே...... ... ......*

இதுவுங்கூறல் - விருத்தம்,

நமனிதோவாரார்வாரார் நகைத்திடாதேயிருங்கள்... ...........*
சமையமீதென்றுதூதர் தள்ளுவார்நரகந்தன்னில்... ... ... *
அமையுமேயுங்களுக்கு அவிதிகள்வருவதேனோ.. ...... ... ...*
செமையதாயிருந்துபாரும் தென்றிசைக்கதிபர்வாரார்...........*

கட்டியக்காரர்- சொல்-வசனம்,

அகோதெப்படியென்றால் ராஜாதி ராஜனான எமதர்ம்மராஜன் சிங்காரக்கொலுவிற்குவருகிற விதங்காண்க.

எமதர்ம்மராஜன் - கொலுவுக்கு - வருகிற-தரு
இ-ம்-மத்தியமாவதி-திரிபுடை-தாளம்-

பல்லவி,

ராஜயோசவிசுவாசன்வந்தானே - எமதர்ம்ம ராஜன்வந்தானே *

அநுபல்லவி,

நேசமாகிய - ராஜ்ராஜரும் ...... ...... ... ... *
நெருங்கிவருகவே-கரங்கள்கூப்பியே.. ............. ......*
ரோஷிதூதர்கள் - அடிதடிக்கவே ... ... ... ... *
விநோதமுடன்கொலுவீற்றிருக்கவே ... ... ... ... ... (ராஜ)

சரணங்கள்,

சிரசில்நவரத்ந மகுடமின்னவே ... ... ...*

தீபம்போற் புஜகீர்த்தி துன்னவே ... ... *
தரியலர்கள் ஒடுங்கிடென்னவே ... ... ... *
தரணியமைச்சர்கள் சமர்த்தரென்னவே ... ... (ராஜ)
மகுடமுடியொடு மகுடமடிபட ... ... ... *
வலதுபுஜத்தொடு புஜங்களிடிபட ... ... *
விருதுகொடிகளு மோங்கியடிபட ... ... *
மேன்மையாகக்கொலு வீற்றிருந்திட ... ... (ராஜ)
வேதவேதியர் வேதம்புரிகவே ... ... ... *
வீரர்கட்டியங் கூறிவருகவே ... ... *
நீதியாய்தர்மம் மேனும்பெருகவே ... ... *
நெடியகொலுவினி லிருந்துபார்க்கவே ... ... (ராஜ)

கட்டியர்கள்-கட்டியங் கூறல்.

ராஜாதிராஜனே ராஜமார்த்தாண்டனே ... ... *
நடுவனேதென்றிசையில்வாழ் ... ... ... *
ராஜகெம்பீரனே பாசமுங்கைக்கொண்டு ... ... *
ராச்சியத்துயிரையெல்லாம் ... ... ... *
கூசாமலேபிடித் தவரவர்கள்செய்பாவ ... .. *
குற்றத்தைநிறைப்படிக்குக் ... ... ... *
குறைவராச்செங்கோல் நிறைப்படிசெலுத்திபே ... *
கோஷ்ட மெல்லாமடக்கும் ... ... ... *
காசாம்புவர்ணனே கையினிற்சூலனே ... ... *
கண்டனேக் கொரு வீரனே ... ... ... *
கருங்கடாமீதேறு மறலியே யவரவர்கள் ... ... *
கர்மத்துக்கதிகாரனே ... ... ... *
கேசாதிசூட்டியே யச்சுதப்பட்டணங் ... ... *
கீர்த்தியுடனே யாண்டிடும் ... ... ... *
கெடிபெற்ற மன்னனே முடியுற்றகன்னனே ... *
கெம்பீரமான நமனே ... ... ... *

எமதர்ம்மராஜன்- கொலுவிருந்து கடவுளைத் துதித்தல்.

விருத்தம்- இ-ம்-மத்தியமாவதி.

தருமமேதருமமிந்தத் தாரணிதழைக்கவேணும் ... ... *
தருமமும்மாரிபெய்து சதாகாலம் வாழ்கவேணும் ... ... *
தருமமாமெனதுசெங்கோல் தாழ்வில்லாதிருக்கவேணும் ... *
தருமமேபெருகவேணுஞ் சங்கராபோற்றிபோற்றி ... ... *

எமதர்மராஜன்-லோகவிசாரணை,

சீரணியுமெமபுரக்கொலுவதனிலெல்லோருஞ்சேர்ந்திருக்கின்றார்களா,*

தூதர்சொல்லல்,

திறமுள்ள சண்டப்பிரசண்டனையெல்லோருந்திகழ்சபைதனில்நிறைந்தார்

இராஜன்கேட்கல்,

ஏரொழுகுபரமாதர்காமுகத்துரோகருக்கெமதண்டனை நடக்குதா ...*

தூதர்சொல்லல்,

எப்போதுமெப்படியப்படியேதண்டனையியலாகநடக்குதையா.... ....*

இராஜன்கேட்கல்.

அவனிதனிலுள்ளோர்கள்புண்ணியமதையெப்போதும் அகமகிழச்செய்தார்க [ளா

தூதர்சொல்லல்.

ஆமதற்கொருகுறைவுமில்லாமல்சிலதுபேர் அப்படியேசெய்கிறார்கள்...*

இராஜன்கேட்கல்.

பாவமதுபுரிந்தபேர்பாழுநரகக்குழியில்பரதவித்திருக்கிறார்களா......*

தூதர்சொல்லல்,

பணிந்துசொல்வேன்கேளுமறலியே யந்தவிதம்பதிகுலைந்தலைகிறார்கள்*

இராஜன்கேட்கல்,

பஞ்சமாபாதகர்களக்கினிஸ்தம்பத்தைபற்றித்தழுகின்றார்களா... ...*

தூதர்சொல்லல்

பாவமும்புண்ணியமுமறிந்துபின்ஸ்தம்பத்தைப்பற்றி அவர்தழுகிறார்கள்*

இராஜன்கேட்கல்,

வஞ்சகஞ்செய்தவரைக்கிங்கிலியர்கரும்பாம்பின்வாய்க்கிரைகொடுக்கிறாரா

தூதர்சொல்லல்,

வரிசைபெருமந்தகாலக்கிங்கிலியர்கரும்பாம்பின்வாய்க்கிரைகொடுக்கிறார்கள்

இராஜன்கேட்கல்.

சூதுசெய்பாதகரைமந்திரித்தூதர்கள்சூலங்கொண்டடிக்கிறாரா ... ...*

தூதர்சொல்லல்,

சொல்லொணாப்புகழ்பெற்றகாலரோ அந்தடிசுருண்டுவிழ அடிக்கிறார்கள் *

இராஜன்கேட்கல்,

நீதிதவிர்கொலையாளர் தங்களைச்செக்கினில் நிறுத்தியேவதைக்கிறாரா... *

தூதர் சொல்லல்.

நிலைவழுவாதயெமதர்மரேயவர்களைநெடுநாளாய்ச்சிதைக்கிறார்கள்... *

இராஜன்கேட்கல்

இன்னதமதாக்கினையிலகப்பட்டபாவிகளிருக்கிறாரோயில்லையோ ......*

தூதர் சொல்லல்,

இப்பதான்கொடுவந்தபொல்லாததோஷிக ளிதோவருகில்நிற்கிறார்கள் *

இராஜன்கேட்கல்,

என்னபாவங்களைச்செய்தபேரிவர்களுமெனக்கறியவுரைத்திடுகுவீர் ... *

தூதர்சொல்லல்,

இறைவனேயிவன்குருத்துரோகியிவன்தாயாரையிசகஷிபேசினவனையா *

இராஜன்-தூதருக்குச்சொல்-விருத்தம்,

குருவுக்குத்துரோகஞ்செய்தகொடியபாதகனைவாட்டி.................. *
நரகத்திற்றள்ளுமிந்தநாயையென்முன்வையாதே.......... .......... *
பிரியமாய்ப்பிள்ளைவேண்டிபெற்றாளைவதொன்றன்னை...... ........... *
முரியனையக்கினித்தனில்மோதுவீர்மோதுவீரோ.......... ......... *

வசனம்.

ஆரடா அடாவெமகாத கிங்கிலியரோ அடாநாம் இதுவரைக்கும் எம தண்டனைபண்ணிவந்தோம் இந்நாள்வரைக்கும்குருத்துரோகிவந்தானெ ன்கிற சொல்லில்லை ஆகையால் குருவுக்குத்துரோகம்பண்ணி குருவைப் பழித்த படுபாவியைக்கொண்டுபோய் பொல்லாதவதைவதைத்து நரகத் தில் தள்ளிப்போடுங்கள் ஆகா-ஆகா-மகாபிரியமாய்ப் பெற்றுவளர்த்த தாயைவைத இந்தத்தோஷியைக்கொண்டுபோய் அக்கினிஸ்த்தம்பத்திலே மோதிவாருங்கள் அந்தமுரிபனை என்முன்னில் வைக்கவேண்டாம் கொ ண்டுபோங்கள் காலதூதர்களே,

கிங்கிலியர்சொல்-தரு-இ-ம்-புந்நாகவராளி-அடதாளம்,

குருவைப்பழித்தகொடியபாதகன்றன்னைக்...... ......... ........ *
குத்தித்தள்ளரடா தள்ளுகில்லியா - இப்போ...... ....... .......... *
நத்திபெத்தென்கிறான்கில்லியா.................................... *
ராஜ-னுத்தாரப்படிநரகத்தினில்தள்ளடா......................... *
பெத்தானகூனுகிங்கில்லியா........ ................................ *
கொடியபாதகஞ்செய் தகுற்றத்திலகப்பட்ட......................... *
கூக்கையைச்சூலங் கொண்டிடியடா - இந்தச்...... ............ *
சோகையைத்தடியாலேயடியடா................................... *
நல்ல-தாகட்டுக்கருத்தேனோ- யேகிட்டுக்கடித்தபின்............. *
ஆகாநரகத்தில்தள்ளடா... ... ...... ... ... ................. *
பெற்றதாய்தந்தையைப்பிறந்கழியாய்ப்பேசும்................... *
பேயனை அக்கினிஸ்த்தம்பத்தில் - ராஜன்............ .............. *

வாயாலுரைத்திட்டவோமத்தில்... ... ... ... ... ...........*
உபாயமாகப்பாம்பின்வாயிற்கடிக்கவிட்டு..... .......................*
நீயும்அக்கினிதன்னில்மோதடா ........................................*
வாயழிவாய்ப்பேசும்மாபாவங்கொண்டோனே.................................*
வதைக்குஞ்சூலங்கொண்டிடியடா-இவனைச்..................................*
சதைக்கும்வளைதடியாலடியடா...........................................*
இன்னும்-உதையுங்குத்துமாகவுதைமேலுதையுதைத்து........................*
பருத்தஅக்கினிதன்னில்மோதடா........................................*

கிங்கிலியர்-இராஜனுக்குச்சொல்-விருத்தம்.

கொலுவினிலிருக்குமன்னுகுருவுக்குத்துரோகஞ்செய்த ...*
நலமிகுதோஷிதன்னை நரகத்திற்றள்ளிவிட்டோம்............*
நிலையுள்ளதாயைவைதநிஷ்டூரப்பாவிதன்னை... ...............*
கொலைபுரிபக்கினிதன்னிற்கொண்டுபோய்மோதிவந்தோம்...*

வசனம்,

சரணஞ்சரணம் ராஜபரமேஸ்பரா குருவுக்குத்துரோகஞ்செய்துகு ருவைப்பழித்த படுபாவியைக்கொண்டு பொல்லாதவதைவதைத்து நரக த்தில் தள்ளிவிட்டோம் தானென்றுசெருவங்கொண்டு தாயைவைத தோ ஷியைக் கொண்டுபோய் பொல்லாத சித்திரவதைசெய்து அக்கினிஸ்தம்ப த்திலே மோதிவந்தோம் மகாராஜனே,

இராஜன்-தூதருக்குச்சொல்-விருத்தம்,

ஆரடாதூதரேகேளடங்காதபாவியான்......................... ... ... ...*
பேர்டாபாசத்தாலேபிடித்திங்கேகொடுவந்தீரா..............................*
கூர்டாயெந்தன்முன்னேகொடுவந்துவிடடாயிப்போ..........................*
பாரடாயெனதுசெங்கோற்படிமுறைசெலுத்துவேனே..........................*

வசனம்,

ஆர்டா அடாகாலதூதர்களே இன்னம் எந்தெந்தப் பாவிகளைக்கொ ண்டுவந்து வைத்திருக்கிறீர்களோ அவர்களை யென்முன்பாகக்கொண்டுவந் துவிடுங்கள் என துசெங்கோற்படிசெலுத்துகிறேன் காலதூதர்களே.

கிங்கிலியர்-இராஜனுக்குச்சொல்-விருத்தம்.

திடமுள்ளநமனேயித்தத்திருட்டனைப்பாரிவன்றான்........... ... ......*
வடிவுள்ளபிராமணன்றன்மனைவியைக்கைபிடித்தோன்.....................*
நடிவனேயிவனைப்பாரீர்நானெனென்றுகெருவங்கொண்டோன்.......................*
மடிமோசஞ்செய்தோன்மெத்தமாபாவியிவன்றானையா........................*

வசனம்,

கேளும் எமதர்மராசனே-இவனே பிராமணஸ்திரீயைக்கைபிடித்த வன், இவனேஉண்டவீட்டில் ரெண்டகநினைந்து தானென்று கெருவங் கொண்டவன் சாதகநெஞ்சத்தைப் படைத்தவன் இவன் மார்பி லெங்கும் ரோமத்தைப்பார்த்தீரா-சுவாமி.

இராஜன்-தூதருக்குச்சொல்-விருத்தம்,

தேசிகப்பெண்தோஷித்தில் சிக்கினபாவிதன்னை..................*
ஊசியில்திருத்தித்தேளையுடம்பெல்லாம்விடுத்துக்கொல்வீர்... ... ...*
கேசரியாதானென்றுகெருவத்தையடைந்தோன்றன்னை... ........*
வாசியிற்சேதுக்கிப்பாம்பின்வாய்க்கிரைகொடுத்திடீரோ.................*

வசனம்,

ஆரடா அடா எமகாதகிங்கிலியரே-அடா இந்தப்பிராமண தோஷ த்திலகப்பட்டவனைத் தள்ளிக்கொண்டுபோய் ஊசிமுனையில்திருத்தி கரு ந்தேளைக் கடிக்கவிட்டு வதைசெய்யுங்கள் மேலும் ஒருவரையும் மதி யாத மூடப்பெட்டிமகனைக் கொண்டுபோய் தரையிலதள்ளி வாசிகொ ண்டுசேதுக்கி காக்கைக்கிரையிட்டு பின்னும் வதைசெய்து பாம்பின் வா யக்கிரை கொடுத்துவாருங்கள் கொண்டுபோங்கள் காலதூதர்களே.

தூதர்கள்-சொல்-தரு-இ-ம் புந்நாகவராளி-ஆதிதாளம்.

இறைவனுத்தாரப்படியிவன் றனைப்பிடியடாஇல்லியா - இவனை... ......*
இருக்கடாயுருக்கடாபெருக்காமல்நருக்கடா-இல்லியா................ ...*
மறையவன்பழிக்காகவதைசெய்துவிடுகுவோம் இல்லியா... ...... இவனை
மடக்கடாஅடக்கடாபிடிக்குள்ளேபொடுக்கடாவில்லியா...... ... ......*
மோசமதாகயிவன் மூதுகினில்மாறடா இல்லியா...... ........... இவன்
மூளிக்குறானிளிக்குறான் ஒளிக்கவேவளைக்குறான் வில்லியா... ... ...*
ஊசிமுனையிற்குத்திதேளைவிடடா அடா இல்லியா ............ தோலை
உரியடாவிரியடா விரியமாயுரியடா வில்லியா ... ...................*
அவனிமன்னவன்சொன்ன ஆக்கினைப்படியடா இல்லியா ... ... இவனை
அடியடாகடியடாமடையனைப்பிடியடா வில்லியா............... ...... *
எவனும்நமக்கீடில்லையென்றுசொல்லிநகைக்கிறான்-இல்லியா- இவனை
பிடியடாபொடியடகொடிவழிநடவடா வில்லியா ... ... ......*
நாசகாலனைத்தள்ளிநருக்கடாநொருக்கடா இல்லியா ... ... வெட்டி
நடக்கிறான்மூடுக்கிறான்விடுக்காமற்பிடியடா வில்லியா...................*
வாசிபாலேயிவனைவரிசையாய்ச்செதுக்கடா இல்லியா... ... ......பாம்பின்

வாய்க்கிரையாகயிப்போயேக்கியேபெரியடா விவ்வியா................ *

இங்கிலியர்-ராஜனுக்குச்-சொல்-விருத்தம்

சண்டனேவேதியர்க்குச்சர்ப்பனைசெய்தோன்றன்னைக்...... ... ...*
கொண்டுபோயூசிதன்னிற்குத்தியேதேவிட்டோம்... .............*
மிண்டனாய்செருவங்கொண்டவீணனைவாசிகொண்டு....................*
துண்டஞ்செய்பாம்பின்வாய்க்குத்தொகுத்திரைகொடுத்துவந்தோம்...*

வசனம்,

சரணஞ்சரணம் ராஜபரமேஸ்பரா வேதியஸ்திரீ யாதகத்திலகப்பட்டவனைக்கொண்டுபோயூசியிற்குத்தி வதைத்தோம் நானென்று செருவங்கொண்ட மூடியனைக்கொண்டுபோய் வாசியிற்செதுக்கிப்பாம்பின்வாய்க்கிரைகொடுத்துவந்தோஞ் சுவாமி.

இராசன் தூதருக்குச்சொல்கவி,

வர்ன்னப்பல்லொளிதூதர்களே வந்தபாவிகள்தான்போக .......*
இன்னம்பாவிகள்தானுண்டோ யியம்புமியம்புமெந்தனுக்கே ...*

தூதர்சொல்கவி,

தருமமெங்குமுறைதிசெலுத்துஞ்சண்டாபாவிகள்தான்போக*
கருமவினைக்குளகப்பட்ட கபடர்தானுமில்லமன்னா.........*

மற்றொரு தூதன்ராஜனுக்குச்சொல்கவி,

மன்னர்வணங்குமன்னவனே மகாபாதகஞ்செய்தவர்கள்... ......*
இன்னமுலகிலில்லையையா இறைவா சரணமன்னவனே..............*

இராஜன் தூதருக்குச்சொல் பரணி,

ஆடாகாலதூதர்களே - அதிசீக்கிரமதாய்ச்சென்று... ...*
சீருடனம்துகணக்கெழுதுஞ் - சித்ராபுத்ரனையழைப்பீரோ*

தூதர்- சித்திராபுத்திரனுக்குச் சொல் பரணி,

பகுத்தப்பகுத்துக்கணக்கெழுதும்- பாக்யமுள்ளகருணிகனே...*
வகுத்தரமனுமுனையழைத்தார் - வருவீர்நொடியில்வருவீரோ... *

சித்திராபுத்திரன்-தூதருக்குச்சொல்-பரணி,

நம்மைபாலுமெமதர்ம - ராஜனழைத்தப்போதேநான் ...*
செம்மையாகவேவருவேன் - சேர்ந்துவாரீர்தூதர்களே... *

சித்திராபுத்திரன்வருகிற தரு-இ-ம்.சங்கராபரணம்-மிசுரதாளம்.

பல்லவி

ஊருக்குநானேகணக்கப்பிள்ளை-மத்றப்............ *
பேரெல்லாம் அணிப்பிள்ளை சீரிப்பிள்ளை...... ......*

அநுபல்லவி.

தேருக்குளிருக்கின்ற சித்ரமெல்லாமெந்தன்..................*
சித்தத்தில்நிர்ம்மிக்குஞ் சித்ராபுத்ரனானே.........(ஊருக்கு)

சரணங்கள்

பட்டோலையைக்கட்டி யிரப்பிலேபாச்சுவேன்..............................*
கண்டபடியெல்லாங் கணக்கைப்பிரட்டுவேன்.........................*
சட்டமாயிறப்பவர் பிறப்பவர்தங்களைச்..................................*
சாதிக்கவல்லவன் சோதிக்கநல்லவன்.......................... (ஊருக்கு)
கையெழுத்தாணியை மெய்பாய்ச்சுழட்டுவேன்...........................*
கணக்காகச்சொல்லுவோர் கருத்தைப்பிரட்டுவேன்......................*
வையகந்தனிலெங்கும் வளர்ந்திடுஞ்செந்நெல்கள்...................... *
மாறிவரும்போது கூறித்துலைத்தைப்பேன்...............(ஊருக்கு)
வந்ததொகையிதென்று வழிதனைச்சொலமாட்டேன்..................... *
வாய்ப்பேச்சைப்பிடுங்கி வழக்கில்விட்டுவிடுவேன்.... .............. *
தந்த்ரயித்ரசால சமர்த்தெல்லாஞ்செய்திடுவேன்.......................*
சாகும்பேராயசு தன்னையுமாந்திடுவேன்.................... (ஊருக்கு)

சித்திராபுத்திரன் ராஜனுக்குச்சொல் விருத்தம்,

நானிலமெங்குங்கீர்த்தி நலமுடன்பெற்றலோலா..........*
தானசம்பத்திற்கீர்த்தி சம்பத்தாய்வாழ்விசாலா...... ......*
சேனையோடிருந்தகீர்த்தி செங்கோலும்படைத்தலீலா.....*
ஆனையாவழுத்தசேதி யியம்புந்தென்றிசையிற்காலா.........*

வசனம்.

சரணஞ்சரணமையா யெமதர்ம்மராசனே யென்னை யழைப்பித்தகாரியம் அருளிச்செய்யுமையா சுவாமி,

இராசன்கணக்கப்பிள்ளைக்குச்சொல் விருத்தம்,

வானுள்ளோர்கணக்குமிந்த வையகத்தோர்கணக்கும்......*
நானறிந்திடவேவேணும் நன்றிசேர்கடையூர்தன்னில்... ..*
ஞானமார்க்கண்டனுக்கு நாள்சென்றகணக்குமிப்போ ... *
மானியாய்ப்பார்த்துரைப்பாய் மதியுள்ளகணக்கனாரே......*

வசனம்,

கேளுங்கருணீக வம்சாதிபதியான சித்திராபுத்திரனே இந்தவானுள்ளோர் கணக்கும் அந்த வையகத்தோர்கணக்கும் இல்லம்மற்றமுன்னபேருடைய கணக்கும் மேலும் திருக்கடையூரிலிருக்கு மிருகண்டரு

டைய குமாரனுன மார்க்கண்டனுக்குவயது சரியானகணக்கும் நானறிய வேணும் ஆகையால் சீக்கிரமத்துக்குக்கணக்கையெடுத்துப்பார்த்துச்சொல்லுஞ் சித்திராபுத்திரனே,

சித்திராபுத்திரன் ராஜனுக்குச்சொல் கவி,

கண்டிதமுடனே கணக்கையும்பார்த்து.............. ... ...*
சண்டனேசொல்வேன் சமர்த்தைப்பாரும்... ................*

சித்திராபுத்திரன்சொல் வசனம்,

ஆரடா அடா சுபேமூஞ்சிசுணங்கா கணக்குக்கட்டையெடுத்துக்கொண்டுவாரும்பிள்ளாய், (அப்படியே யெடுத்துவந்தேனையா)

சித்திராபுத்திரன் கணக்குப்பார்க்கிறவசனம்.

பார் - பார் - பள்ளத்தார்கணக்கு - யிது - தீர் - தீர் - திண்டிவனத்தார் கணக்கு - யிது - கூர் - கூர் - குடிசைபாளையத்தார்கணக்கு - யிது - ஆர் - ஆர் - ஆண்டிகள்கணக்கு - யிது - ஏர் - ஏர் - ஏழும்பூர்கணக்கு யிது - ஓர் - ஓர் - ஒட்டர்கள் கணக்கு - யிது - மார் - மார் - மறவர்கள் கணக்கு - யிது - வீர் - வீர் - வேசிகள்கணக்கு - யிது - கோர் . கோச்சுயவர்கணக்கு - யிது - சிர் - சிர் - சிர் - சீர் - சீர் - செயமார்க்கண்டன் கணக்கு - யிது - சுவாமி,

சித்திராபுத்திரன்ராஜனுக்குச்சொல் விருத்தம்,

காலனேவாராயிந்த கணக்கையும்பாராயத்த..................*
பாலன்மார்க்கண்டனுக்குப் பதினாறுவயதுமாச்சு..............*
கோலமாநீறுபூசி குறுந்தடிபிடித்துநிற்கும்................ *
காலதூதனைவிடுத்துக்கட்டியேவாரச்செய்வீரோ................*

வசனம்.

கேளுமையா எமதர்மராசனே இதுவரையிலும் பார்த்த கணக்கில் யாருமகப்படவில்லை திருக்கடையூரிலிருக்கும் மிருகண்டருடைய குமாரனுன மார்க்கண்டன் அகப்பட்டான் நமது காலதூதரைவிடுத்து கட்டிக்கொண்டுவரச்சொல்லும் மற்றகணக்குப் பார்த்துச்சொல்லுகிறேன் மகாராசனே,

இராசன் தூதர்களுக்குச்சொல் விருத்தம்,

தூதரோகேளீர்கேளீர் சோலைசூழ்கடையூர்தன்னில்.........*
நீதன்மார்க்கண்டனென்னும் நிமலனைப்பூசைசெய்வான்... *
சோதனைபார்த்துநீங்கள் - துணிந்தவன் றன்னைக்கட்டி...... *
தூதுவாய்நமதுமுன்னே கடுகெனக்கொண்டுவாரீர்........*

வசனம்

ஆரடா அடா காலதூதர்களே (சுவாமி) திருக்கடையூரி லிருக்கும்மி ருகண்டருடைய குமாரனான மார்க்கண்டன் ஆரணியத்தில் சிவாலயத்தில ருகே சிவபூசைசெய்துக்கொண்டிருக்கிறான் அவன் பூசைக்குஅஞ்சி நீங்க ள்பயப்படாமல் பாசத்தினாலேகட்டி சூலத்தினாலேகுத்திக்கொண்டு நமது யெமபுரத்துக்குக்கொண்டுவாருங்கள் காலதூதர்களே,

தூதர்-இராஜனுக்குச்-சொல்-கவி,

அப்படியேபோய் - எப்படியாகிலும்...... ...*
கைப்பிடியாய்க்கொண் - டிப்பவேவாரோம்... *

தூதர்சொல்-தரு,

ராஜனுத்தாரப்படிரோஷமூடனடந்துவாடா...................... ...*
(அடாதூதா-எண்டாபூதா)நாமெல்லோருந்துதித்துநடப்போம்...*
நாசகாலத்தூதனே-தூசியெழும்பிடவேவாடா.......... ........ *
(அடடாகரடா-எண்டாமூரடா)நாடுங்கிடுகிடென்னநடப்போம்... *
வாசிப்பல்லழகாநீ-தேசச்சில்லாக்கோலேந்திவாடா........ ........ *
(அடாகுள்ளா-எண்டாகள்ளா)வாழுமார்க்கண்டனிடமுநடப்போம்.. *
பாசக்கயிறெடுத்துவீசிப்பிடிப்போமெள்ளவாடா....................*
(அடடாகாக்கா-எண்டாமூக்கா)பருத்தமீசைமுறுக்கிநடப்போம்...*

தூதர்சொல்-விருத்தம்,

மதங்களாய்ப்போரவண்ணமார்களேசூட்சியொன்று.................. *
பதமுனிநமைக்கண்டிட்டாற்-பதுங்கியேகொள்வான்மேலும்... ... ...*
ஒதுங்கியேலகுவெடுத்து வரத்தசொற்காட்டாமற்றான்... ...........*
பதுங்கியேபோனுமானாற்பாலனைப்பிடிக்கலாமே....................*

வசனம்,

வாருங்களண்ணமாரே நாமிப்படிக்குச்சந்தடியாய்ப் போனுமா னால் அந்தமார்க்கண்டன் எங்கேயாகிலுமிருந்து நம்மைப்பார்த்துப்பது ங்கிக்கொள்ளுவான் பிறகு அகப்படமாட்டான் ஆகையால் சந்தடிபண் ணாமல் நாலுபக்கமும்பதுங்கி நடவுங்கள் அண்ணமாரே,

மார்க்கண்டன்-சொல் -வசனம்,

அரகரா - அரகரா - அரகரா - அரகரா - திருக்கடையூரீசா திருபுர தகனா சிவகுருநாதா அடியேனைத்தூதர்வந்தணுகாமுன்னம்உமதுபாதா ரவிந்தஞ்சேரவேணுங் கர்த்தனே.

மார்க்கண்டன்-சொல்-தரு-இ-ம்-புந்நாகவராளி-ஆதிதாளம்.

திருக்கடையூரானே-சந்திரசேகரனே-நந்திவாகனனே................*
உருக்கமதுடையோனே-எனக்காகஉல்லாசனேவெகு வில்லாசனே...*
அமுர்தகண்டீஸ்வரனே-அன்பனா ஆண்டவனேசபை தாண்டவனே...*
அமரர்கள் துதிப்போனே-எழைமுன்வருவோனேவரந்தருவோனே...*
சினமுற்றுவாரானே-காலனும் தேடுவானேயெனைநாடுவானே..........*
உனை நிதம்நம்பினேனே-எனக்காகஉத்தமனேகிருபைவைத்தவனே... *
எனைக்கொடுபோவானே-நமனினியீஸ்வரனேமாயேஸ்வரனே... .......*
மனமதுகொள்வோனே-யினியெனைக் காப்போனே பதஞ் சேர்ப்போ
[னே

தூதர்-சொல்- விருத்தம்,

சீரானஅண்ணமாரே சிவபூசையோசைகேளீர்... ....... ...*
நேராகவந்துநின்று நிலக்கவரலோசனித்து.......... .. ...*
பூராயமாகயிந்தப்புதரினில்நுழைந்துபார்த்து.. ............*
பாராளும்தருமர்சொன்னபாலனைப்பிடிக்கலாமே........ *

வசனம்,

வாருங்க எண்ணமாரே சேருங்கள் ஒன்ருய்ச்சேருங்கள் சிவபூசை யின் ஓசை அடிபடுது கேளுங்கள் நேராக இந்தப் புதரினில் நுழைந்து பாருங்கள் அகப்படுவான் அண்ணமாரே.

தூதர் சொல் விருத்தம்

கோடாவிப்பல்லாவாடாகொள்ளிக்கண்ணூதாவாடா........*
ஆடாதகூத்தையாடு மழகுகூன்முதுகாவாடா..... ..........*
மோடானமூக்காவாடாமுட்டிக்கால்பூதாவாடா...... .......*
வாடாதவனுமைபெற்றமார்க்கண்டனிவனுபாராய் ... ...*

வசனம்,

கோடாவிப்பல்லா - கொள்ளிக்கண்ணூதா - கூன்முதுகா- குருங்கால்பூதா - கோட்டுவாயா - மூடுகண்ணு - நமது மகாராசன் சொன்னமார்க்கண்டன் இவன்தானு பாருங்கள் அவன்தான்போலத் தோற்றப்படுகின்றது நன்ருய்ப்பாருங்கள் ஒன்ருய்ச்சேருங்கள்,

தூதர் -சொல் -விருத்தம்,

தென்திசைக்கதிபன்சொன்னசிவாலயமிருக்குதிங்கே... ...*
அன்புடன்பூசைவேனையரனுக்குச்செல்லுதிங்கே.............*
இன்னம்வேறில்லைமைந்தனிவனேமார்க்கண்டன்கண்டாய்...*
மன்னவனழைத்தானென்றுவாக்கினாலழைத்திடீரோ..........*

வசனம்,

கேளுங்கள் அண்ணமார்களே மகாராசன் சொன்ன மார்க்கண்ட னிவன்தானுபாருங்கள் சிவாலயமுமிருக்குது சிவபூசையும்நடக்குது இவ னும் சிறுபிள்ளையாயிருக்கிறான் சமுசயமில்லை மார்க்கண்டன்இவன்தான் அழைத்துப்பாருங்கள் அண்ணமார்களே,

தூதர்-மார்க்கண்டனுக்குச்சொல்- விருத்தம்;

ஈசனைப்பூசைசெய்வதிருக்கட்டுமுனிமார்க்கண்டா...... ...*
ராசபூபதியோனுனநமனுமேயுன்னைக்கண்டு...... ... ...*
நேசமாய்த்திடமுனாத்துநிமிஷித்திலழைத்துக்கொண்டு ...*
பாசமாய்வரவேசொன்னார் பாலனேவருகுவாயே........*

வசனம்.

வாருமப்பா மார்க்கண்டா-நீ- சிவபூசைசெய்வதிருக்கட்டும் எங்கள் ஸ்ரீமத்தர்ம்மராசன்உன்னைப் பிரியத்தோடழைத்துவரச்சொன்னார் கேட்டு வருவாய் வாருமப்பா;

மார்க்கண்டன் தூதருக்குச்-சொல்-கொச்சகம்,

வந்தழைத்தாரொமதூதர்வானோர்பிரானேபுந்தன்...... ...... .........*
சிந்தையிலெண்ணியிப்போசெய்ததொருகுற்றமெல்லாம்.............*
முந்தியேமனம்பொறுத்துமுத்திதரும்பொற்பதனே...................*
எந்தனைக்காத்தருளும்பிஸ்பரமயேஸ்பரனே......................*

வசனம்,

அரகரா மகாதேவா யெமதூதர்வந்து பாசகுலங்காட்டி யழைக்கி றார்கள் என்னைப் பிடியாமுன்னமே உமது பாதார விந்தம் சேர்த்துக் கொள்ளுங் கர்த்தனே,

சிவன்-மார்க்கண்டனுக்குச் சொல்- கொச்சகம்,

அஞ்சாதேயஞ்சாதேஆனைமுகனறியச்சொன்னேன்...... ...... .......*
மிஞ்சிடாரொமதூதர்மிகவுவுனைச்சேரார்கள்கண்டாய்...... ............*
நெஞ்சினில்நமைத்துதித்துநின்றுநீபூசைசெய்தால்....................*
யஞ்சதுபோறப்பார்கள்பாலகனேயஞ்சாதே......... ...... .........*

வசனம்,

வாராயப்பாமார்க்கண்ட செல்வமே வந்திருக்கிற தூதர்கள் உன்னி ட்டவந்து அண்டுவார்களா அண்டமாட்டார்கள் இதோநான்ஆனைமுக னறியச்சொன்னேன் உன்னைக்காட்டிக் கொடுப்பதில்லை -நீ-சுகமாய்ப் பூசை

யிலிருவந்ததூதனைப் போகச்சொல்லுவாயப்பா.

மார்க்கண்டன்-தூதருக்குச்-சொல்-விருத்தம்,

நப்பிதமில்லையேமதருமருமனைத்தசேதி......... ........................*
எப்படிவருவேனிப்போபெத்தனையாட்கொண்டாலும்.... ... ............*
அப்பணிசடையோனுக்குமாதிகாலத்துப்பூசை.......... ..............*
செப்பமாய்நடக்குதென்றுசேதிபோய்ச்சொல்லுவீரோ.............. ...௩

வசனம்,

சேனுங்கள் காலதூதரே-உங்கள் மகாராசனழைத்துவரச் சொன்ன திசரியே இந்நேரஞ்சிவனுக்குப் பூசைவேளையான படியினாலே எப்படி வருவேன் வரக்கூடாதென்று போய் சொல்லுங்கள் தூதர்களே

மார்க்கண்டனுக்கும்-தூதருக்கும்- தர்க்கம்,

தரு-இ-ம்-கௌளிபந்து-ஆதிதாளம்,

தூதர்கள்சொல்லல்.

சொல்லிட்டேவாயித்தனைத்தூரமதுவந்தது.. ... ..............*
தூதரும்தாங்களடா-மார்க்கண்டா..........................*

மார்க்கண்டன்-சொல்லல்,

தூதரானுலென்னடாநாதனூர்பூசைவிடச்.......................*
சொன்னவனாரடாதூதர்களே...............................*

தூதர்- சொல்லல்,

வல்லமைபேசவாவந்ததுகெட்டிமாய்... ... ... .............*
வாரதேயில்லையோடாமரர்க்கண்டா...........................௧

மார்க்கண்டன் - சொல்லல்,

வாரதேயில்லையொல்லமன்னனேடுனாயுங்கள்.... ... ......*
மட்டில்லாவார்த்தையேன்தூதர்களே.... ....... ...... ....*

தூதர் -சொல்லல்,

உலகினிலிப்படியுத்தரவுஞ்சொன்னபேர்........ ... .....*
ஒருவருங்காணேமடாமார்க்கண்டா.................... *

மார்க்கண்டன்- சொல்லல்.

ஒருவர்சொல்லென்னடாதாணுற்றதேசொல்வினேன்.... *
உங்களாலாவதென்னதூதர்களே......... ....... ... ... *

தூதர்சொல்லல்,

கொல்லவும்நாங்களேபுனைக்குத்தவும்நாங்களே..... ... ...*
கொண்டுபோய்விடுவோமடாமார்க்கண்டா................*

மார்க்கண்டன்-சொல்லல்,

கொண்டுபோய்விடுவதும்பெண்டுகள்பேச்சடா... ..........*

கூற்றமதிற்சிக்குவீர் தூதர்களே... ......................*

தூதர்-மார்க்கண்டனுக்குச்சொல்-விருத்தம்.

குற்றமாவதுதானென்னக்குணங்கெட்டுப்பேசவேண்டாம்...... ......*

இத்தனையானுவங்கொண்டிருப்பது நன்மையல்ல.....................*

பித்தனைபிடித்தவன்னைப்பின்கட்டாய்க்கட்டியிப்போ...... ..........*

குத்துவோஞ்சூலத்தாலேகுணமூடன்வருகுவாயே......... ..........*

வசனம்.

அடாவாட்டா மார்க்கண்டா நீ வசனைச்சேர்த்திருக்கிறோ மென்கிற கெருவத்தினாலே இப்பேர்க்கொத்த ஆங்காரம்படைத்து மதோன்மத்தனாகப்பேசுகிற உன்னுடைய வத்தையடக்கி எங்கள் பாசக்கயிற்றினாலேகட்டி சூலத்தினாலேகுத்தி எங்கள்எமபுரத்திற்குக் கொண்டுபோவோம பாரடா மார்க்கண்டா,

மார்க்கண்டன் தூதருக்குச்சொல்விருத்தம்,

வாரதேயில்லையென்னை மடக்கியேகுத்திக்கெட்டீர் ... ... *

வாரதேயில்லையந்த மறலிதான் கெட்டான்போடா... ......*

வாரதேயில்லைநீங்கள் மடிவதுசித்தங்கண்டீர் ...... .......*

வாரதேயில்லையென்று மன்னனுக்குரைசெய்வீர்.. ......*

வசனம்.

கேளுங்கள் காலதூதர்களே பூனைக்குப்புலிபஞ்சமா பொருளுக்கு ப்பூஷணமிஞ்சுமா அதுபோலநீங்களென்னைப்பிடித்துக்கெட்டீர்கள்உங்களை அனுப்பினானே எமன் அவனுங்கூடக்கெட்டான் கண்டாய் நீங்கள் மாத்திரம் தப்பிப்பிழைத்தோடிப்போங்கள் தூதர்களே.

தூதர்சொல் தரு இ-ம்- ஆகிரி- ஆதிதாளம்,

பாறடா கை பாசமதைப்பாராமல்- நீ பூசைசெய்தால்... ...*

பார்த்தவர்க்கழகுமில்லடா - பார்ப்பாரப்பையா..............*

பாசத்தாலேகட்டியேகுவோம்......................... ... ...*

மார்க்கண்டன்சொல் தரு.

ஐயனே நானென்னசெய்குவேன் கடையூரீசா... ......... ... *

ஐயனே நானென்னசெய்குவேன்... ......................*

வையம்புகழுந்திருக்கடவூர் மெய்யனே நமன்காலதூதர்கள்.. ......*

வெய்யமாலிதோபாசமென்கிறார் தையலாளபிராமிநேசனே (ஐயனே)

தூதர்சொல்தரு,

எங்கள்பின்னே வந்தாலாச்சு...... ................ .........*
யில்லாவிட்டால்காலமாச்சு... ...... ..... ........... ...*
இப்படிச்சொன்மனதிலெண்ணடா- பார்ப்பாரப்பையா......*
கொப்பனாயிற்காச்சிக்கொட்டுவோம்... ... ........ ... *

மார்க்கண்டன்சொல்- தரு.

தக்ஷணந்தனிலேவந்தானே - சிவனேயினி... ..........*
யிக்ஷணமேகொண்டுபோவானே ... ...... ... ...*
பக்ஷிகருடனைத்தூக்கிபோடிய - மக்ஷிம்போல்பதைத்துதைமேயோ........*
பக்ஷம்வைத்தெனையாளுமென்னுயி ரக்ஷியுமிந்நேரவேளையில் (ஐயனே)

தூதர்சொல்-தரு,

எத்தனைநேரங்களாச்சு... ... ... ... ...*
யினிபொறுப்பதில்லையுந்தன்... ... ... ...*
புத்திதனிலெண்ணிக்கொள்ளடா - பார்ப்பாரப்பையா ... ... ...*
குத்தியுயிர்கொண்டுபோகுவோம் ... ... ... *

மார்க்கண்டன்சொல்-தரு,

இனிபொறுப்பதில்லையென்கிறன் - சிவனேயினி... .. *
யிறுகக்கட்டிக்கொல்வேனென்கிறன் ... ... *
தனியனானிருந்தென்னசெய்குவேன் - தையலாளிடமாகவே...... ......*
யினிமையாகிலும்வருவீரோபிக்கடமைமாநகர்தன்னிலே (ஐயனே)

தூதர்சொல் தரு,

நசரளித்திட்டவப ... ... ... ... ... *
தீமொட்டுஞ்சரியேயாகில் ... ... ...... ... ...... ... *
நசராலேயென்னசெய்வது - பார்ப்பாரப்பையா ... *
யுன்னைகுலத்தாலேகுத்தியேகுவோம்........... ..............*

மார்க்கண்டன்சொல் தரு,

நாலுதிக்கும்வந்துநிற்கிறர் - சிவனேயினி...................*
காலனும்வருவானென்கிறர்......... ... ... ... ... *
காலிரண்டசையுதேயிக்காரணத்திற்கென்னசெய்வேன் ... *
ஆலமுண்டயீசனேயினிஅந்தகன்வந்தாலுமென்ன (ஐயனே)

தூதர்சொல் தரு-இ-ம்-புந்நாகவராளி- ஆதிதாளம்,

இப்படியானுவங்கொண்டவன் றன்னை நீ ... ...*
யெட்டிச்சிகையைமெள்ளப்பிடியடா - அடா... ...*

அப்படிநீவாடாகில்லியா - இவனை... ... ...... ... ......*
யசங்கவொட்டாமலே பிடியடா... ............... ... ...*
சொற்படிகேளாதவனுடனையுந்தன்.. ...... ... .........*
சூலத்தினாற்குத்திப்பிடியடா - அடா ... ... *
எப்படியாகிலும் பாசத்தாலேகட்டி ... ... *
யிருப்புத்தடியாலேயடியடா - அடா ... ... *
தப்பானபூசைநமக்கிப்போதாவதென்ன ... ... *
தள்ளிக்கயிற்றாலேகட்டடா ... .. *
அப்பணிசடையோன்பூசையிப்போதென்ன ... *
அடிக்கடிகிட்டிநீபிடியடா ... ... *
குப்புறமண்ணிற்கவிழக்குத்திக் ... ... *
கொண்டுபோவோந்தாடையிலடியடா ... ... *
கொப்பெனவக்கினிவீசுதங்கோடாதே ... ... *
யிங்கேநில்லடாகில்லியா - அடா ... ... (இப்படி)

தூதர்கள்சொல் விருத்தம்.

அடித்திடவேண்டாம்வேண்டாமண்ணமார்களேநீர்கேளீர் *
பிடித்துமேபோவோமென்றுற்பிஞ்ஞகன்றயவதாலே......*
அடித்துமேதணல்களோங்கிச் சுத்திலும்வீசுதிப்போ ...*
நடித்துமேநடந்துவோடி ராஜனுக்குணாக்கலாமே........*

வசனம்

கேளுங்க ளண்ணமார்களே இந்த மார்க்கண்டனை யாராகிலு மின்றி த்தொடப்போறீர்கள்சிவபூசைவேளையானதினாலும் சிவனுடையதயவினு லும் எங்கும் அக்கினியாய் வீசத்தலைப்படுகின்றது இனிநம்மாலேயாகா து மகாராஜனேவரவேணும் வாருங்கள்போய்ச்சொல்லுவோம் அண்ண மார்களே.

தூதர்-இராஜனுக்குச்சொல் கவி,

சரணமன்றுவென்றுதான் ... ... ... *
தபவாசப்போவென்றேதான் ... ... ... *
சரணம்பிழைத்துவந்ததுதான் ... ... ... *
சண்டாவுமைக்கண்டதுதானே ... ... ... ௩

இராஜன்-தூதருக்குச்சொல் கவி,

கண்டிதமுடையசொல்தூதர்களே ... ... ...*
கடுகெனநீங்களோடிவந்து ... ... ... *

சண்டனைக்கண்ட தூதயவென்று ... ... ... *
சாற்றுநீஷ்டூரமென்னவடா ... ... ... *

தூதர்-இராஜனுக்குச்சொல்விருத்தம்.

சூதித்துமேபடிப்போமென்றுத் கொன்னறைகுடியனைத்தாக்கும் *
மதத்துடன்பிடிக்கப்போனோம் மகாபூசைவேளையாலே ... *
சோதித்துமேதணல்களொங்குஞ்சுபீலெனவீசலாலே ... *
விதித்தவன்விதிபலத்தால் மேவியேயிழைத்துவந்தோம் ... *

வசனம்,

கேளுந்தர்மராஜனே மூன்னம்நாங்களழைத்ததற்கு வருகிறதில்லை யென்றுஉம்மையும் எங்களையும்வைதான் பிறகுபாசக்கயிறுகொண்டு வீசிப்பிடிக்கப்போனோம் ஆலயத்தைச்சுத்தி அக்கினிப்பொறி பறக்குது எங்களாலேஆகாமல் வந்துவிட்டோமையா,

இராஜன்-தூதருக்குச் சொல்விருத்தம்,

அப்படியாவாய்ப்பேச் சதியாதபையனுக்கு ............ *
இப்படிகெருவ நந்தநீசனையறிகிறேதான் ............ *
எப்படியிதைத்தடுப்பானென்னிடகிடாவைக்கொண்டு...... *
நற்படியாகவாரீர்நானேபோயறிகுவேனே............... *

வசனம்.

ஆரடா அடா காலதூதரே வாய்ப்பேச்சு நன்றாய்ப் பேசத்தெரியாத பையனுக்கு இப்படிகெருவந்தந்தானு அந்தநீசன் நானேபோயறிகிறேன் நமதுகிடாவை அலங்கரித்துக்கொண்டு வாருங்கள் காலதூதர்களே,

தூதர்-ராஜனுக்குச்- சொல்-பரணி,

கோபாக்கினியைத்தான்படைத்து.................. *
கொண்டுவாகிடாவையென்றமட்டில்.................. *
மாயாக்கியமென்றேமகிழ்ந்தோம்.................. *
மன்னுகிடாவைக்கொடுவாரோம்.................. *

எருமைக்கிடா-வருகிற-தரு-இ-ம், தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

தாவும்புலிபதுபோல்-எருமைக் கிடாவும்வருகுதுபார்...... *

அநுபல்லவி,

அனுமெழும்பிடத்துள்ளித்துள்ளியேயிதோ..............(தாவும்)

சரணங்கள்,

ஜனத்திரளுமொடுங்கத்தரணியுள்ளசேனைப்பதியும்நடுங்க *

ஞானத்திலிருந்துங்கியானத்தோருந்தியங்க......................*
வடவைக்கொதிகொதிக்க-கடுசக்-குதிகுதித்து........(தாவும்)
உவந்தச்சென்னியைப்பிரட்டிமிரட்டிக்காட்டி............*
செவந்தகண்ணிணையுருட்டிகவிந்தமலர்முகத்தோ............*
டுவந்தமதியுங்கொண்டுகண்கள்திறந்திட......................*
சகமெங்குமகிழ்ந்திட-...............................(தாவும்)
மோகத்திலேகுழம்பிகருங்கிடா.......................*
மேகத்திலேயெழும்பிலோகத்திலுயிர்வதை.................*
யோகத்தினால்செய்துனேடுக்குங்காலனார்...................*
பக்கல்முடுக்காகவே யிதோ.......................(தாவும்)

தூதர்-இராஜனுக்குச்-சொல்-பாணி,

அலங்காரஞ்செய்தேமெள்ள........................*
அழைத்துவந்தோங்கிடாவதனை......................*
கலங்காமன்றகுதித்தேறும்...........................*
கடிதிற்போய்வருவோமே.........................*

இராஜன்சொல்-தரு-இ-ம்-மோகனம்-ஆதிதாளம்,

பல்லவி,

வாடாவாடாதூதர்களேயந்தமார்கண்டனிடபலமறிவேனே.*

அநுபல்லவி.

தாடாண்மைகளைப்படைத்தானேயாகில்...............*
சதைப்பேனவனைநான்சிதைப்பேனேயடா.........(வாடா)

சரணங்கள்,

விதியோஅவனுக்குச்சதியாயிருந்திட....................*
விடுப்பேனே துசந்தொடுப்பேனே.....................*
கெதிவாரதையவணறியாதேகேடு........................*
கெட்டானேஅவனைவிட்டேனோஅடா..............(வாடா)
சிவனாகிலுமின்னும்எவனாகிலும்நம்மைச்..................*
செயிப்பானோஅவனைதயிப்பேனோ.................*
தவமேபெரிதாகிலுமென்சொல்....................*
தடுப்பேனோஅவனைவிடுப்பேனோஅடா..............(வாடா)
எனதாக்கினையைத்தடுப்பாருமங்கே....................*
யிருப்பானோசொல்மிதிப்பானோ.......................*

இனிதாகவேவந்தால்சரியே யில்லாவிட்டால்... ..............*
யிடிப்பேன் தாடையிலடிப்பேன் அடா................ (வாடா)

இராஜன்-தூதருக்குச் சொல்-விருத்தம்,

என்னடாகிடாவையிப்போவென் றுமலடித்தபோதும்... ..............*
பின்னிட்டேபோகுதந்தப்பித்தன்பால் நடக்கவில்லை...... ....... .......*
இன்னொருகிடாவையிப்போயிழுத்தோடிவருகுவீரோ....... ....... ...*
யின்னையுமிதையேவாட்டிப்பித்தன்பால்நடக்கலாமோ.. ................*

வசனம்,

ஆர்டாகாலதூதர்களே என்னடாயிந்தக்கிடாவை அடிமேல்அடி அடித்தபோதும் இன்றைக்குப் பின்னிட்டே நிற்குதுமுன்னிட்டோடவில்லை நல்லது நீங்களோடி யின்னம் ஒருகிடாவைக் கொண்டுவருகிறீர்களோ அல்லது இதைத்தானே நடத்துகிறீர்களோ சொல்லுங்கள் காலதூதர்களே,

தூதர்கள்- இராஜனுக்குச்சொல்- விருத்தம்,

எங்குபார்த்தாலுமங்கேயென்றுசிவாலிங்கங்கள்... .......*
எங்கினுந்தானெருங்கியிருப்பதாலெங்கள்கோவே......... *
எங்கினுங்கிடாவொதுங்கியெகிறியேநடக்குமிப்போ.........*
எங்களுக்கேநடக்கயிடிவுண்டுவருகிறோமே........... ...*

வசனம்.

கேளுமகாராசனே வும்மிடஆக்கினைக்கும் கோபத்துக்கும்பயப்பட்டு அந்தக்கிடாவும் நாங்களும்வந்து யெங்கும் கால்வைக்கயிடமில்லாமல் சிவாலயங்கள் நெருங்கியிருக்கின்றது கிடாவையடித்ததனாலென்ன நாங்கள் வருகிறதற்கே பயந்துவருகிறோமே மெள்ளத்தானே நடத்து மகாராஜனே,

மார்க்கண்டன்சொல்-தரு-இ-ம்-ஆனந்தபைரவி- ஆதிதாளம்.

பல்லவி.

வாரானேகாலன்-வாரானேயிதோ- வாரானேசுவாமி *

அநுபல்லவி,

தோரகவேகண்கள்நெருப்புப்பொறிபறக்க........ (வாரா)

சரணங்கள்,

மேற்கீழ்கீழ்மேல்மேலாகவே யிப்போ ... ... *
விண்ணுமண்ணு மதிக்க கண்ணுகடையூரீசா ... ... (வாரா)
ஒனைநாடியே நமனித்தூதர்களோடே ... ... ...*

யிடிபோற்கதும்பியேவிணட்புங்கடையூரீசர் ... ... (வாரா)
அஞ்சாக்கொலைசெய்ய அலறிக்குதிருதித்து ... ... *
அவனேவருகிறான்சிவனேகடையூரீசா ... ... ... (வாரா)
குடித்தான்சவுக்கினாலடித்தான்கருங்கிடாவை ... ...*
விடுத்தானிதோவந்து அடுத்தானேகடையூரீசர் ... ... (வாரா)

மார்க்கண்டன்சொல்-தேவாரம்.

துர்தரும்போனபின்பு துரிதமாய்க்கிடாவிலேறி ... ... *
வேதனைசெய்யவேண்டி வெகுதும்பியேகதும்பிக்கொண்டு ...*
நாதனேகடையூரானே நமனிதோவருகின்றானே ... *
மாதொருபாகாயிந்தமைந்தனைக்கார்த்திடோ ... ... *

வசனம்.

அரகராகடையூரீசா ஆலகாலவிஷத்தையுண்ட ஐயனே ஆதிசோதி ரூன்வந்ததூதர்போக இன்னம் என்னைவேதனைசெய்ய எமன் கருங்கிடா மீதேறிமகாவுக்கிரமாக வருகிறான் அவனைப்பார்க்கவென்னுள்ளம் நடுங்கு துகர்த்தனே,

சிவன்-மார்க்கண்டனுக்குச்-சொல்-தரு-இ-ம்-சம்பை,

பாலனேமார்க்கண்டா பயமுறுதேமனதில் ... ... ... *
காலனெனவேசற்றுங் கவலைவையாதே ... ... ... *
எமனுமிதுமின்னம் இமையவர்களானாலும் ... ... ... *
மறலிவுன்னைவிழித்திறந்துப்பார்க்கவசமாமோ... ... ... *
பதுமமலர்தொடுக்குமதன்பட்டபாடறிந்திருந்தும் ... ...*
அதனவிதஞ்செய்யயேமனடுப்பானோமைந்தா ... ... *
குண்டோதரன்முதல்கோடிதளமிருக்கவுன்னை ... ... *
அண்டுவானோநமனும் அருகில்வருவானோ ... ... ... *
அழகுடையபாலகனே அஞ்சவேண்டாம்நமனை ... ... *
மழுவுக்கிரையாக்கிடுவேன் மனதுதெளிந்திருப்பாய் ... ...*
ஆனைமாமுகனுன்னை அடையமிருந்துன்னையினி ... ... *
தாமெதிர்த்தயமனுடன் சரிவாதுபுரிவாய் ... (பாலனே)

சிவன்மார்க்கண்டனுக்குச்-சொல்-கொச்சகம்,

சண்டன்வாரானென்றேனவேசற்றும்பயப்படவேண்டாம்...... ......*
பண்டுமுப்புரங்கள்பட்டபாடறிகுவானமனும்................*
அண்டிவந்தானேயாகிலவனுடனேநீயெதிர்த்து..........*
மண்டவமழிக்கச்செய்வாய்வஞ்சனைநான்செய்யேனே ........ ......*

வசனம்.

சேளுமப்பா மார்க்கண்டா நீ யெமன்வருகிறானென்று பயம்சற்று
கிலும் வைக்கவேண்டாம் இதோநான் ஆணைமுகனறியச் சொல்லுகிறேன்
உன்னை எமன்கையில் காட்டிக்கொடுப்பதில்லை முன்ன முப்புரம்பட்ட
பாடுஅவன் நன்றாயறிந்திருப்பான் நீயவனுடனே யெதிர்த்துப்பேசி ம
ண்டலமதிக்கச்செய்யுமப்பா மார்க்கண்டா,

ராஜன்-தூதருக்குச் சொல்-விருத்தம்,

கண்டிததூதரேமார்க்கண்டன்றானெங்கேயெங்கே... ... *
மீண்டனுமவனைக்காட்டுமீசனைத்துறந்திவிட்டு... ........... *
அண்டாதபாசத்தாலேயவன்றனை யிறுக்கிக்கட்டிக் ... *
கொண்டுபோய்கழுவில்மாட்டிக்கொலைவதைசெய்குவேனே *

வசனம்,

ஆரடா அடா கால்தூதரே அந்தமார்க்கண்டன்எங்கேயெங்கே என்க
ண்ணிற்காட்டுங்கள் அவனையும்அவனுக்குத் துணையாக வருகிறவனையும் க
ட்டிக் கொண்டுபோய் கொலைவதை செய்கிறேன் காட்டுங்கள் கால
தூதர்களே,

தூதர்-இராஜனுக்குச் சொல்-விருத்தம்

அதிபலமுடையகோவேயாருக்கும்பயப்படாமல் ... . *
மதமதைக்கொண்டுமெத்த மவுனமாய்மொணமொணென்று
கெதாகெதியாகப்போறகேடுகள் தெரிந்திடாமல்... ... ...*
யிதோசிவபூசைதன்னிலிருக்கிறான்பாருமையா... ... ...*

வசனம்,

வாராய்தர்மராசனே நீர் வருகிறதைப்பார்த்தும் பயப்படாமல்
மதோன்மத்தனாய் மொணமொணென்று பேசிக்கொண்டு தனக்குவரு
குறகெதி அறியாமல் அதோ ஆலயத்திற்குப் பூசைசெய்துக்கொண்டிருக்
கிறான் பாருமையாமகாராசனே,

இராஜன்- மார்க்கண்டனுக்குச் சொல்-விருத்தம்,

பார்ப்பார்ப்பயலேநீதான்பயமதுசற்றில்லாமல் ... ... ... ...*
தோர்ப்பாடிதன்னையேசெய்துதுதனாமிறட்டிவிட்டாய் ... ..... ......*
கார்ப்பேனென்றுனக்குச்சொன்னக்கடையூரான்றன்னைக்கூட... .....*
பூட்போலேகட்டியெந்தன்புறங்கொண்டுபோவேன்வாராய்... ........*

வசனம்,

அடாவடாபார்ப்பாரப்பயலே யெனத்தூதர்வந்தழைத்தால் வார

மல் அந்த்திவிட்டாயல்லவா சபாசடா அந்த இரணியன் இடும்பாசூரன் இந்திரசித்து ராவணன் கும்பகர்ணன் இப்பேர்க் கொத்த பேரெல்லா மென துகயிற்றிற்கட்டுப்பட்டிருக்க நீகட்டுப்படுகிறது பெரிதாபேசாமல் வருவையோ வாராயோ சொல்லடா மார்க்கண்டா,

மார்க்கண்டனுக்கும்-இராஜனுக்கும்-தர்க்கம்-ஜம்பை.

மார்க்கண்டன்சொல் தரு,

யாசகுலங்கொண்டு பயமுறுத்தவேண்டாம்நீ..................*
பிசர்டியார்கள் தன்னை யென்செய்யலாகும்..................*

இராசன்சொல் ஜம்பை,

ஈசரடியாராகிலெனக்கென்னவென்றுடனே... ... ... *
பேசவருவார்களோபேய்ப்பயலேபோடா..................*

மார்க்கண்டன்சொல்ஜம்பை-

பொருப்புச்சிலையான்பாதம் போற்றுமடியார்கள்தன்னை...*
விருப்புடையயெவராலும்விழிநோக்கலாமோ... ...... ...*

இராஜன்சொல்ஜம்பை,

விருப்புடையயெவராலும்விழிநோக்காரென்பதனைச்......*
சரிப்படுத்துவேனெந்தன் சமர்த்தைப்பாரடா நீ... ... *...

மார்க்கண்டன்சொல் ஜம்பை,

இருப்புத்தூணென்னைக்கரையான் எரிக்குமோவீண்பேச்சேன்
நெருப்பிலேயீமொய்க்க நேரிடுமோபோடா.............. ...*

இராஜன்சொல் ஜம்பை,

நெருப்புனுமென்றுந்தன் நெஞ்சிலெண்ணியேயந்த ... *
குறிப்புசொல்லவந்தாயோ குட்டிச்சுவரோநீ............ ...*

மார்க்கண்டன்-இராஜனுக்குச்-சொல் ஜம்பை,

கருப்புச்சிலைதொடுக்குமந்தகாமனெரிபடவிழித்த... ... *
விருப்பமுள்ளபரமசிவன் வீரமறியாயோ..................... *

இராஜன்சொல்ஜம்பை,

விருப்பமுள்ளசிவன்பலத்தைவெண்ணிநீபேசாதே ...... *
முறிப்பேனுன்னைப்பிடித்துமுறிப்பதுவுமெய்யே.......... *

மார்க்கண்டன்-இராஜனுக்குச்-சொல் -விருத்தம்,

கணக்கவேமுறிப்பேனென்றகறட்டுச்சொல்விட்டாநீதான் *
மனைக்குள்வாழ்பூனைதன்னை மடக்கவுன்றுலாகாதே........*

எனக்குநீமசகமென்றேயெண்ணினேன் துள்ளவேண்டாம் *
உனக்குநான்பயந்துபேச ஒவ்வாதுநடந்திடாயே .........*

வசனம்.

அடா்வாடா சண்டர் நீமுறட்டுத்தனமாய் என்னை முறிப்பேனென் றுசொல்லிருக்கட்டும் எனக்கு நீ ஒருகொசுவுதான்கண்டாய் உனக்கு நான் பயப்படயிராது -நீ இதுவனாக்கும பூனைக்குட்டியைப் பிடித்துவையடா போபோ சும்மா நடந்திடுகோலா,

இராஜனுக்கும்-மார்க்கண்டனுக்கும்- தர்க்கம்-தரு-இ-ம்
நாதநாமக்கிரியை- மீசுரதாளம்.

இராசன்சொல்-தரு.

நடந்திட்டென்றசொல்லுமேற்குமோ - இந்த..................*
நாதலிங்கமுன்னைக்......கார்க்குமோ.........................*
தொடர்ந்துவார்த்தைபேசிதுள்ளிவிழுந்திடாதே......... *
தூக்கித்தூக்கியுன்னைநோக்கியேயெறிவேன்.............(நடந்து)

மார்க்கண்டன்சொல் தரு.

நாதலிங்கத்தைப்போலாவையோ - அடா...................*
நமனேயெனக்குயிடாவையோ.............................*
காதகத்தையென்முன்காட்டிடாதேபோபோ...............*
காலாகுலாநோக்குவேலைதானில்லையோ...............(நாதலிங்க)

இராசன்சொல் தரு.

நமனென்றயென்பயமில்லையா - எனது .....................*
நாட்டினிற்சேவாறதில்லையா.................................*
விமலனுன்னையென்றும்விடுவதில்லையோடா...............*
வீசிப்பாசமேகொண்டிசன்னைப்பிடிப்பேன்......(நமனென்ற)

மார்க்கண்டன்சொல் தரு,

நாட்டுக்கோடிநீபிழைப்பதேன் - கெட்ட.....................*
நாயேபிந்தபித்தமுழிப்பதேன் ..............*.......*
கூட்டிவந்ததூதர்கூடநீயுமிப்போ..........................*
சொக்கரித்திருக்கப்பக்குவங்கள்சொல்வேன்......... (நாட்டுக்)

இராஜன்சொல்-தரு.

நாயேபேபேயென்று...குலைக்காதே - இப்போ.............*
நாம்பிழைத்தோமென்றுமலைக்காதே......................*
வாயைதான்கிழித்து வாரிக்கொண்டுபோய்.............. *

வாதையாதைசெய்ப சூதைவிளைவிப்பேன்... ....... ... (தாயே)

மார்க்கண்டன்சொல்-தரு.

நாம்பிழைத்தோமென்றுயெண்ணியோ - அடா... ........ *
நல்லயோசனைகள் நீபண்ணியோ...... ....................... *
பாம்பணிந்தோரெந்தன்பாகமேயிருக்கப்..... .......... ...*
பார்க்குழூர்க்கரைத்தான்சேர்க்கவேநினைப்பார்..... .......(நாம்)

இராஜன்சொல்-தரு.

நல்லயோசனைகற்றவனேடா - எட்டி......................... *
நாதன்பார்க்கக்குத்துவேனடா.............. ...... ... ... *
சூல்வியென்றுவிழுங்கொடியதுதர்மனே... ........ ......*
குத்திசுத்திபெங்கும்பற்றிவாங்களடா ....... ....... ......(நல்ல)

மார்க்கண்டன்சொல்தரு.

நாதன்பார்க்குமட்டுமிருப்பனே - இந்த. ... ... ... ... ...*
நகரமென்னைப்பேசத்தரிப்பனோ......................... *
வாதுசெய்பவேண்டாம்வழியைப்பாரடாசொன்னேன் ... *
மன்னுமன்னுநீயென்முனில்லாதே போ போ... ......(நாதன்)

இராஜன்மார்க்கண்டனுக்குச்சொல் விருத்தம்.

இல்லாதேயென்றுசொன்ன நெஞ்சினைக்கொடுத்தவந்த........ ......*
உல்லாசன்பூசைவிட்டு வோங்கியேவந்தாலாச்சு .. ............... *
எல்லாருங்காண வுன்னையிடியிடித்திழுத்துச்சென்று...... ......... ...*
பொல்லாதவதைவதைத்துப்புகழினைப்பெறுகுவேனே... ...... ......*

வசனம்.

அடாவாடா மார்க்கண்டா நமனென்கிறபயம் சற்றுமிலுமில்லாமல் இப்படிக்கு உறுதியானநெஞ்சைக்கொடுத்தவனை யறிகிறேன்பேசாமல்ஓடுங்கிவந்தாலாயிற்று இல்லாவிட்டால் இடியிடித்திழுத்துப்போய் சித்திரவதைசெய்வேன்பாரடா மார்க்கண்டா-

மார்க்கண்டன்இராசனுக்குச்சொல் விருத்தம்.

பனைமரம்போல்நீவந்து பலபலமொழியுரைத்தால் ... *
உனையொருபொருட்டாயெண்ணிவொடுங்கிநான்வருவதுண்டோ*
இனியொருநிமிஷம்நீயிங்கிருந்ததேயானுலுன்னைச் ... ......*
சனியனும்பிடித்தாற்போலேதணலிலவத்திடச்செய்வேனே... ...*

வசனம்.

அடாவாடாயேமா நீபனைமரம்போல்ஒருவனாவிழச்சாதிக்கப்பட்டு

வனுதெரிந்தது தெரிந்தது நீநல்லபனைமரம்போல என்னெதிரே நின்றுக் கொண்டுவீண்பேச்சுப்பேசினால்உன்னையொருபொருட்டாயெண்ணிதான் வருவதா ஏன்வீணுப்பித்தம்பிடித்து அலையுறுப் போபோ சண்டா,

இராஜன் மார்க்கண்டனுக்குச்சொல்-விருத்தம்,

பித்தனென்றெனைச்சொல்லார் நீபித்தனைச்சேர்ந்தத்தாலே *
பித்தமேபிடித்துநீயிப்பேர்க்கொத்தவார்த்தைசொன்னாய் *
பித்தமுந்தெளியவுன்னைப்பிளந்திடுவேனீயந்தப் ... ...*
பித்தனைவிட்டுவாடாபேய்மதங்கொண்டநாயே ... *

வசனம்

அடாவாடா மார்க்கண்டா நானுபித்தம்பிடித்தலைகிறேன் நீபித்தனைச்சேர்ந்திருக்கிறபடியினாலே அந்தப்பித்தம் உன்னைப்பிடித்து நீபித்தனைப்போலப்பேசுகிறாய் அந்தப்பித்தந்தெளிய அடித்தால் உனக்குப் புத்திவரும்பயந்துபேசுவாய் வீண்வேலை வைத்துக்கொள்ளாதே பேசாமல்அந்தப்பித்தனைவிட்டுவாடா மார்க்கண்டா,

மார்க்கண்டனுக்கும்- இராஜனுக்கும்-தர்க்கம்- தரு-இ-ம்

ஆனந்தபைரவி- சாபுதாளம்,

மார்க்கண்டன் சொல்-தரு,

பினத்தாதேபினத்தாதேபெருங்கிடாபீதேறும்... ......... *
பேச்சைவிட்டுவிடடாகாலா.............................. *

இராஜன்-சொல்-தரு,

ஈனத்துப்பேசுவதித்தசிவன்வலுமையல்லவோ... ........ *
க்ஷணத்திலறிவேனிபாலா........................ ...... *

மார்க்கண்டன்-சொல்-தரு,

குதித்தாலுமெதிர்த்தாலுங்குலைத்தாலும்நாயது... ......... *
கொடியசிங்கமாகுமோகாலா..................... ........... *

இராஜன்-சொல்-தரு,

மதத்துநீபேசாதேமரநாயேயுனைவெல்ல... ...... .........*
வகைதேடவேணுமோடாபாலா.............................. *

மார்க்கண்டன்-சொல்-தரு,

ஒசந்தாலும்வளர்ந்தாலும்ஒடிமாமரந்தன்னில்... .........*
ஒளித்தாலும்பானைப்பூனையாகுமோ- காலா... ... ... *

இராஜன்-சொல்-தரு,

வரந்தானென்னடா அந்தவள்ளல்தானெனக்கீடோ ... ... *
வதைசெய்குவேனினிபாலா........................................*

மார்க்கண்டன்-சொல்-தரு,

சிறந்தாலுமுயர்ந்தாலுந்திசைதிசையெங்குமோடி... ......*
சிட்டிப்பருந்தாகுமோகாலா.......................................*

இராஜன்-சொல்-தரு,

உரந்தானென்னடா அடாவுன்னையுஞ்சிவனையும்... ...... ...*
ஒருமிட்டாய்க்கட்டிவெல்வேன்பாலா........ ...... ......*

மார்க்கண்டன்-சொல்-கொச்சகம்.

[illegible]த்தனை நான்சொன்னாலுமெனைவிடுவதில்லையென்று ... ...*
பத்துவிதத்திலுமெத்தபராக்கிரமம்பொருந்தியெமன்......*
கர்த்தனேயுனைப்பாசக்கயிறுகொண்டென்னையுங்கட்டி ... *
குத்திக்கொடுவாவென்றுகொக்கரிக்கிறான்சிவனே...... ...*

வசனம்,

அரகரா - அரகரா - அரகரா - அரகரா - திரிபுரமெரித்தயீசா - அடியேன் - எமனுடனே - எந்நேரம்வாதுபுரிவேன் - என்னசொன்னபோதும் போகாமல் மேல்வீழுந்து பிடிக்கவருகிறான் என்னெஞ்சகலங்குது கர்த்தனே,

சிவன்-குண்டோதரனுக்குச்-சொல்-கொச்சகம்,

நெஞ்சங்கலங்கித்தவித்துநினைவழிந்துமதிமயங்கி ... ... ...*
சஞ்சலமுற்றேதியங்கித்தத்தளிக்கிறான்பாலன்...............*
நஞ்சிதனுண்டோதரனே நமனுடனே நீயெதிர்த்து... ... ...*
பஞ்சுகொட்டும்பாவனைபோற்பறக்கடிக்கச்செய்வாயே ... *

வசனம்,

வாராயப்பா குண்டோதரா நமதுபாலகனாகிய மார்க்கண்டன் எமனைப்பார்த்து தத்தளிக்கிறான் அந்தஎமனுடனே யெதிர்த்துபஞ்சுகொட்டும்பாவனைபோற் பறககடித்துப் பாலகனைக்காருமப்பாகுண்டோதரா,

குண்டோதரன்-சிவனுக்குச்-சொல்-கொச்சகம்.

பாலகன்மேற்கிருபைவைத்துபக்ஷமுடன்பார்த்திருக்கும்... ... ...*
நீலகண்டரேயும்மதுநினைவின்படியேயானும்........ ............*
காலனுடனெதிர்த்துநின்றுகதித்ததெண்டினாலடித்து.......... .........*
ஓலமிட்டோடவும்விடுத்துவுமதுமைந்தனைக்காப்பேன்........ ......*

வசனம்,

அரகரா-திருக்கடையூரீசா மார்ககண்டசகாயா உமதுநீனைவின்படி யே எமனுடனெதிர்த்து தெண்டித் தினைகொடுத்து மார்க்கண்டனைக் காக்கிறேன் சுவாமி,

மார்க்கண்டன்-குண்டோதரனுக்குச்- சொல்-விருத்தம்,

காக்கிறேனெனவேயிந்தக்கடையூரினகரில்லநீ.........*
தீர்க்கமாய்த்திறமுனாத்தசிரஞ்சீவிகுண்டோதரா நீ.........*
ஏர்க்கமேவசொன்னவார்த்தை யேமனுங்கேட்டுயென்னைப்...*
பார்ககிறானென்னசெய்வேன்பதமலர்சரணமையா.........*

வசனம்,

சரணஞ்சரணம் சிரஞ்சீவியான குண்டோதரமூர்த்திஎன்னைக்காக்கிறேனென்று நீர் சிவனுக்குச்சொன்னசொல் இந்தயேமன்கேட்டு என்னை யுருட்டிப்பார்க்கிறான் கெர்ப்பங்கலங்குது என்னசெய்வேன் சுவாமி,

குண்டோதரன்-மார்க்கண்டனுக்குச்-சொல்-விருத்தம்,

மைந்தனேமார்க்கண்டா நீமறலிக்குப்பயப்படாதே.........*
எந்தன்பின்னாகநில்லுயெமனிடவலிமைதன்னை.........*
இந்தநாழிகைக்குள்நானேயறிகிறேனுனைப்பிடிக்க......... *
வந்தவன்பின்னிட்டோடவாட்டுவேன்வாட்டுவேனே.........*

வசனம்.

கேளுமப்பா மார்க்கண்டா நீ எமனென்கிறகிலேசம் மனதில்வைக்கவேண்டாம் சிவபூசையிலிரு நான் எமனுடனெதிர்த்து தெண்டிக்கினை கொடுக்கிறேன் பயப்படாதிருமப்பா மார்க்கண்ட செல்வமே.

மார்க்கண்டன்-குண்டோதரனுக்குச்-சொல்-விருத்தம்,

ஆலயத்தருகில்நில்லென்றன்புடனெனக்குரைக்கும்...... ...... ......*
பாலகுண்டோதராகேள்பயப்படேனமனைக்கண்டு............ ..........*
காலனைத்துரத்தியென்னைக்காத்ததேயாகிலிந்த...... ..... ... ..........*
நீலகண்டையர்நீதானிக்ஷயஞ்சரணமையா............ ... ....... .......*

வசனம்,

சரணஞ்சரணம் - சுவாமிக்குப் பக்தனான குண்டோதர மூர்த்தியே நானேஎமனுக்குமிகவும் பயந்திருக்கிறேன் நீ எமனைத்துரத்தி என்னைக் காத்ததேயாமாகில் இந்த நீலகண்டையர் நீர்தான் சுவாமி.

குண்டோதரன்-இராஜனுக்குச் சொல்-விருத்தம்,
எவராலுமாகாதிந்தயீசனைக்கட்டுதற்கு.......................*
அவனியையாண்டத்தாலேஆங்காரமுண்டோயேமா..........*
சிவனுக்குமன்பனானசெல்வனைடெதிர்க்கலாமோ..........*
இவடத்தில்நிற்கவேண்டாமிவடம்விட்டப்பாற்போடா.......*

வசனம்,

அடாவாடாயேமா எவராலுமாகாதே இந்தயீசனைக்கட்டுதற்கு-உன்னாலேயாகுதா, இவன் சிவனுக்கு அன்பனானசெல்வனச்சுதே - இவனுடனேஎதிர்க்கலாமோ உனக்கென்னபுத்தியில்லையா இவ்விடம்விட்டு அப்புறம் நடந்திடுயேமா,

இராஜன்-குண்டோதரனுக்குச்சொல்-விருத்தம்,
என்னைநீநடந்திடென்று யியம்பற்குநீதானாரு.............*
உன்னைநான்கண்டுபோகவொக்குமோபளாபளாதான்.......*
இந்திமிஷத்திலிந்தயீசனையுனைமார்க்கண்டன்..............*
றன்னையுங்கட்டாவிட்டாற்சண்டனுமல்லத்தானே....... *

வசனம்,

பளாபளா அடாகுண்டோதரா- என்னைப்போகச்சொல்ல நீயார் அந்தயீசன்முனார் எவனானாலுமெனக்கென்னஉன்னைப்பார்த்தால் என்னெதிர்ண்டுபயல்போற் காணுதுநீசொல்லலாவதேது நான்போகலாவதேது இதோ ஒருநிமைக்குள்ளே உன்னையும்அந்தச்சிவனையும் இந்தப்பயலேயும் எனதுபாசத்தாலேகட்டி சூலத்தினாலேகுத்திக் கொண்டுபோகா விட்டால்நான் சண்டனல்லடா குண்டோதரா,

குண்டோதரனுக்கும்- இராஜனுக்கும்-தர்க்கம் -கண்ணிகள்,
இ-ம்-புந்நாகவராளி-ஆதிதாயம்,

குண்டோதரன்-சொல்லல்,
குத்திக்கொண்டுபோகமெத்தக்கொழுத்தவனோகாலா-நீ ...*
கோஷ்டமிட்டோடிட்வேயிப்போகுத்துவேன்பார்சூலால்*,

இராஜன் -சொல்லல்,
பித்தனிடஞ்சேர்ந்திருந்தபேப்பயலேவாடா-வுனைப்.... ...*
பிடித்துக்கட்டிக்கொண்டுபோவேன்பிழைத்தோடிநீபோடா,

குண்டோதரன்-சொல்லல்,
கட்டிக்கொண்டுபோவேனென்றுகதைதனைச்சொல்லலாமோ-சபே *
காடேதேடிப்போய்விறகுகட்டவுன்னாலாமோ.......................*

கேவலங்களாய்த்தள்ளிவிட்டார்களே...................... *
இடுவிடெனப்புரண்டலைகிருனேயைபோ...... ....... *
மாவலமையுடையவன்வீழ்ந்திடும்..................... ...*
வகையிதென்றறிகிலன்சிவசங்கரா.......... ............ *

வசனம்,

அரகராவென்கர்த்தனே இந்தயேமன் ஆருக்குவென்ன குற்றஞ்செ ய்திஇப்படிக்காளுனே நான்யாதொன்றுமறிகிலேன்சுவாமி;

பூமிதேவி-சொல்-விருத்தம்-இ-ம்-கெண்டா

இதுவென்னவதிசயம்நானெப்பவுங்கண்டதில்லே............*
இதுவிதிவசமோயிந்தயமனுமண்ணில்வீழ ...... ......*
இதனாலேயிறப்புமிஞ்சியிறப்பதில்லாமற்போச்சு... ... ...*
இதுயேனுசங்கராநானெப்படிசுமப்பேனையா.............*

வசனம்,

ஆ-ஆ-இதென்ன அதிசயம் இதென்னகாரணம் இப்படிக்குப்பூமி யில் எமன்விழவும் இறப்பில்லாமல்பிறப்பேமிஞ்சவும் அடியாளுக்குப் பாரமாகவுமாச்சுது சங்கரா எப்படிச்சுமப்பது,

பூமிதேவி-புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-கண்டா-ஆதிதாளம்;

என்னவிந்தையோமண்ணிலேமன்விழவந்தது.. .........*
யேதோவறிகிலேனே... ... ... (தெய்வமே)
சக்கராவுன்செயலோ-தாசாவுந்தன்செயலோ......... .........*
தருமனிப்படியானான் .. ... .............. ...... ......(சிவனே)
பொங்கியிருந்தயென்னைப்புலம்பவோவைத்தீரையா ... ...*
போதுஞ்சுமையெனக்குச்................ ...... ... ...(சங்கரா)
சண்டன்றனையிப்படிதனையில்விழவுதைத்து...............*
தள்ளிவிட்டவராரோ... ...... ...........................(தெய்வமே)
மொண்டுக்குடையோனல்லமுத்திக்குடையோனுச்சே.......*
மூடியவடித்தாராமோ... .................. .............(சிவனே)
ஆனாலுமெனக்கேத்தபாரமிகவுமிப்போ...... ........*
அடியாள்செய்குற்றமுண்டோ... .......................(சங்கரா)
எமனையிப்படிக்கிந்தயேமனைத்தள்ளியென்னை............*
யேகமுற்றிடச்செய்தீர் ................ ... .........(சிவனே)

நாரதர்வருகிற-பொது-விருத்தம்,

உலகெலாமதிசயிக்கவுமையவள்மனங்கலங்க......... .......*
பலகலையுடுத்தும்பூமிப்பைங்கொடிவையமீதில்... .........*
கலகலென்றோசையிட்டுக்கதறிடுஞ்சத்தங்கேட்டு... ........*
நல்மிலமறியவேண்டிநாரதர்வருகின்றாரே............. ......*

கட்டியக்காரன்-சொல்-வசனம்,

அகோதெப்படியென்றால் இப்படியாக பூமிதேவியானவள் வைய மீதில்நின்று புலம்புகின்ற சத்தத்தைக்கேட்டு வீணையில்வல்லவரான நாரதமகாமுனிவர் அவ்விடம்வருகிற விதங்காண்க,

நாரதர்வருகிற-தரு-இ-ம்-தேசிகத்தோடி - ஆதிதாளம்.

பல்லவி.

நாரதமாமுனிவந்தாரே-தப-நாரதமாமுனிவந்தாரே.........*

அநுபல்லவி,

பாரிற்புகழும்பிரமன் பரிவுடனளித்திடும்.. ...(நாரத)

சரணங்கள்,

பாதக்குறடிலங்கப்-பரிவாய்ச்சடைதுலங்க....................*
சீதமதி குலுங்கத்-தேவர்கண்டுகலங்க ........ ......(நாரத)
திருவீணையைப்பிடித்து-திகழ்மந்திரம்படித்து...... ......*
பொருமைக்காவியுடுத்து-பூமிமாதை படுத்து......(நாரத)
தண்டுகோத்திற் கொண்டு சமயமந்திரமுண்டு...............*
உம்பராேருந்தொண்டு-வுவந்துசெய்திடக்கண்டு...(நாரத)

நாரதர்-பூமிதேவிக்குச்சொல்-விருத்தம்,

வையகமீதில்வந்தமதியுள்ளபூமிமாதே..... ......... ......*
ஐபமிட்டலறியின்றுவருமையாய்ப்புலம்புகின்ற.............*
தையலேநீயெனக்குச்சகலமுந்தெரியச்சொன்னால்....... ...*
ஐயமுந்தீர்வதாகஆலோசனைசொல்வேனே...... ..........*

வசனம்,

வாராய்பூமிமாதே ஒருகாலத்திலுமில்லாமல் நீவையகமீதில் வந்து மிகவும்வருத்தமாய்ப் புலம்புவதேது நீபுலம்பிய சத்தங்கேட்டு நானோடி வந்தேன் அப்படிப்பட்ட அபாயமுனக்கு வரவேண்டிய தென்ன இதை யென்னுடனே சொன்னால் அந்தத்துயரம் தீருபடியானவுபாயஞ் சொல்லுகிறேன் பூமிமாதே,

பூமிதேவிநாரதருக்குச்சொல் விருத்தம்,

முனிவர்கள்வணங்கும்வேதமுனியேநாரதரோகேளீர்.........*
அனியாயமாகயேமனலறியேமண்ணில்வீழ..................*
இனியாருமிறப்பதில்லாதிருப்பதாற்பூமிபாரம்...............*
குனியாதபாரம்வீணாய்க் கொள்ளவுங்காலமாச்சே............*

வசனம்.

கேளும் நாரதபகவானேஎமனையாரோவுஙதத்துப்பூமியிற்றள்ளிவிட்டார்கள் அவன்பூமியில்விழவே இறப்பில்லாமல் பிறப்பதிகமாயிற்றுஅதனாலே பூமிக்குப்பளுவாகி எக்தோள்களிரண்டும் விட்டுப்போகலாயிற்று ஆகையால் நானென்ன செய்வது பாரம்பொறுக்கமாட்டாமல் வருத்தப்படுகிறேன்நாரதரே,

நாரதர்- பூமிதேவிக்குச்சொல் விருத்தம்,

நல்லதுபூமிதேவி நாதனைநினைத்துயிந்த..................*
எல்லையில்புலம்பிநின்று லெப்படியயபயந்தீரும்............*
சொல்லியபடிநீயந்தத்துளபத்தோன்றனைவணங்கி ...... *
மெல்லெனப்புலம்பிநின்றால் விமலர்க்குச்சொல்லிக்காப்பார்*

வசனம்.

கேளும் பூமிமாதே இதற்குயீசனை நொந்தினால் எப்படி எமன்ஈசனுக்குப்பொல்லாதநியாயஞ்செய்திருக்கிறான் ஆகையால் ஈசன்பேரிற்குற்றஞ்சொல்லவேண்டியதில்லை அவனைநொந்துக்கொள்வதிலும் பலனில்லை இப்பவும் ஒருபாயம் அவர்மைத்துனராகிய விஷ்ணுவைவருந்தினால் அவரீசனுக்குச்சொல்லி எமனெயெழுப்பி உன்னைக்காப்பார்நான் போய்வருகிறேன் சிலவுதருவாயம்மணி,

பூமிதேவி நாரதருக்குச்சொல்வசனம்,

அப்படியே போய்வாரும் நாரதமகாமுனிவரே-

பூமிதேவிசொல் விருத்தம்,

புத்தியில்மிகுத்துச்சீராய்ப்புவிதனையாண்டிருந்த.........*
உத்தமனானயெம னுறங்கவும் நீதியுண்டோ................*
மத்தினாற்கடைந்தவெண்ணெய் வாயனேயுந்தனுக்குக் ... *
குற்றம்மேதாகிச்செய்து கொடியபாதகனானான்.........*

வசனம்,

அரிகரி வைகுந்தவாசா வெண்ணெயுண்டவாயனே மகா நீதியுடனே தென்றிசையாண்டிருந்தயேமன் உமக்கேதாகிலுங் குற்றத்தைச் செய்து

இப்படிக்காணுனே மாயவனே,

பூமிதேவிபுலம்பல்-கண்ணிகள்-இ-ம்-நவரோஸ்அடதாளம்,

ஐயனேவைகுந்தவாசா யாருடன்சொல்லுவேனிதை.........(திருமாலே)
ஆருடன்சொல்லினுமிதை ஆற்றுவாரோவென்றுயர்...........(கரிமாலே)
வையகமளந்தமாலே மாயவனேநின்செயலோ......... ...(திருமாலே)
மாயவாவுன்செயலாகில் மர்மமாயிருந்திடாதே... .......... (கரிமாலே)
பையவேநமனைக்கண்ணிற் பார்க்கவேபயமாகுதே... ...... (திருமாலே)
பார்க்கவோவெனக்குமிந்தப் பாதகத்தைவிதித்திட்டாய் ...(கரிமாலே)
தூய்யனேகிருபைவைத்தென் துயரந்தீர்த்திரக்ஷியுந்...... (திருமாலே)
துயரந்தீர்க்குமாயனேதோற்றுவாயெந்தனுக்கிப்போ...... (கரிமாலே)

பொது-விருத்தம்,

கஞ்சனைவதைத்தவாமன்காசாம்புமேனிநாமன்.... ........ ... ......*
வஞ்சராவணனைமாய்த்தவாகுங்கோதண்டபாணி........ ......*
அஞ்சிடாபூமிதேவியலறிடுஞ்சத்தங்கேட்டுப்....... ..........*
பஞ்சவர்தன்னைக்காத்தபாரளந்தோரும்வந்தார்... ........... ...*

கட்டியக்காரன்- சொல்-வசனம்.

அகோதெப்படியென்றால் பூமிதேவிமகா விஷ்ணுவை நோக்கிப் புலம்பிக்கொண்டிருக்கும்போது வைகுந்தத்தை விட்டுக்கோபால கிருஷ்ணர்வருகிற விதங்காண்க,

விஷ்ணு வருகிற-தரு-இ ம்-அசாவேரி-ஆதிதாளம்,

பல்லவி.

அலையிற்பணியணிகொள்சயனித்தஜெககர்த்தர்... ... ......*
ஹரிநாராயணர்வந்தார்- கர்த்தர்...............*

அநுபல்லவி,

கலையுற்றமதிவைத்த சடிலத்தர்சொலவிட்ட.............. *
கனமிருந்தவிலாசமாமொழி.......................*
மனதுகொண்டு விநோதமாகவே.... ......... (அலையிற்)

சரணம்.

சலசத்தினொளிபெற்ற திருவத்திதன்பச்சை............... *
திலர்தம்நுதலிற்......... ...... தரித்து - இந்த
சரிவச்ரமிட்டிழைத்த அழகுற்றபுஜகிரீதி.......... ........*
தடந்தோளிலே.................பணிந்து - நல்ல
தவளக்குடைகவிக்க - கருடக்கொடிபறக்க..................*

தவில்பம்பையொடுசங்க - மதிருஞ்சல்லரிதுங்கம்..........*
சதிர்பூமியதைநாடி - மதிகடையூரானைத்தேடி ... (அலையிற்)

பூமிதேவி விஷ்ணுவுக்குச்சொல் கவி,

அடியவரைக்காக்குமையனேசரணம்..............*
படிதனையளந்த பரந்தாமாசரணம்............ *
வடிவுறுமிலட்சுமி மருவுசரணம்............. *
முடிமன்னர்வணங்கு மூர்த்தியேசரணம்...... *

விஷ்ணு- பூமிதேவிக்குச் சொல் விருத்தம்.

என்னகாரணத்தினாலே யின்றுநீயிப்பேர்க்கொத்த......... .............*
துன்பத்திலாழ்ந்துமிக்கத்துயரமாய்க்கண்ணீர்சோர... ..............*
கன்னியிற்பட்டபக்ஷிகலங்கிடும்வாறுபோல........................ .........*
தன்னிபவிதத்தையென்முன்சொல்லுவாய்பூமிமாதே... ...............*

வசனம்,

வாராய்பூமிமாதே நீயேதுகாரணத்தினாலே இப்பேர்ப்பட்ட சஞ்சலமுற்று கன்னிக்குள்ளகப்பட்ட பக்ஷிபோலபரதவித்துக் கண்ணீர்சோர புலம்பியழுகிறாய் சொல்லுவாய்பூமிமாதே,

பூமிதேவி-விஷ்ணுவுக்குச் சொல்-விருத்தம்,

ஐயனேயென்னசெய்வேனழகியசங்குசக்ர.............*
கையனேயெமன்யாரோகலங்கிடவுதைத்துவிட்டார் .. ... *
ஐயனேபூமிமீதிற்சுருண்டுமேவிழுந்தான்பாரம்........*
ஐயையோசுமைதாளாமலழுகிறேன்காத்திடீரோ...........*

வசனம்,

கேளாய்சங்குசக்கரகையனே எமனையாரோ பூமியிலுதைத்துத்தள்ளி விட்டார் அவன்துடிதுடித்து அரண்டுபிறண்டுகிடக்கிறதினால் சுமைதாளாமல் இப்படிப் பரதவிக்கிறேன் என்னைக்காக்க வேணும் வைகுந்தவாசரே,

விஷ்ணு-பூமிதேவிக்குச்- சொல்.விருத்தம்,

தவமிருகண்டர்க்குஞ்சுதனிலாதத்தாலே......................*
சங்கரனைநோக்கியவன்றவம்புரிந்தான்... ...... ......*
அவருக்குவந்துவயதுபதினாறுப்பிள்ளை.................. ...*
யளித்திடவாயுளுமுடிந்ததெனப்பிடிக்க....................*
விவரமுடனமனுஞ்சென்றுன்பாலன்றனும்......... .....*
வீசனைப்பின்பற்றிடவும்பாசம்வீச.................. ...*

சிவனுங்கோபித்துதைக்கயேமன்விழுந்த.................. ... *
செபலிருநீசெல்லவர்பால்நானும்வாரேன்.............*

வசனம்,

கேளாய்பூமிமாதே மிருகண்டன் பிள்ளையில்லாமல்சங்கரனை நோக்கித்தவம்புரிந்துபதினாறுவயதுள்ளஒருபுத்திரவரத்தைப்பெற்றான் அப்புத்திரனுக்கு வயதாகிறதென்று சங்கரனைத்துதித் திருக்குஞ்சமயத்தில் எமன்புறப்பட்டு பிடிக்கச் செல்லுகையில் அந்தமார்க்கண்டன் அச்சிவன்பின்போயகட்டிக்கொள்ளவே பாசம்இருவர்மீதிலும் விசவேசிவனுக்குக்கோபம்பிறந்து எமனையுதைத்தார் அவன்பூமியில் விழுந்தான் ஆகையால் நீஅந்தச்சிவனிடம் போய்ச்சேருநானும்வருகிறேன் பூமிமாதே-(அப்படிபேசெய்கிறேன்வைகுந்தபதியே.)

பூமிதேவிமார்க்கண்டனுக்குச்சொல் விருத்தம்,

அப்பனேமார்க்கண்டாநீ அறிவுள்ளமைந்தனுரே.........*
இப்படியேமன்வீழ்ந்து மிருப்பதுசரிதானோதான்.........*
எப்படிப்பாரந்தாங்கி யேங்குவேன்சங்கரர்க்கு......... ...*
நற்படியாகச்சொல்லிநமனைநீயெழுப்புவாயே......... ...*

வசனம்.

அப்பா மார்க்கண்டசெல்வமே இப்படிக்கு எமன்வெகுநாளாய்ப்பூமியில்விழுந்திருப்பது உனக்குச்சரிதானோஇந்தனாலேபிறப்பேயொழியஇறப்பில்லாமற்போச்சுதேநானெத்தனைநாளைக்குப்பளுவைச்சுமந்துக்கொண்டு வருத்தப்பட்டிருப்பேன் எப்படியாகிலும் ஈசருக்குச்சொல்லிஎமனை யெழுப்பி என்பாரந்தீர்க்கவேணுமப்பா மார்க்கண்டசெல்வமே.

மார்க்கண்டன்-பூமிதேவிக்குச்சொல்விருத்தம்;

தாயேய்ன்வாய்மொழிக்குத்தண்டயுண்டோவடியேன்மெய்யே... *
தாயேயிச்சண்டன்செய்த சதியதுதெரிந்திருப்பாய்....... ... ...*
தாயேநானெப்படிக்குச் சங்கரர்தனக்குச்சொல்வேன்... ... ...*
தாயேயிப்பூதநாதன் றன்னைநீவணங்குவாயே......... ......... ...*

வசனம்,

கேளுந்தாயே இந்தயெமன்விழுந்துவெகுநாளாயிற்று நீயும்வெகுநாளாய்தான்வருத்தப்படுகிறாய் இந்த எமன்செய் திருக்கப்பட்டது மகாபொல்லாதநியாயம் நான்முந்தியெப்புடி சொல்லுவேன் நீஈசனை மிகவும் வருந்திநின்றால் நானுஞ்சொல்வி எமனையெழுப்பிவிடுகிறேனம்மா,

பூமிதேவிசொல்நவி.

நேசனேசரணம்வில் வாசனேசரணங்கை...... ...... *
லாசனேசரண மென்னீசனேசரணம்......... ..........*
பூமிதேவிசொல் புலம்பல் தரு, இ-ம்-நீலாம்புரி-ஆதிதாளம்;
மார்க்கண்டர்க்காகவே மறலிமேற்கோபித்து............ ... ....*
மண்மீதில்விழச்செய்தீர்.................... ...... (சிவனே)
ஏர்க்காதுயென்னை நீரிப்படிபார்ப்பது................ ...... *
பேழைக்கிதங்குமெந்தன்............................. (சிவனே)
சுரும்குருவிக்கன்று காக்ஷிகொடுத்ததுபோல்... .. ...... ...*
கர்த்தனேயெனக்காரும்...... ... ... ... ... (சிவனே)
பெருங்கிடாமீதேறும்யெமனிப்படிசெய்தாற் ... ... *
பெண்ணாள்நானென்னசெய்வேன்... ... ......... ......(சிவனே)
பெண்ணுக்கிதங்கியபேதமைநீராமே................ ...... .. *
பேசாதிருப்பதென்ன... ............... .............. (சிவனே)
மண்ணுக்குள்விழுந்திடுமறலியையெழுப்பியென்......... ...*
வலதுயரிலைத்தீர்ப்பீர்............... ...... ............(சிவனே)

பூமிதேவிசொல்விருத்தம்,

பூமியையச்சுமக்கமாட்டேன் புனிதனேசரணமையா... ... *
காமனையெரித்தக்கண்ணா கடவுளேதயவுவைத்து...............*
யேமனையெழுப்புமையா யீசனேகயிலைவாசா... ...... ...*
தாமிஷஞ்செய்தால்பாரந் தாங்கவுமாட்டேனையா... ......*

வசனம்.

அர்க்காகர்மனையெரித்தகண்ணா மார்க்கண்டசகாயாயென்று தோள்கள்இரண்டும் விட்டுப்போகுதுயின்னம் தாமிஷஞ்செய்தால் இந்தபூமியைச்சுமக்கஎன்னாலேஆகிறதில்லை சீக்கிரத்திற்குயெமனையெழுப்பியென்பாரந் தீருங்கர்த்தனே,

சிவன் பூமிதேவிக்குச்சொல்விருத்தம்,

இரங்கிடுப்பூமிமாதே யின்னமும்வலுமைதாரோன்.........*
தரங்கமேசூழும்பாரிற்சண்டனேவேண்டாங்கண்டாய் ...*
வரங்களுமதிகத்தாரேன் மனஞ்சலியாதிருந்து.. ... ...*
பெருங்கருணைக்ளைப்பெற்றுபெருக்கமாய்வாழ்ந்திடாவே *

வசனம்,

வாராய்பூமிமாதே யிந்தசண்டனேவுலகத்திலாகாது வுனக்குவேணு

யென்றால் இந்தப்பூமியைச்சமக்க இன்னம் வலுமையைக்கொடுக்கிறேன் மனம் சலியாதிருமம்மா பூமிமாதே,

பூமிதேவிசிவனுக்குச்சொல்விருத்தம்,

தோன்றாதபுத்தியாலேதுரிதமாயோடிவந்து.......... ......*
வீணாகவுதையும்பட்டு வெட்கமுங்கெட்டான்தேவா.........*
வாணுமென்பிடிடத்தைவருகாதுயினிமேற்பாரீர்... ......*
காணாகண்டாப்போலேகாலனையெழுப்பிடீரோ..... ......*

வசனம்,

சுவாமிசுவாமிதேவரீர்சொல்லவந்தது மெய்பேயிந்தயேமனுக்காக வல்லவோநான்வந்தது இவ்விடில் நான்வந்துவும்மை வருத்தப்படுத்த வேண்டியகாரணமில்லையே இப்பவும் என்பாரம் நான் தீர்த்துக்கொள்ள அசரியாயிராது அநீதியல்ல,தர்மமுமல்ல, ஒருவனைப்பற்றி ஓசகதி றொன்பது சாஸ்திரம்சுவாமிக்கு இந்த சண்டன் என்னகுற்றஞ்செய்திரு ந்தபோதிலும் அடியாளைப்பற்றி மனம்பொறுத்து யேமனை யெழுப்பி என்னை ரக்ஷியுஞ் சுவாமி,

மகாவிஷ்ணுசிவனுக்குச்சொல் விருத்தம்,

மான்மழுவுங்கொண்டமையேசனேபூமாதேவி.............. ........*
தானுமேநெடுநாளாகச்சண்டன்பாரத்தைத்தாக்கி......... ......*
யேனமுமிருள்நமக்குயிழிவர்குமவனேயிப்போ... ...... ... ......*
காணமாயெழுப்பிநல்லகட்டளையிட்டனுப்பீர்... ........ .........*

வசனம்,

கேளுங்கயிலாசபதி இந்தப் பூமிதேவியானவள் யேமன்பாரவைத் தாங்காமல் வருத்தப்படுகிறாள் நமக்குப் பழிப்பாகும் அவனையெழுப்பி அவனுக்கு நல்லபுத்திசொல்லி அனுப்பி இந்தப்பூமிதேவியினுடைய பா ரத்தையுந்தீர்ப்பீர்கயிலாசபதி,

சிவன் மார்க்கண்டனுக்குச்சொல்விருத்தம்.

அப்பனேமார்க்கண்டாகேள் அருமையாய்ப்பூமாதேவி ... *
செப்பினமொழிகேட்டாயா செல்வனேவுந்தனுக்கு... ...*
ஒப்பிதமாயிருந்தா லுயிர்வதைசெய்யுகின்ற... ... ... ...*
தப்பிதநமனெழுந்துதான்வரச்செய்குவேனே. ..... ......*

வசனம்,

வாராயப்பா மார்க்கண்டா இந்தபூமிதேவிவந்து யின்னேரம் சொ ன்னசொல்லும், விஷ்ணுவானவர் சொன்னதும் கேட்டாயா இனிவுனக்கு

ச் சரியாயிருந் துவுத்திரவுகொடுத்தால் எமனை யெழுப்பி விடுகிறேனப்
பா மார்க்கண்டா,

மார்க்கண்டன் சிவனுக்குச்சொல்விருத்தம்,

அத்திமாமுகனைப்பெற்ற அப்பனேதேவருக்கு............*
சித்தமெப்படியோபூமாதேவியாளோடிவந்து............*
மெத்தவும்வருந்துகின்றாள்மெய்யனேயெமன்செய்த......*
குற்றத்தையெண்ணவேண்டாங்கோதைக்காயெழுப்பிடீரோ*

வசனம்,

சுவாமி அந்தவெமனைப்பாராவிட்டாலும் இந்த பூமாதேவியைப்பார்
க்கவேணும் மேலும் பெண்சீவனுகையால் எமனை யெழுப்பி இந்தம்மா
ளுடைய பாரந் தீர்க்கவேணும் கர்த்தனே அரகரா அரகரா,

சிவன் எமனுக்குச்சொல்கவி.

செட்டபுத்திநினைத்தவனே கிடாவிலேறிவந்தவனே.........*
துஷ்டபுத்தியைவிட்டுவிட்டு சுகமாயெழுந்துவருவாயே...*

எமனெழுந்துசிவனைத்தோத்திரஞ்செய்கிற-தரு-
இ-ம்-புந்நாகவராளி-அடதாளம்,

பல்லவி,

ஆண்டுகொண்டருளே - உன்திருவடி............*
வேண்டிநின்றேனே..............................*

அநுபல்லவி.

தாண்டவப்பேரருளண்டவனும்நீ........................*
தோண்டவருமதி - பூண்டநாயகர்............... (ஆண்டு)

சரணங்கள்,

ஆத்திசூடிய - - - - நேத்திரசங்கரர் - - - *
போற்றினேனெனைக் - - காத்தருளுமினி - - - - (ஆண்டு)
பூதநாதனே - - - - பேதுசெய்கின்னேன் - - *
மீதிலருள்புரி - - - - ஆதிமூலமே - - - - - (ஆண்டு)
நாகபூஷண - - - - லோகயீசனே - - - *
தோகையையிடப் - - - பாகம்வைத்தவா - - - - (ஆண்டு)

எமன்- சிவனுக்குச்சொல்கொச்சகம்,

சத்தியைச்சுமந்திருக்குஞ் சங்கரனே நானுமிப்போ.........*
புத்தியில்லாச்செய்குற்றம்பொறுத்தருளுமெய்ப்பொருளே*

ஏத்தேசகாலமும்போலிருந்தரசாளுவதற்குக்...............*
கர்த்தனேகிர்பைபுரிகயிலாசவாசவனே...... ..............*

வசனம்

அரகரமயேசா அமிர்தகண்டேசா திருக்கடையூர்நாதா செயமார்க்கண்டர்க்குபகாரா அடியேன்பத்தியில்லாமற்செய்த குற்றம் பொறுத்து எப்போதும்போல அரசுக்குச்சிலவுதரவேணுங்கர்த்தனே,

சிவன் எமனுக்குச்சொல்கொச்சகம்,

அண்ணலெனப்பணிந்தவனை யாங்காரங்கொண்டவனே ...*
எண்ணுந்துதிப்போனே யீசனடியாரையினி......... ......*
திண்ணமாய்த்தீண்டாதேதெலதிசைக்கேநீசென்று... ...*
தண்ணுயுன்னுக்கினையை நடத்திக்கொள்வாய்நமனே... ...*

வசனம்,

அடாவடாயேமா உன்னைக்கொஞ்சத்திலெழுப்பப் போகிறதில்லை இந்தப்பூமிதேவிக்காக யெழுப்பினேன் இனிமேல்நீ சிவனடியார்களைதீண்டாமல்உன்அதிகாரப்படிக்குப்புத்தியுண்டாயிருபோய்வருவாய்எமா

பூமிதேவி சிவனுக்குச்சொல்பாணி,

கடையூர்தனிலேயமர்த்திருக்கும் -கயிலைவாசாவிஸ்வாசா ...*
அடியாள்தனக்குமென்னபுத்தி - அருளுமாகரசங்கரனே *

சிவன்பூமிதேவிக்குச்சொல் பாணி,

சங்கரனேயென்றெனைநாடிச் - சரணஞ்செய்தேவருமாதே *
சிங்காரத்துடனீபோயுன் - திருமாளிகைக்குள்வாழ்வாயே *

மார்க்கண்டன்சொல் வசனம்,

அரகரா * * * அரகரா
அரகரா * * * அரகரா
அரகரா * * * அரகரா
அரகரா * * * அரகரா

எமன்-கட்டியக்காரருக்குச்சொல்-விருத்தம்,

ஓரடியெடுத்துமெள்ளவொதுங்கியேகொக்கரிக்கும்... ...*
ஆரடாகட்டியரோநாம்அரசுக்குவந்தோமென்று...... ......*
வீருடனேடியந்தவீரபாகுவுக்குச்சொல்லி............ *
சீருடன்மேளத்தோடுசீக்கிரமழைத்துவாரீர் ... .........*

வசனம்,

ஆரடா அடா காலகட்டியரோ நாம்எப்போதும்போல அரசுக்கு வந்

தோமென்று இந்தஅண்டரண்டமும் அறியும்படி பறையறைவிக்கவே ணும் வீரபாகுவை அழைந்துவாருங்கள்,

கட்டியக்காரன்-வீகபாகுவுக்குச்-சொல்-விருத்தம்,

சாரிபாகச்செல்றதமன் றுனேவந்தாராசுக்கு................*

வீரபாகுவேநீதான் மேளத்தோடுவருவாயே......................*

வீரபாகுவருகிற-தெம்பாங்கு-தரு

செல்விபுளிச்சக் கண்ணி-நல்ல சிங்காரமானதோர்பூனைக்கண்ணி அடி...*

பல்லேயிளிச்சகண்ணி-எந்தன் பக்ஷத்துக்கானதோர்இல்விக்கண்ணி..*

தெந்தினனே-தென்னனே.

குனுமுலச்சியடோ நல்ல-சுண்டுமிகுத்ததலச்சியடோ-சீறு நாரச்சியடோ.என் சித்தத்துக்கான தலச்சியடோ-தெத்தினனே-தென்னனே...... ........*

நாணாக்கழுத்தியடோ-சொரி நாயநடபோலப்புழுத்தவளே.............*

உனாப்பழித்தவளே-மாட்டு-உள்ளங்கால்திண்ணுகொழுத்தவளே......*

தெந்தினனே-தென்னனே,

அஞ்சாதொடப்பக்கட்டை-நல்ல-அபகாசவத்சஒதியங்கட்டை.............*

புஞ்சிபிடித்தகட்டை-உனக்குப்-போங்காலமேதுக்குநாரக்கட்டை ...*

தெந்தினனே-தென்னனே,

கோடுவடிந்தவாயி-உந்தன் -கொங்கையிரண்டும்பதிசாவி...... ..........*

தேடுகிறாயிப்போடி-சும்மாதிகைக்காதே-நீவாபெருவாயி(தெந்தினனே)

சொட்டைவிழுந்தமூக்கி-உந்தன்-தோளுக்கிசைந்தெம்பெரிசாக்கி ...*

கோட்டுமோளமாக்கி எங்கும்-கூச்சவிட்டுதுவறபோக்கி (தெந்தினனே)

வண்ணான்வீட்டுக்கழுதை-நீ-வஞ்சனைசெய்துமப்பொழுதே............*

விண்ணுளயிட்டழுதே-என்னை-விட்டுப்போவதுண்டோயிப்பொழுதே*

தெந்தினனே- தென்னனே,

பொக்கெனக்கல்லாண்டிஉந்தன் புருஷனெங்கேவிட்டுப்போனாண்டி...*

பக்குவமிதுதாண்டிஉன்னைப் பார்த்துப்பொடியவன்போட்டாண்டி..*

தெந்தினனே-தென்னனே.

இதுவும்-வீரபாகுசொல்-தரு,

ஆண்டைகளேயெனது-மிக-வரிதானகுலத்தொழில்கேளாண்டே [பேன்

நீண்டதோர்தடியெடுப்பேன்-அந்திநேரத்தில்வரும்பேயைப்பிடித்தடிப்

வேண்டுவ்விருதுதரிப்பேன்-வெகு-வேடிக்கையாகவே-நடைநடப்பேன்.

மாண்டபிணத்தையெடுப்பேன்-தலை-வகையாகவேயிடங்கொடுப்பேன் *

ஆண்டை.

எங்கும்பறையறைவேன்-மிக்க- யிலகும்தான்மறைமுறைதெரிவேன்...*
சிங்காரபதம்புரிவேன்-கொட்டிப- தட்டிய்கருமறைமுறைதெரிவேன் *
சங்காகநான்றிரிவேன்-எந்தன்-சுற்றத்தார்களுகள்நான்குறையேன்......*
மங்களமெடுத்தெரிவேன் ஆண்டைவகைவகையாகயிடங்கொடுப்பேன்...*

ஆண்டைகளேகேளென்

வீரபாகுசொல்-விருத்தம்,

தம்புரோணடியெனுண்டே தருதுணைக்கதிபா-ஆண்டே... *
தம்புரோணடியென்வீரதோட்டிநான்மேளத்தோடு .... *
தம்புரோனேயழைத்ததேனையாயேமராசே...... ...... ...*
தம்புரோன்சொல்லுஞ்சாமிசொற்படிசெய்குவேனே... ...*

வசனம்.

சாமிசாமி தம்புரேனென்னை யழைத்தகாரியம் அடியேனுக்குச்சொ
ல்லவேணுஞ் சாமிராஜபரமேஸ்வரா,

கட்டியக்காரன்-இராஜனுக்குச்சொல்-பாணி,

சண்டாசரணைத்தேவரீருத்தாரப்படியேமேளமாட்டிக் ....*
கொண்டேவீரபாகிந்தகொலுமுன்வந்தான்மன்னவனே ...*

இராஜன்-கட்டியக்காரனுக்குச்-சொல்-விருத்தம்,

கொலுவினிலெச்சரித்துக்கொண்டுநில்கட்டியரோகேள்......*
வலுமைபாய்ப்பசாசஞ்சூழமசானமதனிலிருக்கும்........*
தலைமைபாம்வீரபாகுதனக்குநான்வந்தேனென்று.........*
சொலவெங்கும்பறையனார்த்து அரிதமாய்வரச்சொல்வீரே *

வசனம்,

ஆரடா அடா கொலுமுன்னேயெச்சரிக்கும் கட்டியக்காரரோ வந்து
வீரபாகுவுக்கு நானெப்போதும்போல அரசுக்குவந்தேனென்றுசொல்
லி இந்த அண்டரண்ட நவகண்டங்களிலு முண்டாகிய எண்பத்து நான்கு
நூறுயிரஞ்சீவராஜ்களும் அறியத்தக்கதாக பறையனாவித்துவரச்சொல்
லுங்களப்பா.

கட்டியக்காரன்-வீரபாகுவுக்குச்சொல்-விருத்தம்,

கொட்டுமேளத்தைமாட்டிக்கொண்டுவந்தவீரபாகு............*
கட்டளைசொல்வேனத்தைக்காதுறக்கேளடாநீ....... ......*
இட்டமாய்க்காலனேதென்றிசையானவந்தானென்று... ...*
பட்டணமெங்குமோடிப்பறையலறவித்துவாராய்......, ...*

வசனம்,

ஆரடா அடா வீரபாகு எப்போதும்போல மூன்றுண்ட யேமன் தென்றிசை யாளவந்தானென்று அண்டரண்ட நவகண்டங்களி லுண்டான எறும்புகடை யெண்பத்துநான்கு நூறுயிரம்சிவராஜிகளும் கேட்டு அதிசயப்படும்படியாய்ப் பறைபறைவித்து அதிசீக்கிரத்தில் வாடாவீரபாகுவே,

வீரபாகு-கட்டியனுக்குச்-சொல்-கவி,

அண்டரூம்கேட்க-அவனியுங்கேட்க ............ ......*
தண்கடலொலிபோற்- சாத்துவேன்பறைதனை................*

தோட்டிபறைகொட்டுகிற-தரு- தெம்பாங்கு,

கேட்டீரோ - கேட்டீரோ - கேளுங்கள் - கேளுங்கள்......*
குலுகுலுகுலு - சில்லுகிட்டாங் ஆங்கடிசில்லாம்...*
மூன்றுண்டிருந்தயெமன் மூத்திபெற்றுவந்தானென்று...*
மூட்டுப்பூச்சிபறியப்பறை போட்டுவரச்சொன்னனே ...*
குலுகுலுகுலு-சில்லுகிட்டாங்-ஆங்கடிசில்லாம்......*
அந்தகனெப்போதும்போல அரசுசெயவந்தானென்று ...*
ஆடுமாடறியப்பறைசாடிவரச்சொன்னனே... ... ......*
குலுகுலுகுலு சில்லுகிட்டாங் ஆங்கடிசில்லாம் *
இல்லாதிருந்தயேமனெழுந்தோடிவந்தானென்று.........*
எறும்புமறியப்பறைவிரும்பிடச்சொன்னனே...... ... ...*
குலுகுலுகுலு சில்லுகிட்டாங் ஆங்கடிசில்லாம் *
ஒப்பாதபிழைசெய்து உதைப்பட்டுவந்தானென்று.......*
ஊராரறியப்பறைகூறிவரச்சொன்னனே ........... ......*
குலுகுலுகுலு சில்லுகிட்டாங்-ஆங்கடிசில்லாம்... ...*

தோட்டிசொல் கவி,

மகராஜராஜே மட்டில்லாப்பறையைச்... ...............*
சகலருமறிய சாத்திவந்தேனே.. ...... .............. *

வசனம்,

சாமி அப்படிக்கேசகலருமறியபறைபறைவித்துவந்தேன்சுவாமி;

கட்டியக்காரன் இராஜனுக்குச்சொல்கவி,

துரைமகபதியேசொன்னசொற்படியே ... ... .........*
பறைபறைவித்துப் பறையனும்வந்தான்.......... .......*

வசனம்,

சரணஞ்சரணம் தென்றிசைக்கதிபனான எமதர்மராஜனே அப்ப

டியேதோட்டி பறையபறைவித்துவந்து நிற்கிறனையா மகாராஜனே;

இராஜன் கட்டியக்காரனுக்குச்சொல்கவி.

நீட்டுயோட்டான - நெடியசேவகரோ........ ............. *

தோட்டியைப்போகச் சொல்லிடுவீரோ......................*

கட்டியக்காரன் வீரபாகுவுக்குச்சொல் கவி.

பணிந்திடும்வீரபாகுவேகேளாய் .. ...... .................*

துணிந்திடுஞ்சுடலைதனக்குநீநடவாய்.........................*

வசனம்,

ஆடடா அடாவீரபாகுவேமகாராஜன் உன்னைச்சுடலைக்குப்போகும் படியாய்ச்சிலவுகொடுத்தார் போய்வாடா வீரபாகுவே,

எமதர்ம்மராஜன்-கொலுவிலிருந்துகடவுளைத்துதிசெய்கிற

விருத்தம்,

தர்ம்மமேதர்ம்மமிந்த தாரணிதழைக்கவேணும்... ... ...*

தர்ம்மமும்மாரிபெய்து சதாகாலம்வாழ்கவேணும்........ *

தர்ம்மமாயெனதுசெங்கோல்தாழ்வில்லாதிருக்கவேணும் *

தர்ம்மமேபெருகவேணுஞ் சங்கராபோற்றிபோற்றி... ...*



உ

கடவுள் துணை.



# மங்களம்.

விருத்தம்.

கதியருந்தேவாதிதேவருக்கும்... ...........................*

கலைமகட்குமிருகண்டருக்குங்கத்தை..................*

விதியாகக்கார்க்குஞானச்சதிர்க்கும்......... .........*

விளங்குமார்க்கண்டருக்குமேன்மையான...... ......*

மதியாருமாண்டிநாட்டாருக்கும்......... ...............*

வழுத்துநரசிம்மல்தாயக்கருக்கும்.......................*

திதியாகவெந்நாளுந்தழைத்துவாழ்க...........................*

நிலைமையுடன்மங்களமும்நிகழ்த்துவோமே...... ... ...*



தரு-௩-ம்-ஆனந்தபைரவி-ஆதிதாளம்,

பல்லவி,

மங்களம்-ஜெய-மங்களம்-சுப-மங்களம்-மங்களம்... *

அநுபல்லவி,

மங்களம்விநாயகர்க்கும்-வாழும்வேலவர்க்கும்..............*
வானூர்கதிர்மதிக்கும்வளஞ்சேர்கலைமகட்கும்......(மங்களம்)

சரணங்கள்,

சந்திரசேகரருக்குஞ்சத்திபராபரைக்கும்...................*
உந்திபூத்தவனுக்கும்-ஒளிருமிலட்சுமிக்கும்...............*
ஓங்குமாமறைபுத்தவனுக்கும்.........................*
பாங்கினைச்சேரிந்திரனுக்கும்.....................(மங்களம்)
ஆசைதனைவெறுத்தஅளவில்லாமுனிவர்க்கும்...............*
ஓசைமிகவெங்கும்-ஓங்குமிருகண்டர்க்கும்...................*
ஒப்பிலர்ஞானச்சதிராட்கும்...........................*
பொற்பார்ந்திடுமார்க்கண்டர்க்கும்..............(மங்களம்)
மலைமன்னன்குலத்துற்றமாயாண்டிநட்டாருக்கும்.........*
நலம்நிலைமையுடைய நரசிம்மல்நாய்க்கருக்கும்.............*
நன்மையாய்வாசித்தவருக்கும்..............................*
செம்மையாகக்கேட்டவருக்கும்....................(மங்களம்)

வாழி-விருத்தம்,

சந்திரசூரியர்கள்சீர்மறையும்வாழி..........................*
சகலதேவர்கள்வாழிதபந்தோர்வாழி..........................*
மந்திரமாமார்க்கண்டவிலாசம்வாழி..........................*
மலையரசன்குலமென்றுந்தழைத்துவாழி....................*
வித்தைசேரொருமைவெட்டிநகரும்வாழி....................*
மெய்யன்மாயாண்டிநாட்டானும்வாழி......................*
சுத்தநரசிம்மல்நாயகனும்வாழி.............................*
துலங்குகல்விச்சமுத்ரவச்சுக்கூடம்வாழி....................*

மார்க்கண்டேயர்விலாசம் - முற்றுப்பெற்றது.

